# சங்கரரும் வைணவமும்

## பொருளடக்கம்


1. ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா? 1—20

[விஶ்வாவஸு-ஞு கார்த்திகை-மீ ஸுதர்சனத்தில்—விஶ்வாவஸு விகடன் தீபாவளி மலரில் பாலாதாசன் எழுதிய கட்டுரையை மறுத்து எழுதியது]

2. அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்விகள் 21—36

[பராபவ-ஞு வைகாசி-மீ ஸுதர்சனத்தில்—கலைமகளிலும், தினமணி சுடரிலும் வி. கோபாலன் எழுதிய கட்டுரையை மறுத்து எழுதியது]

3. ஷண்மத ஸ்தாபன சர்ச்சை 2+116=118

[ப்ரஹ்மஶ்ரீ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரி (1. போகாம்பாள்தெரு,டி-நகர்.சென்னை-17)நமக்கு விடுத்த 22-கேள்விகளுக்கு பதிலும், நமது 9-கேள்விகளுக்கு சாஸ்திரியின் பதிலைப்பற்றிய நமது விமர்ஶமும் அடங்கிய ஷண்மத ஸ்தாபந சர்ச்சை என்னும் நூலும் (116 பக்கம்) அதற்கு அறிமுகமாயமைந்த இரு பக்கங்களும், ஆக 118 பக்கங்கள் கொண்டதாய் ஸாதாரண-ஞு ஆனி, மார்கழி, தை-மீ ஸுதர்சனங்களில் வெளிவந்ததான நூல்]

இந்நூலின் அநுபந்தம—1

[நடுநிலையாளர்களின் தீர்ப்பு:- ஆரோக்யாஶ்ரமத்தலைவர் ஸ்வாமி வேங்கடேஶ்வராநந்தர், ஶ்ரீ T. U. K. ஜகதீச சர்மா, ஶ்ரீ K. A. தேவராஜன், ஶ்ரீ B. R. புருஷோத்தம நாயுடு, ஶ்ரீ T. S. ஸுந்தரராஜன் ஆகியோரின் மதிப்புரைகள்.]

அநுபந்தம்—2

[' சங்கரரும் ஷண்மதமும் ' நூலும் நடுநிலையாளர் கடமையும்] 13—16

[இதற்குமேல் வரஹூர் சாஸ்திரியாலோ, வேறு சிலராலோ இது விஷயமாக எழுதப்படுமானால் அவை பற்றிய விமர்ஶங்களும் அநுபந்தங்களாக இணைக்கப்பட்டு இலவசமாக வினியோகிக்கப்படும்.]


—*—

ஸ்ரீமதே ராமானுஜாய நம:



# ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா?

[விஶ்வாவஸு-ஸூ கார்த்திகை-ஸ்ரீஸுதர்சனத்தில் வெளிவந்தகட்டுரை]

[ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் M. A. B. L., அட்வகேட்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஶனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.]

வருடாவருடம் தீபாவளியின்போது வெளிவரும் தீபாவளி மலர்களில வைஷ்ணவத்தைத் தாழ்த்தியும், வைஷ்ணவர்களின் மனத்தைப் புண்படுத்தியும் கட்டுரைகளை வெளியிடுவதே நம்நாட்டு சைவாத்வைதிகளால் நடத்தப் பெறும் பொதுஜனப் பத்திரிகைகளின் வழக்கமாகிவிட்டது. அவ்வழக்கப்படி ஆனந்தவிகடன் விஶ்வாவஸு வருட தீபாவளிமலரில் "வைஷ்ணவம" என்னும் கட்டுரை வெளியிடப் பட்டுள்ளது. இதையெழுதியவர் "பாலாதாசன்" என்று தனக்குப் புனைபெயரிட்டுக் கொண்டிருப்பதிலிருந்தும், இவர் எழுதியிருக்கும் விஷயங்களிலிருந்தும் இவர் ஓர் சைவாத்வைதி யென்றும் வைஷ்ணவ மதம் பற்றி முறையாக ஆராய்ச்சி செய்யாதவரென்றும் விளங்குகிறது. நியாயவுணர்ச்சியுள்ள பத்திரிகையாயிருந்தால், "வைஷ்ணவம்" என்னும் தலைப்பில் கட்டுரை வெளியிட நினைத்தால், அதை வைஷ்ணவத்தில் தேர்ச்சியும் ஆராய்ச்சியுமுள்ள ஒருவரைக்கொண்டு வெளியிடுவதே முறை. அத்தகைய அறிவாளிகளுக்கு இந் நாட்டில் பஞ்சம் வந்துவிடவுமில்லை. "அவர்களில் ஒருவரும் எங்களுக்கு வேண்டியவரில்லையே" என்றும் கூறமுடியாது. விகடனுக்கும், அதன் ஆசிரியர் குழுவில பலருக்கு ஆசார்யரான காமகோடி பீடாதிபதிக்கும் மிகவும் வசப்பட்டிருக்கும் வைஷ்ணவ வித்வான்கள் பலர் உண்டு. காமகோடி பீடாதிபதிக்கு இடதுகை போலிருப்பவராய், மேல்நாட்டு ஆராய்ச்சிகளிலும் வல்லவரான அக்னிஹோத்ரம் ராமாநுஜதாத்தாச்சாரியாரிருக்கிறார். இவ்வருட 'கல்கி' தீபாவளி மலரில்

'பெரியவாள் பெருமை' என்னும் காமகோடி பீடாதிபதி யைப்பற்றிய கட்டுரையில், ''மேன்மை, எளிமை என்னும் இருகுணங்களும் ஒருங்கே விளங்குவது பகவானிடத்தில் தான் என்று சொல்லுவார்கள் பெரியோர். இதுவே உண்மை யெனின், அப்பகவானதான் இப்பெரியவாள், இப்பெரியவாள் தான அப்பகவான் என்று முடிக்க வேண்டுவது தவிர வேறில்லை' என்று காமகோடி பீடாதிபதியைப் போற்றி யெழுதியிருப்பவரும், 7—11—65 விகடனில பேட்டிக் கட்டுரையில் ''கணித உலகில் புரொபஸர் ராமாநுஜம் எப்படியோ, நாடக காவியத்தில் காளிதாஸன் எப்படியோ, பௌதிகசாஸ்திரத்தில் நியூடனும் ஐன்ஸ்டினும் எப்படியோ, அப்படி உபயவேதாந்தததில திரு அண்ணங்கராசாரியர்' என்று பலராலும் போற்றப்படும இவர்" என்று தொடங்கி, ''காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகளிடத்தில் இவருக்குள்ள பக்தியும் மதிப்பும் அளவிட முடியாதவை" எனபதிருகக் கொண்டாடப்பட்டவருமான காஞ்சி மஹாவித்வானிருககிறூர். காமகோடி பீடாதிபதி காலாவிட்ட வேலையைத் தலையால் சுமந்து செய்ய ஸித்தமா யிருக்கும மற்றும பல வைஷ்ணவ வித்வானகளிருககிறூர்கள். இவர்களில் ஒருவரைககொண்டு வைஷ்ணவத்தைப் பற்றிக் கட்டுரையெழுதச் சொல்லியிருக்கலாமே. அதைவிட்டு, வைஷ்ணவத்தில ஆராய்ச்சியில்லாதவரும், விரோதபூர்வம உள்ளவருமான ஒருவரைக்கொண்டா வைஷ்ணவத்தைப் பற்றிக் கட்டுரை எழுதச்சொல்லுவது? இஸ்லாத்தை வெறுக்கும் ஒரு கிறிஸ்தவரைக்கொண்டு இஸ்லாத்தைப் பற்றியும், கிறிஸ்தவத்தை வெறுக்கும் ஒரு இஸ்லாமியரைக் கொண்டு கிறிஸ்தவ மதத்தைப்பற்றியும கட்டுரையெழுது வித்து வெளியிடுவதுபோலல்லவா இது இருக்கிறது. இதி லிருந்து, நம நாட்டுப் பொதுஜனப் பத்திரிகைகளைக் கைப் பற்றிக் கொண்டிருக்கும் சைவாத்வைதிகள், தங்களிஷ்டப் படியே பொதுஜனங்கள் வைஷ்ணவமததததைப புரிந்து கொள்ளவேண்டும் எனனும் கருத்துடையவர்களாயிருக் கிறூர்கள் என்று விளங்குகிறது. இதுதான் இவர்கள் போதித்துவரும் சமரசம் போலும்! நிற்க; கட்டுரையை ஆராய்ந்து அதிலுள்ள அபத்தங்களை விளக்குவோமினி.

''ஷண்மதம்'' எனக் கூறப்படும் அறுவகை வழிபாட்டு முறை களான-'காணுபத்யம், கௌமாரம், சைவம், சாக்தம், வைஷ்ணவம்,

சௌரம்'- ஸ்ரீ ஆதிசங்கரர் ஹிந்து மதத்திற்குக் கட்டியுள்ள கற் கோட்டைகள் எனலாம். அதிச்ரேஷ்டமான ஞானிகள் முதல், *ஒன்றுமறியாத பாமரன் வரை* எல்லோரும் இம்மை மறுமைப்பயன் களை அடைந்து எங்கும் சாந்தியே நிலவவேண்டும் என்ற உயர்ந்த நோக்குடன் மேற்குறிப்பிட்ட ஆறு உபாஸநாமார்க்கங்கள் ஸ்ரீ ஆசார்யாள் அவர்களால் ஸ்தாபிக்கப்பெற்று அழியாப்புகழுடன் விளங்கிவருகின்றன. பாரததேசம் உள்ளளவும் இவையும் திகழும். *மிகத்தீவிர உபாஸனா மார்க்கங்களைக்கொண்ட* 'காணாபத்யம் கௌமாரம், சாக்தம், சைவம், சௌரம்' ஆகிய ஐந்து மதங்களை அளித்த ஆசார்யாள், தமக்கே இயல்பான கருணையால், *மிகவும் ஸாதாரண நிலையிலுள்ள மனிதன்* கூட எளியமுறையில் அனுபூதி பெறுவதற்காக 'வைஷ்ணவம்' என்றதொரு வரப்ரசாதத்தை அருளியிருக்கிறார்கள் என்றால் அது சாலப்பொருந்தும்......மற்றும் ஸகலத்தையும் ஆக்கவும், இயக்கவும் வல்ல பரம்பொருளின் தன்மையை விளக்க சைவ'த்தையும், குருதத்துவமாக'கௌமார'த் தையும் நிர்மாணித்த ஸ்ரீபகவத்பாதாள், அகில உலகத்தைக் காப்பாற்றும் தன்மையை விளக்கும் மதமாக 'வைஷ்ணவ'த்தை நிர்மாணித்தார்கள் எனவே *தத்துவத்தைஅடிப்படையாகக்கொண்டு 'வைஷ்ணவ'த்தை நிர்மாணிக்காமல்*, சமுதாயத்தின் நல்வாழ்வையே அடித்தளமாகக்கொண்டு நிர்மாணித்துள்ளார்கள். இதையே மெய்ப்பிப்பதுபோல் ஸ்ரீஆசார்யாளுக்குப் பிற்காலத்தில் தோன்றி, வைஷ்ணவத்திற்குப் பெருமையளித்த ஆண்டாளின் பாசுரம் ஒன்று அமைந்துள்ளது. 'குத்துவிளக்கெரிய...*தத்துவமன்று, தகவு*—ஏலோரெம்பாவாய்' "

*என்று இக்கட்டுரையின் தொடக்கத்தில் காணப்படும் விஷயங்கள் மிகவும் அஸம்ப₃த்₃த₄மானவை என்பதை முதலில் நிரூபிப்போம்.*

*'கா₃ணாபத்யம், கௌமாரம், சைவம், சாக்தம், வைஷ்ணவம், சௌரம்' என்று ஆறுமதங்கள் இந்நாட்டில் ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கபபட்டதாகவும் அவற்றுக்கு ஷண்மதங்கள் என்று பெயர் என்றும் எழுதியிருப்பதற்கு, ஐந்நூறு வருடங்களுக்குள் ஏற்பட்ட சங்கரவிஜயம் முதலான சில நூல்களில் அத்வைதிகள் கற்பித்து எழுதிவரும் கட்டுக்கதைகளைத் தவிர ஆதிசங்கரர் முதலான ப்ராசீனரான அத்வைதாசார்யர்களின் நூல்களிலும், மற்ற பண்டைச் சான்றோர்களின் நூல்களிலும எவ்வித ஆதாரமும் கிடையாது. பண்டைச் சான்றோர்களின் நூல்களில ஷண்மதங்கள் என்றும், ஷட்₃த₃ர்ஶனங்கள் என்றும் வழங்கப்படுபவை வேதத்துக்குப் புறம்பான (1) சாக்யம் (பௌத்தம்) (2)*

உலூக்யம்(வைசேஷிகம்) (3) அக்ஷபாத₃மதம் (நையாயிகம்) (4) க்ஷபணக (சமண) மதம் (5) கபில (ஸாங்க்ய) மதம் (6) பதஞ்சலி (யோக₃) மதம் என்னும் ஆறு மதங்களேயாம். "பிணக்கற அறுவகைச் சமயமும்" [திருவாய் 1-3-5] என்னுமிடத்தின் வியாக்கியானங்களைக் காணலாம். ஐந்நூறு வருடத்திற்கு முற்பட்ட எந்த மதநூலிலும ஷண்மதம் என்று க₃ாணபத்யம் முதலானவற்றைக் கூறியிருப்பதாகக் காணவில்லை. இதிலிருந்தே இககற்பனை ஐந்நூறு வருடங்களுக்குள் ஏற்பட்டது என்பதும். ஆதிசங்கரர் இந்த ஷண்மதங்களை ஸ்தாபித்திருக்கமுடியாது என்பதும் விளங்கும். அவருடையவையென்று ஆராய்ச்சியாளர் அனைவராலும் இசையப்பெற்ற ப்₃ரஹ்மஸூத்ர, கீதா, உபநிஷத். ஸஹஸ்ரநாம பாஷ்யங்களைப் பார்த்தாலும் அவர் ஷண்மதங்களை ஸ்தாபித்திருக்க இடமேயில்லை என விளங்கும். விஷ்ணு ஸஹஸ்ரநாமபாஷ்யத்தில் அவர் ஒவ்வொருநாமததின் பாஷ்யத்திலும் நாராயணனே பிரமன். உருத்திரன் முதலான அனைவரையும் படைத்த ஸகு₃ணப்₃ரஹ்மம் என்று கோஷித்திருக்கிறார். இனி. உபனிஷத் ப்ரஹ்மஸூத்ரகீதா பாஷ்யங்களிலிருந்து சிலவிடங்களை எடுததுக்காட்டுவோம்.

ப்ருஹதாரண்யகம் (3-7-3) "ய: ப்ருதி₂வ்யாம் திஷ்ட₂ந்" என்னும் அந்தர்யாமி ப₃ராஹ்மண வாகயததை விவரிககும் போது, "ய:—ஈத்₃ருகீ₃ஶ்வரோ நாராயணாக்₂ய: ப்ருதி₂வீம்—ப்ருதி₃வீதே₃வதாம் யமயதி-நியமயதி ஸ்வவ்யாபாரே. அந்தர:- .... அப்₄யந்தரஸ்திஷ்ட₂ந, ஏஷ தே ஆத்மா—தே தவ. மம ச ஸர்வபூத₄ாநாம் ச இத்யுபலக்ஷணார்த்த₂மேதத்" [இப்படிப்பட்ட ஈச்வரனை நாராயணன் என்னும் பெயரையுடைய தேவனே பிருதிவீதேவதையை உள்ளே நின்றுகொண்டு தன் தொழிலில் நியமிக்கிறான். அவனே உனக்கும் எனக்கும் எல்லா பூதங்களுக்கும் ஆத்மா] என்று மூலத்தில் பரம்பொருளின் பெயரைக்குறிப்பிடாமலிருந்த போதிலும். "யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்—தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:" என்னும் ஸுபாலோபனிஷத்திலுள்ள அந்தர்யாமி ப₃ராஹ்மண வாக்யத்தை நெஞ்சிற்கொண்டு நாராயணாக்₂ய:' [நாராயணன் என்னும்பெயரை உடையவன்] என்று பரம்பொருள் இன்ன தேவதை என்பதைக் கையிலங்கு கனியாகக் காட்டினார். இந்த பாஷ்யத்துக்கு வார்த்திகமிட்ட ப்ராசீனரான அத்வைதாசார்யரும்

''க்ருஷ்ணத்₃வைபாயநோ வ்யாஸோ வேத₃ாத்மா த்₄வாந்த ஹாரிகருத் |
ப்ராஹேமமேவ ப₃ஹுஶ: ப்ராணிநாம் ஹிதகாம்யயா ||
நாராயண: பரோऽவ்யக்தாத் அண்ட₃மவ்யக்தஸம்ப₄வம் |
அண்ட₃ஸ்யாந்தஸ்த்விமே லோகா: ஸப்தத்₃வீபா ச மேதி₃நீ ||
தஸ்மை நமோऽஸ்து தே₃வாய நிர்கு₃ணாய கு₃ணாத்மநே |
நாராயணாய விஶ்வாய தே₃வாநாம் பரமாத்மநே ||
ஏதமேவ ஸமுத்₃தி₃ஶ்ய மந்தரோ நாராயணஸ் தத₂ா |
வேத₃வித்₃பி₄ர் மஹாப்ராஜ்ஞை: புருஷைர் விநியுஜ்யதே ||

*[வேதஸ்வரூபியாய். அஞ்ஞானவிருளைப் போக்குகிறவரான க்ருஷ்ணத்வைபாயனரென்னும் வியாஸர், உயிர்களை உய்விக்கும் பொருட்டு இவ்வர்த்தத்தைப் பலகால சொன்னர்; அவ்யகதம் எனப்படும் மூலப்ரக்ருதிக்கு மேற்பட்டவன நாராயணன்; அந்த அவ்யக்ததிலிருந்து உண்டானது அண்டம. அண்டதிலுள்ளிருப்பவையே இவ்வுலகங்களும், ஏழு தீவுகளையுடைய பூமியும். குணமற்றவனும். குணமுள்ளவனும* **எல்லா தேவர்களுக்கும் பரமாத்மாவாயிருப்பவனும்** *எலலாமாயிருப்பவனுமான அந்த நாராயணனுககு நமஸ்காரம். வேதமறிந்த பேரறிவாளர்களான மஹாபுருஷர்களால் இவனைக் குறிதகே (தைத்திரீய) நாராயண மந்திரங்கள் விநியோகிககபபட்டிருக்கின்றன.]* **என று** *சங்கரர் வியாஸஸித்தாந்தத்தைஅநுஸரித்துநாராயணன் ஒருவனேயே பரதெய்வமாகக் கொண்டவர் என று காட்டினர். இந்த வார்ததிகத்திற்கு டீகையிட்ட ஆநந்தகிரி என்னும் ப்ராசீநரான அத்வைதாசார்யரும்,* **''ந கேவலம் புராணைக₃மாப்₄யாமேவ ஸோऽதி₄க₃ம்யதே। கிந்து ஶ்ருத்யக்ஷரைரபீத்யாஹ-ஏதமேவேதி। 'ஸஹஸ்ரஶீர்ஷம் தே₃வம் விஶ்வாக்ஷம் விஶ்வஶம்பு₄வம்। விஶ்வம் நாராயணம் தே₃வமக்ஷரம பரமம் ப்ரபு₄ம' இதயாதி₃ா மந்த்ரோ வேத₃ார்த்த₂வித்₃பி₄ரந்தர்யாமிணமுத்₃தி₃ஶ்ய விநியுக்த:। அத: ஸ வைதி₃க இதயாத்த₂:||''** *[''நாராயணன் புராணாகமங்களால் மாத்திரம் அறியப்படுகிறவனல்லன்; வேதாக்ஷரங்களாலும் அறியப்படுபவன் என்பதை 'ஏதமேவ' என்று தொடங்கும் ச்லோகததாலே கூறுகிருர். 'ஸஹஸ்ரசீர்ஷம் தே₃வம' என்று தொடங்கும நாராயணநுவாகமந்திரம் வேதத்தின் பொருளை அறிந்தவர்களாலே அந்தர்யாமி விஷயததிலே விநியோகிக்கப்பட்டிருககிறது. ஆகையால் நாராயணன் வேதப்ரதிபாத்யனான அந்தர்யாமியே*

என்று பொருள்.] என்று நாராயணனே வேதத்தில் காட்டப்பட்ட பரம்பொருள் என்று நிலைநாட்டினர். நிற்க.

இப்படி நாராயணனே பரமாத்மா என்று ப்ருஹதாரண்யகபாஷ்யத்தில் காட்டிய ஆதிசங்கரர் சாந்தோக்யம் மூன்றுவது அத்தியாயத்தில் 'ப்3ராஹ்ம வா இத3மக்3ர ஆஸீத'' என்று தொடங்கி, ப்ரஹ்மத்திலை ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்களைக் காட்டும் வேதம், 'இந்த்3ரோ வருண: ஸோமோ ருத்3ர:'' என்று படித்திருக்கும் வாக்யத்தை விவரிக்கும் போது ''இந்த்3ரோ தே3வாநாம் ராஜா . ருத்3ர: பஶூநாம்'' என்று பா4ஷ்யமிடுவதன்மூலம் பசுபதியான உருத்திரன் ப்ரஹ்மத்தால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவனே என்றும் காட்டினர்.

ப்ரஹ்மஸூத்ரம் (2-2-4) 'உத்பத்யஸம்ப4வாத்'' என்னும் ஸூத்ரபா4ஷ்யத்தில் பாஞ்சராத்ரத்தைப்பற்றி விசாரிக்கும்போது 'தத்ர யத்தாவது3ச்யதே யோऽஸௌ நாராயண: பரோऽவ்யக்தாத் பரஸித்3த4: பரமாத்மா ஸர்வாத்மா ... இதி. தந்ந நிராக்ரியதே | ... யத3பி தஸ்ய ப4க3வதோऽபி4கமநாதி3 லக்ஷண மாராத4நமஜஸ்ரமநந்யசித்ததயாபி4ப்ரேயதே, தத3பி ந ப்ரதிஷித்3த்4யதே ||' [நாராயணன் அவ்யக்தத்தைக் காட்டிலும் மேலானவனென்றும் பிரஸித்தனென்றும், பரமாத்மாவென்றும் ஸர்வாத்மாவென்றும், பாஞ்சராத்ரிகள் கூறுவதை நாம் மறுக்கவில்லை. பகவானை அவனை அபி4க3மனம் முதலான வகைகளிலே எப்போதும்வேறு எவரிடமும் நெஞ்சைச்செலுத்தாமல்ஆராதிப்பதை அவர்கள் ஆதரிப்பதை நாம் தள்ளவில்லை.] என்று நாராயணனே பரமாத்மா என்றும், வேறு எந்த தேவதையிடமும் நெஞ்சு செலுத்தாமல நாராயணன் ஒருவனிடமே பக்திசெலுத்தவேண்டும் என்றும் கூறும் பாஞ்சராத்ர மதமே தம் மதம என்று காட்டியிருக்கிறர் ஆதிசங்கரர்.

கீதாபாஷ்யத்திலும், ''நாராயண: பரோऽவ்யக்தாத அண்ட3மவ்யக்தஸம்ப4வம| அண்ட3ஸ்யாந்தஸ்த்விமே லோகா: ஸப்தத்3வீபா ச மேதி3நீ ||' என்று (முன் வார்த்திககாரரால் கையாளப்பட்ட) நாராயணனையே ஸகல ஜகத்காரணனைக் காட்டும மங்களச்லோகத்தை முதலில் இட்டு, அவதாரிகையில ''ஆதி3கர்த்தா நாராயணாக்2யோ விஷ்ணு: பௌ4மஸ்ய ப்3ராஹ்மண: ப்3ராஹ்மணத்வஸ்ய ச அபி4ரக்ஷணார்த்த2ம் தே3வக்யாம் வஸுதே3வாத3ம்ஶேந க்ருஷ்ண: கில ஸம்ப3

பூ₄வ" [உலகிற்கெல்லாம் ஆதிகர்த்தாவாய், நாராயணன் எனனும் பெயரையுடைய விஷ்ணு பூமியிலுள்ள அந்தணர் களையும், ப்ராஹ்மண்யத்தையும் ரக்ஷிப்பதற்காகவே தேவகீ வஸுதேவர்களுககுப் பிள்ளையான கிருஷ்ணனும் அம்சாவ தாரமாகப் பிறந்தார்] என்று மிகத்தெளிவாகப் பரதத்வ நிர்ணயம் செய்தார். மற்றும் பலவிடங்களில் இதுபோலவே நாராயணனே பரமாத்மாவென்று காட்டியிருந்தபோதிலும், மூன்றிடங்களையே இங்கு காட்டுவோம். கீதை (6—47) பாஷ்யத்தில், "யோகி₃நாமபி ஸர்வேஷாம்—ருத்₃ராதி₃த்யாதி₃ பராணும், மத்₃க₃தேந-மயி வாஸுதே₃வே ஸமாஹிதேந, அந்த ராத்மநா—அந்த:கரணே ந ஶ்ரத்₃த₄ாவாந்-ஶ்ரத்₃த₄த₄ாந: ஸந், ப₄ஜதே-ஸேவதே யோ மாம் ஸ மே-மம, யுக்ததம:-அதிஶயேந யுக்த:, மத:-அபி₄ப்ரேத: இதி ||" [உருத்திரன், ஆதித்யன் முதலானவர்களிடம் பக்தி செலுத்தும் யோகிகளைககாட்டி லும், என்னிடத்தில் நெஞ்சு செலுத்தியவனுய், ஶ்ரத்தை யுடையவனுய் எவனொருவன என்னை ஸேவிக்கிருனே அவனே மிகச்சிறந்த யோகி என்று என்னுல் கருதப்படுகிருன் என்று கருத்து.] என்றும், கீதை (7-23) பாஷ்யத்தில், "அந்தவத்-விநாஶி து ப₂லம் தேஷாம் தத் ப₄வதி அல்பமேத₄ஸாம அல்ப ப்ரஜ்ஞாநாம்| தே₃வாந் யஜந்த இதி தே₃வய்ஜ: தே தே₃வாந் யாந்தி, மத்₃ப₄க்தா: யாந்தி மாமபி| ஏவம் ஸமாநே ஆபி ஆயாஸே மாமேவ ந ப்ரதிபத்₃யந்தே அநந்தப₂லாய, அஹோ க₂லு கஷ்டதரம் வர்த்ததே, இத்யநுக்ரோஶம் த₃ாஶ யதி ப₄க₃வாந்||' [அற்பமான அறிவுடைய அவர்களுக்கு அழிவுள்ள பலன்களே கிடைக்கின்றன. மற்ற தேவர்களை ஆராதிப்பவர்கள் 'தே₃வயஜ:' என்று கூறப்படுகிருர்கள். அவர்கள் தேவர்களை அடைகிருர்கள். என் பக்தர்கள் என்னை அடைகிருர்கள். இப்படி ஆயாஸம் ஸமானமாயிருந்த போதிலும் அழிவற்ற பலனை அடைய என்னை அடைய வில்லையே இவர்கள்! இது என்ன கஷ்டம!! என்று வருத்தத் தைக் காட்டுகிருன பகவான.] என்றும், கீதை (9-23 25) பாஷ்யத்தில், "யேऽபி ...அந்யாஸு தே₃வதாஸு ப₄க்தா: ஸந்த: ...பூஜயந்தி....தேऽபி மாமேவ யஜந்தி அவிதி₄பூர்வகம| அவிதி₄: அஜ்ஞாநம் தத்பூர்வகம யஜந்தே இத்யர்த்த₂:|| தே₃வவ்ரதா: தே₃வாந் யாந்தி பித்ருந்....யாந்தி பித்ருவ்ரதா: ... பூ₄தாநி விநாயகமாத்ருக₃ண சதுர்ப₄கி₃ந்யாதீ₃நி யாந்தி பூ₄தே ஜ்யா:—பூ₄தாநாம் பூஜகா:....மத்₃யாஜிந: — மத₃யஜநஶீலா

**வைஷ்ணவா :** மாம் ஏவ யாந்தி। ஸமாநே அபி ஆயாஸே மா மேவ ந ப₄ஜந்தே அஜ்ஞாநாத்। தேந தே அல்பப₂லப₄ாஜ: ப₄வந்தி இத்யர்த்த₂:॥" [எவர்கள் வேறு தேவதைகளிடம் பக்தர்களாயிருந்துகொண்டு பூஜிக்கிறார்களோ. அவர்களும் என்னையே அவிதி₄யை முன்னிட்டுப் பூஜிக்கிறார்கள். அவிதி₄ யாவது அஜ்ஞானம். அஜ்ஞானத்தோடு பூஜிக்கிறார்கள் என்று கருத்து. தேவபூஜகர்கள் தேவர்களை அடைகிறார்கள்; பித்ருபூஜகர்கள் பித்ருக்களை அடைகிறார்கள்; பூ₄தகணங்களைப் பூஜிப்பவர்கள் விநாயகர் மாத்ருக₃ணம சதுர்ப₄கி₃நீ முதலான பூதங்களை அடைகிறார்கள். என்னைப்பூஜிக்கும **வைஷ்ணவர் கள்** என்னையே அடைகிறார்கள். மற்றவர்களைப பூஜிப்பவர் களுக்கும் பூஜிக்கும சிரமம் ஒன்றாயிருந்தபோதிலும நானே ஸகலயஜ்ஞங்களுக்கும் ஸ்வாமி என்பதை அறியாமையாலே அவர்கள் என்னை அடைவதில்லை. அதனால் அவர்கள் அற்ப பலனைப் பெறுகிறார்கள் என்று கருத்து.] என்றும் கல் வெட்டாகக் காட்டியிருக்கிறார் ஆதிசங்கரர்.

இவற்றிலிருந்து ஆதிசங்கரரும். அவருக்கு ஸமீப காலததிலிருந்த வார்த்திககாகாரர்களும் நாராயணனையே ஸகு₃ணப்₃ரஹ்மமாகக் கொண்டிருந்தனர் என்றும். சிவன், விநாயகன் ஸூர்யன் முதலான தேவர்களை ஜீவர்களாகவே கொண்டிருந்தனர் என்றும் தெளிவாக விளங்குகிறது. இப்படியிருக்கும்போது சிவன் சக்தி கணபதி, முருகன். ஸூர்யன் என்னும் தெய்வங்களைப் பரம்பொருளாகக் கொண்ட மதங்களையும் அவரே ஸ்த₂ாபித்தார் என்று எப்படிக்கொள்ளமுடியும்? மேலும். அத்வைத ஸித்தாந்தப் படியும் அனைததுலகையும் படைத்து அளித்து அழிதது மோக்ஷமளிக்கும் ஸகு₃ணப்₃ரஹ்மம் ஒன்றாயிருக்கமுடியுமே யொழிய எப்படி ஆறாயிருக்கமுடியும்? ஒவ்வொரு தேவதை யைப் பரம்பொருளாகக்கொண்ட ஆறு மதங்களையும் மனஸ்ஸாக்ஷியுள்ள ஒருவரே எப்படி ஸ்தாபிக்கமுடியும்? கீதாபாஷ்யத்தில் நாம் எடுத்துக்காட்டிய வாக்கியங்களில் சிவன், விநாயகன், சூர்யன் முதலான தேவர்களை உபா ஸிப்பவர்களுக்கு அழியும் பலனே கிடைக்குமென்றும். விஷ்ணுவை உபாஸிப்பவர்களுக்கே அழியாப்பலன் கிடைககு மெனறும் ஆதிசங்கரர் கோஷித்திருக்க. சைவம முதலான மதங்களை ஆதிசங்கரர் மிகத்தீவிரமாக உபாஸனை செய்பவ வர்களுக்காகவும், வைஷ்ணவத்தை ஒன்றுமறியாத பாமரர்

களுக்காகவும் ஸ்தாபித்தார் என்றும், பரம் பொருளின் ஒவ்வொரு தன்மையை விளக்க சைவம், சாக்தம், கௌமாரம் ஆகிய மதங்களை ஸ்தாபித்தார் என்றும் பாலதாசன் எழுதுவது ஆசார்யத்₃ரோஹமல்லவா? விஷ்ணுவைப் பரம்பொருளாகக்கொண்ட மதம் ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் காட்டப்படும் தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டது என்று ஆதி சங்கரர் முதலான ப்ராசீநாத்வைதாசார்யர்கள் அனைவரும் கல்வெட்டாகக் காட்டியிருக்க,வைஷ்ணவமதம் தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டதன்று என்று எழுதி, 'தத்துவமன்று தகவு' என்னும் திருப்பாவைப் பாசுரத்தை அதற்கு ஆதாரமாகக் காட்டுவது சிரிக்கத்தக்கதாயில்லையா? 'தத்துவமன்று தகவு' என்பதற்கு அதுவா அர்த்தம்? அப்பாசுரத்தில நப்பின்னைப்பிராட்டியைப்பற்றிப் பேசியிருக்கிறதேயொழிய வைஷ்ணவ மதத்தைப் பற்றிய பேச்சேயில்லையே! வைஷ்ணவத்தின்மேல் நெஞ்சிலே ஊறிக்கிடக்கும் த்வேஷமல்லவா இப்படியெல்லாம் எழுதவைத்திருக்கிறது? இப்படி வைஷ்ணவத்வேஷமுடைய ஒருவரைக்கொண்டா வைஷ்ணவத்தைப் பற்றிக் கட்டுரை எழுதச்செய்வது?

இனி, ஷண்மதம் என்னும் புதுக்கற்பனை எப்போது எதற்காக ஏற்பட்டது என்பதை ஆராய்வோம். தமிழ் நாட்டிலுள்ள எட்டுத்தொகை பத்துப்பாட்டு என்று பெயர் பெற்ற சங்கநூல்கள் மிகப்புராதனமானவை. இவற்றை நடுநிலைநின்று ஆராய்ந்தால் பண்டைத்தமிழர்கள் திருமாலை ஒருவனையே வேதத்தால் கோஷிக்கப்படும் பரம்பொருளாகக் கொண்டிருந்தனர் என்பதும், சிவன், முருகன், காளி முதலான மற்ற தெய்வங்கள் அனைவரும் அவனால் படைத்து அளித்து அழிக்கப்படும் ஜீவர்கள் என்றே கருதினர் என்பதும் தெளிவாக விளங்குகிறது. சிவனுக்குப் பரத்துவங் கூறும் அடிமுடிதேடியகதை, கண்ணைப்பிடுங்கி அர்ச்சனை செய்தகதை, ஆமையின் ஓட்டைப்பிரித்தகதை, வராஹத்தின் கொம்பை ஒடித்தகதை, சரபக்கதை முதலானவற்றில் ஒன்றுகூடச் சங்கநூல்களில் எடுக்கப்படவில்லை. ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைதக்கொள்கைகளே சங்கநூல்களில் கோஷிக்கப்பட்டிருக்கின்றனவேயொழிய அத்வைத சைவ சித்தாந்தக்கொள்கைகள் கூறப்படவில்லை. இதை நம்து சாதிமத ஆராய்ச்சி என்னும் நூலில் விரிவாக நிலைநாட்டி

வருகிறோம். சமீபத்தில் நம்மால் வெளியிடப்பெற்ற, 'கலகியைக் குறித்துச் சில கேள்விகள்' என்னும் நூலில் சுருக்கமாகக் காட்டியிருக்கிறோம். இம்முடிவை எவராலும் இன்றளவும் மறுக்க முடியவில்லை. சங்ககாலத்திற்குப் பின் ஏற்பட்ட நூல்களை ஆராய்ந்தால் சிவபக்தர்கள் சிலர் சிவாகமநூலகைளையும், தாமஸ புராணங்களையும ஆதாரமாகக் கொண்டு சிவபரத்துவம் சொல்ல முற்பட்டார்கள் என்றும், வேதங்களில் சிவாதிசப்தங்களால சிலவிடங்களில் பரம் பொருளைக் குறிப்பிட்டிருப்பதையும் தங்களுக்கு ஆதாரமாகக் காட்டிக்கொண்டிருந்தனர் என்றும் விளங்குகிறது. ஆனால் இவர்களுடைய வாதம் வைதிகர்களால் ஆதரிக்கப் படவில்லையென்பது முற்கூறிய ஆதிசங்கரரின் நூலகளிலிருந்தும். விசிஷ்டாத்வைத த்வைத க்ரந்தங்களிலிருந்தும் விளங்கும். இதனாலேயே பதினோராம் நூற்றாண்டில வாழ்ந்த ஆளவந்தார் '' **ஸ்வாப₄ாவிகாநவதி₄காதிஶயேஶித்ருத்வம் நாராயண த்வயி ந ம்ருஷ்யதி வைதி₃க: க:** '' [நாராயணனே! இயற்கையானதாய், எல்லையற்றதான ஈஶ்வரத்தன்மை உன்னிடமே உள்ளது என்பதைப் **பொறுக்காத வைதிகன்** உண்டோ?] என்று கேள்வி கேட்டார். சங்கநூல்களில் சிவன் முதலான வேறு எந்த தேவதைக்கும் பரத்துவமும, உலகம் பொய். ப்ரஹ்மம் குணமற்றது என்னும் அத்வைத ஸித்தாந்தமும் எங்குமே காணப்படாததால,சைவஸித்தாந்தமும். அத்வைதஸித்தாந்தமும் சங்ககாலத்திற்குப் பின் தோன்றியவையே என்பதை மறுக்கவே முடியாது. இன்றைக்கு ஐந்நூறு வருஷங்கள் வரையில் அத்வைதிகளும் விஷ்ணுபரத்வத்தைஒப்புக்கொண்டவர்களாகவேயிருந்தனர் என்பது அவர்கள் நூல்களிலிருந்தே விளங்குகிறது. சுமார் 500வருஷங்களுக்குள்ளிருந்த அப்பயதீக்ஷிதர் காலத்திலேயே வேதத்தைக் கொண்டு சிவபரத்வத்தை சாதிக்கக் கடுமையான முயற்சிகள் செய்யுப்பட்டன. அவர் காலத்திலிருந்த மஹாசார்யர் முதலான ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களாலும், த்வைதமதாசார்யர்களாலும் இம்முயற்சி கடுமையாக எதிர்த்து முறியடிக்கப்பட்டது. இதனால் ஆசாபங்கமடைந்த அப்பயதீக்ஷிதரும், அவரைச் சேர்ந்தவர்களும் பல நூதன கற்பனைகளைச் செய்து வைத்தனர். அவையாவன:-(1)சைவாத்வைதபரமான பல உபனிஷத்துக்களைக்கற்பித்து நூற்றெட்டு உபனிஷத்து என்னும் சுவடியை உண்டாக்கியது. (215வது

ஸுதர்சனத்தில் இதுபற்றி விரிவாக ஆராய்ச்சி செய்திருக்கிறோம்) (2) சந்தனத்தால் ஊர்த்₄வபுண்ட்₃ரம் தரித்து வந்த பெரும்பாலான அத்வைதிகளை ப₄ஸ்மத்தால் திர்யக்புண்ட்ரம் தரிக்கும்படி செய்தது. (3) எந்த ஸமூகத்தினராலும் பின்பற்றப் படாததும். எந்தப் பூர்வாசார்யராலும் எடுக்கப் படாததுமான ஸ்ரீகண்ட₂ப₄ாஷ்யம் என்ற ப்₃ரஹ்மஸூத்ர ப₄ாஷ்யமொன்றைக் கற்பித்து சைவவிசிஷ்டாத்வைதமதம் என்னும் நவீன மதமொன்றை ஏற்படுத்தியது. (இன்றளவும் எந்த சமூகமும் இந்த மதத்தைப் பின்பற்றுவதாகத் தெரியவில்லை.) (4) ஆதிசங்கரர் இயற்றியதாக சிவன, சக்தி, கணபதி. முருகன் முதலான தெய்வங்களின் மீது பல ஸ்தோத்திரங்களை இயற்றியது (இந்த ஸ்தோத்திரங்கள் ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்ட அத்வைதாசார்யர்கள் எவராலும் கையாளப்படவில்லை.) (5) சங்கரவிஜயம் என்னும் நூலைக் கற்பித்து, அதில் (ஸ்ரீகண்ட₂ரைப் ப்ராசீனர் என ஸ்தாபிப்பதற்காக) சங்கராசார்யர் நீலகண்டரை ஜயித்தார் என்றும், (ஷண்மதங்கள் ப்ராசீனம் என்று ஸ்தாபிப்பதற்காக) ஷண்மதஸ்தாபனம் செய்தார் என்றும பல பொய்களைப் பெய்து வைத்தது. முற்கூறிய கற்பனைகளில் கடைசியான கற்பனையே நம் கட்டுரைக்கு ஸம்பந்தபட்டதாகையால், அது கற்பனையே என்பதை அடுத்த பாராவில் விரிவாக விளக்குவோம்.

'சக்தி' என்று சொல்லப்படுகிறவள் சிவனின் மனைவி; கணபதியும், முருகனும் சிவனின் பிள்ளைகள். சிவனும், விநாயகரும் நாராயணனால் படைக்கப்பட்ட ஜீவர்களே என்று ஆதிசங்கரர் கோஷித்திருப்பதை முன்னமே காட்டினோம். "பீ₄ஷோதே₃தி ஸூர்ய:" [பரம்பொருளிடம் பயத்தாலேயே சூரியன் உதிக்கிறான்] முதலான வேதவாக்யங்களில் பரம்பொருளுக்கு பயப்படும் ஜீவனாக கோஷிக்கப் பட்டவன் சூரியன. இவனை தியானிப்பவர்களுக்கும அற்ப பலனே என்று ஆதிசங்கரர் கோஷித்திருப்பதைக் காட்டினோம். இவர்களைப் பரம்பொருளாகக்கொண்ட சைவத்தையும், கா₃ணாபத்யத்தையும், சௌரத்தையும் ஆதிசங்கரர் ஸ்தாபித்திருக்கமுடியாது என்பது சிறுவர்களுக்கும் விளங்கும். சிவனைப் பரம்பொருளாகக்கொண்ட மதத்தையே ஆதிசங்கரர் ஸ்தாபித்திருக்கவோ நிர்மாணித்திருக்கவோ முடியாது என்று ஸித்தித்தபிறகு, அவன் மனைவியையும், அவ

னுடைய இரண்டாவது பிள்ளையையும் பரம்பொருளாகக் கொண்ட மதங்களை அவர் எப்படி ஸ்தாபித்திருக்கமுடியும்? தத்துவத்தை நிர்ணயிப்பதற்கென்றே ஏற்பட்ட தம்முடைய உபனிஷத் ப்₃ரஹ்மஸூத்ர கீ₃தாஸஹஸ்ரநாம பா₄ஷ்யங்களில் எவ்விடத்திலும் அவர் சிவன் முதலானவர்களைப் பரம்பொருளாகக் கூறவில்லையே; நேர்மாறாக நாராயணனே இவர்கள் அனைவரையும் படைத்தளித்து அழிக்கும் பரம்பொருள் என்றல்லவோ நூற்றுக்கணக்கானவிடங்களில் கோஷித்திருக்கிறார். சிவன் முதலானவர்களைப் பற்றிய துதிகளில் அவர்களைப் பரம்பொருளாக கோஷித்திருக்கிறாரே எனில்: அத்துதி நூல்கள் அப்பயதீக்ஷிதருக்கு முற்பட்ட காலத்திலிருந்த அத்வைதிகள் எவராலும் கையாளப்படாததிலிருந்தே அவை ஐந்நூறு வருடங்களுக்குள் இருந்த அத்வைதிகளால் இயற்றப்பெற்றவையென விளங்குகிறதே. துதிநூல்களின் கடைசியில் 'சங்கரரால் இயற்றப்பட்டது' என்று கூறியிருப்பது மாத்திரம் கொண்டு இவை ஆதிஶங்கரரால இயற்றப்பட்டது என்று எப்படிக் கொள்ளமுடியும்? சங்கரரின் பெயரில் ஏற்பட்ட அத்வைத மடங்களில் பரம்பரையாக சங்கராசார்ய நாமத்தை வஹித்துவந்த நூற்றுக்கணக்கான மடாதிபதிகளில்சிலர் இத்துதிநூல்களை இயற்றியிருக்கலாமல்லவா? ஆகையால், இது கொண்டு ஆதிஶங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்தார் என்று எப்படி ஸித்திக்கும்? சங்கரவிஜயம் முதலான சங்கராசார்யரைப்பற்றிய சரித்திர நூல்களில் ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்ததாக இருக்கிறதே எனில்: இந்நூல்கள் ஐந்நூறு வருடங்களுக்குட்பட்டவை என்பது ஆராய்ச்சியாளர் அனைவரும் இசைந்தது. இவை ஏற்படுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் இருந்தவர் ஆதிசங்கரர். அவருடையவையென்று அனைவருமிசைந்த நூல்களுக்கு முரணாக ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்தார் என்று இந்நூல்களில் எழுதியிருப்பதை எப்படி நம்புவது? ஆதிசங்கரருக்குப் பிற்பட்டவர்களான உதயனர், பாஸ்கரர், அபிநவகுப்தர் ஆகியவர்களையும், ஸ்ரீராமாநுஜருக்கும் பிற்பட்டவராய் க₂ண்ட₃நகாரரான ஸ்ரீஹர்ஷரையும் ஆதிசங்கரர் ஜயித்தார் என்று கூறும் சங்கரவிஜயம் பொய்ந்நூல் என்று தெளிவாக விளங்குகிறது. மேலும், புருஷனைப் பரம்பொருளாகக்கொண்டு ஒரு மதம், மனைவியைப் பரம்பொருளாகக் கொண்டு ஒரு மதம், இரண்டு பிள்ளைகளைப் பரம்பொருள்

களாகக்கொண்டு இரண்டு மதங்கள் என்பது எத்தேசத்திலும் கேள்விப்படாத விந்தையாகவன்றோ இருக்கிறது. இவற்றை ஒருவர் ஸ்தாபித்தார் என்று கூறுவதைக்கேட்டால் அறிவுடையவர்களெல்லாம் சிரிக்கமாட்டார்களா?சைவ ஸித்தாந்திகள் சிவனே கணபதியாகவும். முருகனுகவும் உருவெடுத்தான் என்று கூறும்போது, கணபதி மதமும். குமாரமதமும் எப்படித் தனி மதமாக முடியும்? அப்படிக் கூறுவதானுல். விஷ்ணுவின் ஒவ்வோரவதாரததுக்கும் ஒரு மதமிருப்பதாகக் கூறலாமே! ஶ்ருதிஸ்ம்ருதிகளெல்லாம் நாராயணனையே பரம்பொருளாக கோஷிக்கின்றன என்று ஆதிசங்கரர் தம் நூல்களில் பொறித்து வைத்திருக்கும்போது. வைஷ்ணவ மதத்தை ஆதிசங்கரர் நிர்மாணித்தார் என்று எழுதுவது எப்படிப் பொருந்தும்? 'அறிவாளிகள் விஷ்ணுவையே தியானித்து அழிவற்ற பலனை அடைகிருர்கள்; அறிவற்றவர்களே மற்ற தேவதைகளை தியானித்து அற்ப பலனை அடைகிருர்கள்' என்று அவர் கோஷிததிருக்கும்போது அறிவற்ற பாமரர்களுக்காக அவர் வைஷ்ணவத்தை நிர்மாணித்தார் என்று எழுதுவது அறிவுடைமையைக் காட்டவில்லையே! இவற்றையெல்லாம் நடுநிலைநின்று ஆராய்கின்றவர்களுக்கு. ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்தார் என்பது, வைஷ்ணவ மதத்தை இழிவுபடுத்துவதற்காகவே சிலர் ஐந்நூறு வருடங்கட்குள் உண்டாக்கிய கற்பனை என்பது கையிற்கனியென விளங்கும்.

"ஆதி சங்கரர் காலத்திற்குப் பிறகு வைஷ்ணவ மதத்திற்குப் பலமாக இருந்தவர்களில் *டங்கன், த்ரமிடன், குஹதேவன்* என்ற மூவர் குறிப்பிடத் தகுந்தவர். ஆழ்வாராதிகள் வைஷ்ணவத்தைச் சிறப்பித்து ஆயிரக்கணக்கான பாசுரங்களை அருளியிருந்தபோதிலும். ஸ்ரீ சங்கரர் காலத்திற்கும், அதன் பின்னுல் அவதரித்த மதாசாரியர்களுக்கும் இடையே நீண்டகாலம் பாரததேசமெங்கும் அத்வைத சித்தாந்தமே பரவியிருந்து" "*ஆசார்யாளுக்குப் பிற்காலத்தில் தோன்றி* வைஷ்ணவத்துக்குப் பெருமையளித்த *ஆண்டாளின்*." "ஸ்ரீ சங்கரரின் அத்வைத ஸித்தாந்தத்தில் நம்பிக்கையில்லாத இவர் (ராமாநுஜர்) '*விசிஷ்டாத்வைதம்*' (விசேஷ அத்வைதம்) என்ற ஒரு கிளையைப்பிரித்து. அக்கொள்கையைப் பலரும் அனுஸரிக்கக் காரணமானுர் விசிஷ்டாத்வைதத்தை ஸ்ரீ ராமாநுஜர் அவர்கள், ஸ்ரீமத்பாகவதம் போன்ற இதிகாஸ நூல்கள், பாஞ்சராத்ர ஆகமங்கள் எனும் ஆகம நூல்கள் மற்றும் ஆழ்வார்களருளிய அனுபூதி நிறைந்த- ப்ரபந்தங்கள் ஆகியவற்றின் உறுதுணையால்

அமைத்து, அதன் கொள்கைகளைப் பரப்பலானார். ஆதிசங்கரர் ஆறு வழிபாட்டு முறைகளான மதங்களை ஸ்தாபித்தாலும், 'வைஷ்ணவ'த்திற்கு 'பாஞ்சராத்ரம்' எனும் ஆகம வழிபாட்டு முறையை பகவான் அளித்த வகையில் ஆராய்ச்சி செய்து வழங்கிய பெருமை ஸ்ரீராமாநுஜரையே சேரும்''

*என்று ப$_{3}$ாலதாசன் எழுதியிருப்பவை கேவலம் அபிமானத்தால் எழுதியவை என்று நிரூபிப்போம் இனி.*

*ஆதிஶங்கரர் ஷண்மதங்களை நிர்மாணித்தார் என்று எழுதியதின் மூலம் ஆதிசங்கரரின் நூல்களைத் தாம் படித்த தில்லையென்று காட்டிக்கொண்ட பாலதாசன், இவ்வாக்கியங்களில் விசிஷ்டாத்வைத நூல்களையும், காலஆராய்ச்சி நூல்களையும் தாம் படித்ததில்லை என்று காட்டிக்கொள் கின்றார். கால ஆராய்ச்சி செய்திருப்பவர்களில் பெரும்பாலானவர்கள் ஆதிசங்கரர் கி. பி. எட்டு ஒன்பதாம் நூற்றாண் டில் வாழ்ந்தவர் எனறே அறுதியிடுகின்றனர்.*

''நிதி$_{4}$நாகே$_{3}$ஶவஹ்நியப்$_{3}$தே$_{3}$ விப$_{4}$வே ஶங்கரோத$_{3}$ய:।
அஷ்டவர்ஷே சதுர்வேத$_{3}$ாந் த்$_{3}$வாத$_{3}$ஶே ஸர்வஶாஸ்த்ரவத் ॥
ஷோட$_{3}$ஶே க்ருதவாந் ப$_{4}$ாஷ்யம் த்$_{4}$வாத்ரிம்ஶே
முநிரப்$_{4}$யக$_{3}$ாத் ।
கல்யப்$_{3}$தே$_{3}$ சந்த்$_{3}$ரநேத்ராங்கவஹ்நியப்$_{3}$தே$_{3}$ கு$_{3}$ஹாபரவேஶ:।
வைஶாகே$_{2}$ பூர்ணிமாயாம் து ஶங்கர: ஶிவதாமக$_{3}$ாத் ॥''

*[*நிதி$_{4}$ நாக$_{3}$ ஈஶ வஹ்நி பதங்களால் குறிக்கப்பட்ட 3889 வது கலிவருஷமாகிற விப$_{4}$வ வருடத்தில் சங்கரர் உதித்தார்; எட்டுவயதில் நாலு வேதங்களையும் அத்யயனம் செய்தார்; பனிரண்டு வயதில் எல்லா சாஸ்திரங்களையும் படித்தார்; பதினாருவது வயதில் பாஷ்யமியற்றினார்; முப்பத்திரண்டாவது வயதில் சங்கரமுனிவர் மறைந்தார். *சந்த்ர நேத்ர அங்க வஹ்நி பதங்களால் குறிக்கப்பட்ட 3921-வது கலிவருடத்தில் வைகாசிப் பௌர்ணமியில் குஹையில் நுழைந்து சிவமானார்.]* என்னும் ஶ்லோகங்கள் வேணுக்ராமத்தில் கோ$_{3}$விந்த$_{3}$ பட்டர் என்பவரால் கண்டெடுக்கப்பட்ட ஓலைச்சுவடிகளில் காணப்படுகின்றன. இதன்படி கி. பி. 788-வது வருடத்தில்

---

** நிதி$_{4}$கள் 9. நாக$_{3}$ங்கள் 8. ஈஶர்(தி$_{3}$கபாலர்)கள் 8. வஹ்நி(அக்னி)கள் 3. இவ்வெண்களைத் தலைகீழாக எழுதினால் 3889 என்னும் வருடம் வரும். இவ்விதமாகவே சந்த்$_{3}$ரநேத்ர அங்கவஹ்நி ஶப்தம் 3921 என்னும் வருடத்தைக் குறிக்கும்.*

ஆதிசங்கரர் பிறந்ததாகவும், கி. பி. 820-வது வருடத்தில் மறைந்ததாகவும் ஏற்படுகிறது. எட்டாவது நூற்றாண்டுக்கு முற்பட்ட எந்த வைதிக நூலிலும் 'உலகம் பொய்; ப்ரஹ்மத்திற்கு நற்குணங்களும் கிடையாது' என்னும் அத்வைதக் கொள்கை ஆதரிக்கப்படாமையாலும் இக்காலமே ஆதி சங்கரரின் காலமாயிருக்கத்தக்கது. இக்காலத்திற்கு முன்னதாகவே ஆழ்வார்கள் அவதரித்தார்கள் என்பது பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களின் கருத்து. இப்படியிருக்கும் போது ஆதிசங்கரருக்குப் பலநூற்றாண்டுகட்குப் பின்னர் ஆழ்வார்கள் அவதரித்ததாக ப₃ாலதாசன் ஆதாரங்காட்டாமல் எழுதுவது அவருடைய ஆராய்ச்சியின்மையைக் காட்டுகிறது. ஸ்ரீராமானுஜர் தம் ஸ்ரீ ப₄ாஷ்யத்தின் தொடக்கத்தில் "பே₃ாத₄ாயநமஹர்ஷிபால் அருளிச்செய்யப்பட்ட விரிவான ப்₃ரஹ்மஸூத்ரவ்ருத்திக்ரந்தத்தைப் பூர்வாசார்யர்கள் சுருக்கி அருளினார்கள்" என்று அருளிச்செய்திருக்கிறார். இதன் வ்யாக்யானத்தில் ஶ்ருதப்ரகாஶிகாசார்யர் முதலானோர் 'பூர்வாசார்யஶப்தத்தாலே டங்கர், த்₃ரமிட₃ர் முதலானோர் கூறப்படுகின்றனர்' என்றருளினர். இதிலிருந்து போதாயன மஹர்ஷிக்கு ஸமீபகாலத்திலிருந்த மஹாபுருஷர்கள் டங்கர், த்₃ரமிடர், குஹதேவர் ஆகியவர்கள் என்று விளங்குகிறது. ஒரு ஆதாரமும் காட்டாமல் இவர்களை ஆதிசங்கரர் காலத்திற்குப் பிற்பட்டவர்களாக ப₃ாலதாசன் எழுதுவது சிறிதும் பொருந்தாது. பே₃ாத₄ாயனரையும் ஆதிசங்கரருக்குப் பிற்பட்டவராக ஏன் எழுதவில்லையோ தெரியவில்லை; (இனி எழுதினாலும் எழுதுவார்) பே₃ாத₄ாயனர், டங்கர், த்ரமிடர், குஹதேவர் முதலான மஹான்கள் நெடுங்காலமாக விசிஷ்டாத்வைதத்தை இந்நாட்டில் நிலைநிறுத்தியதை மறைப்பதற்காக அவர்களை சங்கரருக்குப் பிற்பட்டவர்களாக்கப் பார்க்கிறார். தமிழ்நாட்டில் அதிப்ராசீனமான சங்கஇலக்கியங்களில் அத்வைதக்கொள்கைகள் எவையும் இடம்பெறாமலிருப்பதிலிருந்தும், வைஷ்ணவ விசிஷ்டாதவைதக் கொள்கைகளே இடம் பெற்றிருப்பதிலிருந்தும் போதாயனர் முதலானோரால் நிலை நிறுத்தப்பட்ட வைஷ்ணவ விசிஷ்டாத்வைதமே இந்நாட்டில் நெடுங்காலமாகப் பரவியிருந்ததென்றும், எட்டு ஒன்பதாம் நூற்றாண்டிலேயே அத்வைதக்கொள்கை ஆதி

சங்கரரால் பரப்பப்பட்டது என்றும் நடுநிலைநிற்கும் அறிவாளிகளுக்கு நன்கு விளங்கும்.

'விசிஷ்டாத்வைதம்' என்பதற்கு 'விசேஷ அத்வைதம்' என்று பொருள் உரைப்பதிலிருந்து விசிஷ்டாத்வைதம் என்னவென்றே பாலாதாசனுக்குத் தெரியாதென விளங்குகிறது. சேதநாசேதனங்களோடு கூடிய (விசிஷ்டமான) ப்ரஹ்மம் ஒன்றே என்று கூறுவதே விசிஷ்டாத்வைதம் என்றே அனைவரும் எழுதியுள்ளனர். விசேஷமான அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என்று இன்றளவும் எந்த அறிவாளியும் கூறியதில்லை. புராணமான பாகவதத்தை இதிஹாஸம் என்று எழுதியிருப்பதிலிருந்து பாலாதாசனுக்கு இதிஹாஸபுராண வேற்றுமைகூடத் தெரியாதென விளங்குகிறது. இவையெல்லாவற்றிற்கும் மேலே விசிஷ்டாத்வைதமதத்தின் அரிச்சுவடி கூட இவருக்குத் தெரியாது என்பதை விளக்கும் இவருடைய வாக்கியம் ஒன்றைக் காட்டி இக்கட்டுரையை முடிப்போம்.

"**ஸ்ரீ ராமாநுஜரின் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் படி ப்ரஹ்மம் எனபது கண்களால் காணப்படுவதேயாகும்**" என்று எழுதுகிறார் இவர். விசிஷ்டாத்வைதத்தில் அரிச்சுவடி படித்தவர்கள் கூட இப்படி எழுதமாட்டார்கள். இத்தகையவரைக்கொண்டா வைஷ்ணவத்தைப்பற்றியும், விசிஷ்டாத்வைதத்தைப் பற்றியும் கட்டுரையெழுதி வெளியிடவேண்டும்! நம் நாட்டுப் பிரபல பத்திரிகைகளுக்கு ஏற்பட்ட சாபக்கேடு இது. மேல் நாட்டுப்பத்திரிகைகளாயிருந்தால் இப்படிச் செய்யமாட்டார்கள். அப்படியே தவறு நேர்ந்துவிட்டாலும். எடுத்துக்காட்டினால் பெருந்தன்மையுடன் ஒப்புக்கொள்வார்கள். தவறில்லையென்றால் ஆதாரங் காட்டி நிரூபிக்கவாவது செய்வார்கள். நம் நாட்டிலுள்ள விகடன் போன்ற பத்திரிகைகளுக்கு இந்த நேர்மை என்று தான் வருமோ தெரியவில்லை. அறிவாளிகள் உண்மையை அறிவதற்காக நாம் இவ்வாராய்ச்சிக் கட்டுரையை அச்சிட்டு எல்லாப்பத்திரிகைகளுக்கும் விமர்சனத்துக்கு அனுப்பி இலவசமாக விநியோகம் செய்யவும் முன் வந்திருக்கிறோம். பத்திரிகைகள் நடுநிலை நின்று விமர்ஶனம் செய்யுமா?

## முடிவுரை

ஒரு பொய்யைப் பலர் பலகால் திருப்பித்திருப்பிச் சொல்லிவந்தால் அது மெய்யாகிவிடும் என்னும் எண்ணத்தாலே. அத்வைத ஸமூஹத்தைச்சேர்ந்த பலர் ஆதிசங்கரர் சிவன். சக்தி. கணபதி. முருகன் முதலான தேவதைகளைப் பற்றிப் பல துதிகளை இயற்றியதாகவும், ஷண்மதஸ்தாபனம் செய்ததாகவும் பொதுஜனப்பத்திரிகைகளில் பலகால் எழுதி வருகின்றனர். இது பெரும்பொய்யென்பதை விளக்கும் ப்ரஹ்மாஸ்த்ரமொன்றைக்காட்டி இக்கட்டுரையை முடிப்போம். பதினாரும் நூற்றாண்டில் கேரளத்தில் வாழ்ந்த அத்வைதியான நாராயணபட்டர்தாம்இயற்றியஸுப்ரஸித்த க்ரந்தமான நாராயணீயத்திலே சிவாதிகளைக்காட்டிலும் நாராயணனுக்குப் பரத்வத்தை நிரூபிக்கும் ப்ரகரணத்திலே,

''ஸ்ரீஶங்கரோऽபி ப₄க₃வாந் ஸகலேஷு தாவத்
த்வாமேவ மாநயதி யோ நஹி பக்ஷபாதீ।
த்வந்நிஷ்ட₂மேவ ஸஹி நாமஸஹஸ்ரகாதி₃
வ்யாக்₂யத₃ப₄வத்ஸ்துதிபரஶ்ச க₃திம் க₃தோऽந்தே ॥'' *[90-5]*

*[சிவவிஷ்ணு பக்ஷபாதமற்றவரான ப₄க₃வத்பாத₃ராகிற ஆதி ஸ்ரீசங்கராசார்யர் தன்னுடைய எல்லா நூல்களிலும நாராயணனாகிற உன்னையே ஸகு₃ணப்₃ரஹ்மமாகக்கூறி கௌ₃ரவிக்கிறார். ஸஹஸ்ரநாமம், ( கீதை, உபனிஷத்துக்கள், ப்ரஹ்மஸூத்ரம் ) முதலானவற்றை உன்னைச்சொல்லுவதாகவே அவர் வியாக்கியானம் செய்கின்றார். உன்னைப்பற்றியதான துதியைச் செய்தே கடைசி காலத்தில் அவர் மோக்ஷமடைந்தார்.]* என்று கோஷித்திருக்கிறார். இந்த ஶ்லோகத்திற்கு தே₃ஶமங்க₃ளவர்யர் என்னும்அத்வைதியால் இயற்றப்பட்ட வடமொழி வியாக்கியானத்தில் ''கிஞ்ச। ஸ்ரீஶங்கர: ப₄க₃வத்பாத₃ாசார்ய:। த்வந்நிஷ்ட₂ம் விஷ்ணுபரம। நாமஸஹஸ்ரகாதீ₃தி। ஆதி₃ ஶப்₃தே₃ந ஸ்ரீகீ₃தாதி₃ க்₃ருஹ்யதே। ஸோऽபி தது₃ப₄யமபி ஶிவபரதயா வ்யாக்₂யாதும ஶக்யமபி விஷ்ணுபரதயைவ வ்யாக₂யாதவாந்। அந்தே ச ப₄வத்ஸ்துதிபர: ஸ்ரீமத்பாத₃ாதி₃கேஶஸ்துதிம் குர்வந் க₃திம் மோக்ஷம் க₃த:, ந து ஶிவஸ்துதிபர: ॥'' *[விஷ்ணுவே ஸகு₃ணப்₃ரஹ்மமென்பதை நிரூபிக்கும் மற்றுமொரு ப்ரமாணத்தைக் காட்டுகிறது இந்த ஶ்லோகம். ஸ்ரீஶங்கர:—பகவத்பாதா*

சார்யர். த்வந்நிஷ்ட்ட$_2$ம்-விஷ்ணுபரமாக. நாமஸஹஸ்ரகாதி$_3$ என்றவிடத்தில் ஆதிசப்தத்தாலே ஸ்ரீகீ$_3$தை (உபனிஷத், ப்ரஹ்மஸூத்ரம்) முதலானவை உணர்த்தப்படுகின்றன. அவ்வாதிசங்கராசார்யரும் ஸஹஸ்ரநாமம், கீதை முதலானவற்றை (அப்பயதீக்ஷிதர் செய்ததுபோலே நலிந்தும் வலிந்தும்) சிவபரமாக வியாக்கியானம் செய்யலாமாயினும் விஷ்ணுபரமாகவே வியாக்கியானம் செய்தார். கடைசிக் காலத்திலும்- ப$_4$வத்ஸ்துதிபர:-உன்னைப்பற்றிய ஸ்ரீவிஷ்ணு பாதா$_3$தி$_3$கேசஸ்துதியைச் செய்தே மோக்ஷத்தை அடைந்தார்; சிவஸ்துதியைச் செய்து மோக்ஷத்தை அடையவில்லை.] என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. வியாககியானத்தை எதிர்பாராமல் மூலமே தெளிவாகவுள்ளது. ஆதிசங்கரர் தம் எல்லா நூல்களிலும் விஷ்ணுவையே ஸகு$_3$ணப்$_3$ரஹ்மமாக கோஷித்திருக்கிறார் எனறும். ஶிவஸ்துதியில் ஈடுபடாமல் விஷ்ணுஸ்துதியில் ஈடுபட்டே மோக்ஷமடைந்தார் என்றும் உத்கோஷிக்கிறார் நாராயணபட்டாதிரி. இதிலிருந்து ஆதிசங்கரருடைய பெயரில் வழங்கும் ஶிவாதி$_3$ஸ்துதிகளும், அவர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார் என்னும் கதையும் ஐந்நூறு வருடங்கட்குள் ஏற்பட்ட கற்பனைகளே என வெள்ளிடை மலையாய் விளங்குகிறது. இனியாவது நம் நாட்டுப் பொதுஜனப் பத்திரிகைகள் இப்பொய்யைப் பறைசாற்றுமலிருக்குமா?

## முக்கியமான அறிவிப்பு

**இக்கட்டுரையை நடுநிலை நிற்கும் நல்லோர்களிடம் பரப்ப விரும்புகின்றவர்கள் நமக்கு எழுதினால் தேவையான காபிகள் இலவசமாக அனுப்பப்படும்.**

இனி, இக்கட்டுரையின் பதினோராம் பக்கத்தில் அப்பய தீக்ஷிதர் முதலானோரின் கற்பனைகளில் மூன்றாவதாகக் காட்டப்பெற்ற ஸ்ரீகண்ட$_2$ப$_4$ாஷ்யகல்பனையைப்பற்றி நடுநிலை நின்று ஆராய்ந்து தெளிவுபடுத்துவதும் மைஸூர் பரகால மடத்தினரால் இரண்டு வருடங்களுக்கு முன்பே வெளியிடப் பெற்றதுமான 'ஸ்ரீ கண்ட$_2$ ஸமாலோசனம்' என்னும் வடமொழி நூலை விமர்சனம் செய்கிறோம். இந்நூல தேவையானவர்கள் பரகாலமடத்திற்கு எழுதிப்பெறுக.

## ஸ்ரீகண்ட₂ஸமாலோசநம்

### ( புத்தக விமர்சனம் )

மொழி–ஸம்ஸ்க்ருதம். விலை ரூ. 1-00. இயற்றியவர்:– *நவ்யமங்க₃ளாபி₄ஜந ஸ்ரீ. உ. வே. வரத₃ாசார்ய ஸ்வாமி.* கிடைக்குமிடம்:— Mukhami Adviser, Sri Brahmatantra Parakala Mutt, Mysore. *(பரகாலமடம், மைஸூர்)*

*திருடன் நல்லவனொருவனுடைய பொருளைத் திருடி விட்டுத் திருட்டுக்கொடுத்தவனையே 'திருடன் திருடன்' என்று கூச்சலிட்டுக் கைகாட்டும் வகைபோலே நம் நாட்டில் ஒரு செயல் 500 வருடங்களுககுள் நடந்திருக்கிறது. 500 வருடங்களுக்கு முன் இருந்த எந்த மதத்தைச்சேர்ந்த ஆசார்யராலும் எடுத்துக்க₂ண்ட₃நமண்ட₃னங்கள் செய்யப் பெறுததிலிருந்தே 500 வருடங்களுக்குட்பட்ட காலத் திலேயே ஸ்ரீராமாநுஜபா₄ஷ்யத்தைக் காப்பியடித்து இயற் றப்பெற்றதென்று தெளிவாக விளங்கும் ஸ்ரீகண்ட₂பா₄ஷ் யத்தை-இன்றளவும் எந்த சமூகத்தினராலும் பின்பற்றப் படாத சைவவிசிஷ்டாத்வைதம் என்னும் அபூர்வமதத்தைச் சொல்லும் ஸ்ரீகண்ட₂பா₄ஷ்யத்தை-ஸ்ரீராமாநுஜர் காப்பி யடித்தார் என்று அப்பயதீக்ஷிதர் முதலானோர் கூறிவருவதே அதுவாகும். ஸ்ரீகண்டபாஷ்யம் 500 வருடங்கட்குள் இயற் றப்பெற்றதே என்றும், காலநிர்ணயம் செய்யமுடியாமைக் காக எந்தப் பூர்வக்ரந்தத்தையும் பெயரிட்டு எடுக்காமல் அதிஜாக்₃ரதையாக இயற்றப்பட்டிருப்பதிலிருந்து ஸ்ரீராமா நுஜர் மேல் பழிசுமத்துவதற்காகவே புத்திபூர்வமாக இது இயற்றப்பெற்றதென்றும், அப்படியிருந்தும் "பூர்வாசார்யை: கலுஷிதம்" என்று இந்த பாஷ்யத்தின் தொடக்கத்தில் கூறி யிருப்பதிலிருந்து உண்மை வெளியாகிவிடுகிறதென்றும். உண்மையில் ஸ்ரீராமாநுஜர்மேல் பழிசுமத்தும் அப்பய தீக்ஷிதரே இந்த பாஷ்யத்தை 'ஸ்ரீகண்ட₂ர்' என்னும் பெய ரில் எழுதியிருக்கவேண்டும் என்றும் தகுந்த ஆதாரங்களைக் காட்டி இந்நூலில் ஆசிரியர் அதிஸரளமான ஸம்ஸ்க்ருத நடையில் விளக்கியிருக்கிறார். காட்டியிருக்கும் ஆதாரங்களில் சிலவற்றைச் சுருக்கமாகக் காட்டுவோமினி.*

(1) பல பொய்களைக்கூறும் வித்3யாரண்ய ஶங்கரவிஜயம் சங்கரர் நீலகண்டரை ஜயித்தார் என்று கூறுவது நம்பத்தக்கதன்று. (2) பற்பல மதங்களையும், மதாசார்யர்களையும் பெயரிட்டு எடுத்துக் கண்டிக்கும் ஸ்ரீவேதாந்ததேசிகர் வரையிலுமுள்ள விசிஷ்டாத்வைதாசார்யர்களும், அத்வைத த்வைதாசார்யர்களும் ஸ்ரீகண்டபாஷ்யத்தையோ, சைவ விசிஷ்டாத்வைதமதத்தையோ தொடவேயில்லை. எல்லா த3ர்ஶனங்களையும் விளக்கும் மாத4வீய ஸர்வதர்ஶன ஸங்க்ரஹத்திலும் சைவவிஶிஷ்டாத்வைதம் விளக்கப்பெறவில்லை. (3) சைவமதத்துக்கும் ப்ரஹ்மஸூத்ரங்களுக்கும் க2ண்ட்3ய க2ண்ட3நபா4வம் தவிரவேறு உறவுகிடையாது. ப்ரஹ்மஸூத்ரத்தில் நிலைநாட்டப்பெற்றநிமித்தோபாதா3ந ஐக்யமதத்தை சைவமதம் ஒப்புக்கொள்வதில்லை. ஆகையால் சைவ விசிஷ்டாத்வைதபரமான ஸ்ரீகண்ட2பாஷ்யம் போட்டிக்காக ஏற்பட்ட கற்பனையாகவே இருக்கமுடியும். (4) ஸ்ரீவேதாந்த தேசிகர் காலம் வரையிலுள்ள ஆசார்யர்களால் கையாளப்படாத காலாக்3நிருத்3ரோபனிஷத், ராமோத்தரதாபநீயோபனிஷத், ஶிவஸங்கல்போபனிஷத் ஆகியவை ஸ்ரீகண்ட2பா4ஷ்யத்தில் எடுக்கப்பட்டிருப்பதிலிருந்தும் அது நவீனமென விளங்குகிறது. (5) "பூர்வாசார்யை: கலுஷிதம் ஸ்ரீகண்டே2ந ப்ரஸாத்3யதே" [பல பூர்வாசார்யர்களால் கலக்கப்பெற்ற ப்ரஹ்மஸூத்ரம் ஸ்ரீகண்டரால் தெளிவு படுத்தப்படுகிறது] என்று தொடக்கத்தில் எழுதியிருப்பதிலிருந்தும், 'க3தேரர்த்த2வத்த்வம்' என்னும் ஸூத்ரபாஷ்யத்தில ஸ்ரீராமாநுஜ பாஷ்யத்தைக் கண்டித்திருப்பதிலிருந்தும் இது ஸ்ரீராமாநுஜருக்குப் பிற்பட்ட காலத்தில் ஏற்பட்டதே என விளங்குகிறது. (6) வல்லப4மதத்தைச் சேர்ந்த புருஷோத்தமரும், கி3ரித4ரரும் ஸ்ரீகண்ட2ரை ஸ்ரீராமாநுஜமதசோரர் என்றே வழங்குகின்றனர். (7) நடுநிலைநிற்கும் நவீன ஆராய்ச்சியாளர் அனைவரும் ஸ்ரீகண்ட2ரை ஸ்ரீராமாநுஜருக்குப் பிற்பட்டவரென்றே ஒருமிடறாகக் கூறுகின்றனர்.

அப்பயதீக்ஷிதர் ஆதிஶங்கராசார்யரைப் பலவிடங்களில் கண்டித்திருக்கையாலே அவர் அத்வைதிகளால் ஆதரிக்கத் தக்கவரல்லர் என்றும் இந்நூலின் கடைசியில் விளக்கப்பட்டிருக்கிறது. வடமொழியில் வல்ல ஆஸ்திகர்கள் அனைவரும் படித்துப் பயன்பெற வேண்டிய நூல் இது.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்விகள்

[பராபவ-ஞு வைகாசி-மீ ஸுதர்சனத்தில் வெளிவந்த கட்டுரை]

[ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M. A. B. L., அட்வகேட்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்மனம்' ஆசிரியர்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.]

சென்ற விஶ்வாவஸு கார்த்திகை ஸுதர்சனத்தில் "ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா" என்னும் நூல் ஒன்றை வெளியிட்டு, அதைத் தனிப்புத்தகமாகவும் அச்சிட்டு நம் நாட்டுப் பொதுஜனப் பத்திரிகைகள் எல்லாவற்றுக்கும், அத்வைத ஸமூஹத்தைச்சேர்ந்த பலருக்கும் இலவசமாக அனுப்பினோம். வழக்கம்போல் அதை நடுநிலை நின்று விமர்மனம் செய்யும் துணிவு எப்பத்திரிகைக்கும் இல்லை; அதற்கு முக்கிய இலக்கான 'விகடன்' நிர்வாகிகளுக்கும், ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகர் என்று வருடந்தோறும் விகடன் தீபாவளி மலர்களில் கட்டுரை எழுதிவரும் பாலா தாசனுக்கும், மற்றும் அத்வைத ஸமூஹத்திலுள்ள அறிஞர் கள் எவர்க்கும் அதை மறுக்கவும் இயலவில்லை. இந்நூலின் இரண்டாவது பதிப்பும் அச்சாகிவிட்டது. இந்நிலையில், "வி. கோபாலன்" என்பவர் பராபவ சித்திரை கலைமகளில் "சூரிய வழிபாடு" என்னும் கட்டுரையிலும், 24—4—66 தினமணி சுடரில் "கல்வெட்டுகளில் சங்கரர் சுவடுகள்" எனனும் கட்டுரையிலும் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரே எனக்கூறி, அதற்குச் சில சான்றுகளைக் காட்ட முன் வந்திருக் கிறார். அவருடைய கட்டுரைகளில் பிரகிருத விசாரத்திறகு சம்பந்தப்பட்ட பகுதிகளைக் கீழே சிறிய எழுத்தில கொடுத்து அவற்றை ஆராய்ந்துவிட்டு, அத்வைதிகளுககு இவ்விஷயம் மிக முக்கியமானதாகையாலே அவர்களைக் குறித்துச் சில கேள்விகளைத் தொடுககிறோம். இக்கேள்விகளுக்கு பதில்

வருமாகில் அதை வரவேற்கிறோம். இப்பிரசுரமும் இலவசமாக விநியோகிக்கபபடும். உமாபதி ஜகதீசன் (ஔந்த் காம்ப் பூனா) என்னும் அத்வைதமதத்தைச் சேர்ந்த அனபர் நம் முன்நூலை ஆதரித்துக் கலைமகள், விகடன் பத்திரிகைகளுக்கும் நமக்கும கடிதங்கள் எழுதியிருக்கிறார். கலைமகளுக்கு அவர் எழுதியகடிதம் விச்வாவஸு சித்திரை ஸுதர்சனத்தில் தரப்பட்டது. விகடனுக்கு எழுதிய கடிதம் இக்கட்டுரையின் இறுதியில தரப்படும்.

### வி. கோபாலனின் கலைமகள் கட்டுரைப் பகுதி

மன்னுயிர்களின் சக்திக்கும் விருப்பத்திற்கும் ஏற்ப இறை வணக்கம் புரியச் சங்கர பகவத் பாதர்கள் ஷண்மதங்கள் என்னும் ஆறு மெய்யான முறைகளை வகுத்தருளினர். காணபத்தியம், சாக்தம், சைவம், கௌமாரம், வைணவம், ஸௌரம் என்பன அந்த ஆறு வழிபாட்டு நெறிகள். கணபதி, சக்தி, சிவன், குமரன், அனைவரும் மோட்சப் பேரின்பப் பேற்றை அளிக்கும் சிவசக்தியின் பல வடிவங்களே என்பதைப் பண்டை நூல்கள் கூறுகின்றன. பிரமன் படைத்த உலகைக்காத்து மக்களுக்கு மங்கல வாழ்வு தருபவர் திருமால். உலகுக்கு இன்றியமையாத ஒளியூட்டி உயிரூட்டுபவன் சூரியன். இருளை அகற்றி ஒளிபொழியும் சூரியனும், மங்கல வாழ்வு தரும் திருமாலும், மோட்சப்பேற்றை அளிக்கும் சிவசக்தியும் இன்றி உலகு இல்லை ; உயிர்கள் இல்லை.

*இனி, இதுபற்றி ஆராய்வோம். ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார் என்று திருப்பித்திருப்பி எழுதுவதால் மாத்திரம் இப்பொய் மெய்யாகிவிடாது. அவருடையதென்று அனைவருமிசைந்த நூல்களிலிருந்து மேற்கோள் காட்டி இதை நிரூபிக்க வேண்டும். அவர் பெயரில் வழங்கிவரும் தேவதாஸ்துதி நூல்களில் எதுவும் ஐந்நூறு வருடங்கட்கு முன் இருந்த எவராலும் கையாளப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. ஆகையால் இவற்றை அவர் இயற்றினர் என்று கொள்ள இடமேயில்லை. ப்ரஸ்தாநத்ரய பாஷ்யம் என்று அத்வைதிகளால் கொண்டாடப்படும் உபனிஷத் ப்ரஹ்ம ஸூத்ர கீதாபாஷ்யங்கள் ஆதிசங்கரருடைய காலமான எட்டாம் நூற்றாண்டு முதலே அத்வைதிகளாலே வார்த்திகம், டீகை முதலானவையிட்டுப் போற்றப்பெற்று வந்துள்ளன. பத்தாம் நூற்றாண்டு முதலே ஸ்ரீயாமுநமுனி (ஆளவந்தார்) ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீவாத்ஸ்யவரதாசார்யர் (நடாதூரம்மாள்) ஸ்ரீஸுதர்சனபட்டர் (ச்ருதப்ரகாசிகாசார்யர்), ஸ்ரீவேதாந்த தேசிகர் முதலான விசிஷ்டாத்வைதாசார்யர்களின் நூல்*

களிலே எடுத்துக் கண்டிக்கப்பெற்று வந்துள்ளன. பனிரண்டாம் நூற்றுண்டு முதல் மத்வமத ஆசார்யர்களாலும் எடுத்துக்கண்டிக்கப்பெற்று வந்துள்ளன. சங்கரருடைய ஸஹஸ்ரநாமபாஷ்யமும் பனிரண்டாம் நூற்றுண்டிலிருந்த ஸ்ரீபராசரபட்டரால் தம் பாஷ்யத்தில் ஆங்காங்கு மறுக்கப்பட்டிருக்கிறது. சங்கரர் பெயரில் வழங்கும் துதிநூலகள் எதுவும் ஐந்நூறு வருடத்திற்கு முன் இருந்த எவராலும் எடுத்துக் கையாளப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இதிலிருந்தே ஆதிசங்கரருககுப் பல நூற்றுண்டுக்குப்பின். அவர் பெயரில் ஏற்பட்ட மடத்தின் தலைவர்களாக இருந்த மடாதிபதிகளாலேயே அவருடைய பெயரில்வழங்கும் துதிநூலகளில பெரும்பாலானவை இயற்றப்பெற்றிருக்கவேண்டும் என று நடுநிலையாளர்களுக்கு நன்கு விளங்கும். ஆக, ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களையும். ஸஹஸ்ரநாமபாஷ்யத்தையும் கொண்டே சங்கரரின் கடவுட்கொள்கையை நிர்ணயிக்கவேண்டும். அப்படிப்பார்க்கும்போது ஆதிசங்கரர் நாராயணன் ஒருவனையே ஸகுணப்ரஹ்மமாகக கொண்டிருந்தார் என விளங்கும். இதை ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா' என்னும் நமது முன் நூலில் நிலைநாட்டியிருக்கிறேம். இதற்கு முரணுக ஐந்நூறுவருடங்கட்குள் ஏற்பட்ட துதிநூல்களைகொண்டும் பொய்கள் நிறைந்த சங்கரவிஜயம் முதலான நூல்களைக் கொண்டும் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் என்று எழுதுவது அறிவுடைமையாகாது. 'மன்னுயிர்களின் சக்திக்கும .. ஏற்ப' என்று எழுதுகிறுர் வி கோபாலன். அப்படியாளுல் உயிர்களின் சக்தியின் ஏற்றந்தாழ்வையொட்டி ஷண்மதங்களில் எவ்விதமான ஏற்றத்தாழ்வு ஒப்புக்கொள்ளப் படுகிறது என விளக்கவேண்டும். சிவசக்தியே மோக்ஷப்பேற்றை அளிப்பதாக எழுதுகிறுர் கோபாலன். விஷ்ணுவை உபாஸிக்கும் வைஷ்ணவர்களுக்கே நிலையான மோக்ஷப்பேறு உண்டென்றும். மற்ற தேவதைகளை உபாஸிப்பவர்களுக்கு அற்பபலனே என்றும் ஆதிசங்கரர் கீதாபாஷ்யத்தில் கல்வெட்டாகக் காட்டியிருப்பதற்கு முரணுயிருக்கிறது இது. இவ்விஷயத்தையும். கீதாபாஷ்யபங்கதிகளை முன் நூலில் எடுத்துக்காட்டி நிலைநாட்டியிருக்கிறேம். ஆக. கோபாலன் எழுதுவது அவருடைய கற்பனையில் உதித்ததேயொழிய, ஆதிசங்கரரின் மதமல்ல என்று நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். சாஸ்திரங்களையும். சங்கரரின் கிரந்தங்களையும்

வருமாகில் அதை வரவேற்கிறோம். இப்பிரசுரமும் இலவசமாக விநியோகிக்கபபடும். உமாபதி ஜகதீசன் (ஓளந்காம்ப் பூறு) என்னும அத்வைதமதத்தைச் சேர்ந்த அன்பர் நம் முன்நூலை ஆதரித்துக் கலைமகள், விகடன் பத்திரிகைகளுக்கும் நமக்கும கடிதங்கள் எழுதியிருக்கிறார். கலைமகளுக்கு அவர் எழுதியகடிதம் விச்வாவஸு சித்திரை ஸுதர்சனத்தில் தரப்பட்டது. விகடனுக்கு எழுதிய கடிதம் இக்கட்டுரையின் இறுதியில தரப்படும்.

### வி. கோபாலனின் கலைமகள் கட்டுரைப் பகுதி

மன்னுயிர்களின் சக்திக்கும் விருப்பத்திற்கும் ஏற்ப இறை வணக்கம் புரியச் சங்கர பகவத் பாதர்கள் ஷண்மதங்கள் என்னும் ஆறு மெய்யான முறைகளை வகுத்தருளினார். காணுபத்தியம், சாக்தம், சைவம், கௌமாரம், வைணவம், ஸௌரம் என்பன அந்த ஆறு வழிபாட்டு நெறிகள். கணபதி, சக்தி, சிவன், குமரன், அனைவரும் மோட்சப் பேரின்பப் பேற்றை அளிக்கும் சிவசக்தியின் பல வடிவங்களே என்பதைப் பண்டை நூல்கள் கூறுகின்றன. பிரமன் படைத்த உலகைக்காத்து மக்களுக்கு மங்கல வாழ்வு தருபவர் திருமால். உலகுக்கு இன்றியமையாத ஒளியூட்டி உயிரூட்டுபவன் சூரியன். இருளை அகற்றி ஒளிபொழியும் சூரியனும், மங்கல வாழ்வு தரும் திருமாலும், மோட்சப்பேற்றை அளிக்கும் சிவசக்தியும் இன்றி உலகு இல்லை ; உயிர்கள் இல்லை.

*இனி இதுபற்றி ஆராய்வோம. ஆதிசங்கரர் ஷண்மகஸ்தாபனம் செய்தார் எனறு திருப்பித்திருப்பி எழுதுவதால் மாத்திரம் இப்பொய் மெய்யாகிவிடாது. அவருடையதென்று அனைவருமிசைந்த நூல்களிலிருந்து மேற்கோள் காட்டி இதை நிரூபிக்க வேண்டும். அவர் பெயரில் வழங்கிவரும் தேவதாஸ்துதி நூல்களில் எதுவும் ஐந்நூறு வருடங்கட்கு முன் இருந்த எவராலும் கையாளப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. ஆகையால் இவற்றை அவர் இயற்றினார் என்று கொள்ள இடமேயில்லை. ப்ரஸ்த₂ானத்ரய ப₄ாஷ்யம் என்று அத்வைதிகளால் கொண்டாடப்படும் உபனிஷத் ப்ரஹ்ம ஸூத்ர கீ₃தாபாஷ்யங்கள் ஆதிசங்கரருடைய காலமான எட்டாம்நூற்றுண்டு முதலே அதவைதிகளாலே வார்த்திகம், டீகை முதலானவையிட்டுப் போற்றப்பெறறு வந்துள்ளன. பத்தாம் நூற்றுண்டு முதலே ஸ்ரீயாமுநமுனி (ஆளவந்தார்) ஸ்ரீராமாநுஜர், ஸ்ரீவாத்ஸ்யவரதாசார்யர் (நடாதூரம்மாள்) ஸ்ரீஸுதர்சனபட்டர் (ஸ்ருதப்ரகாசிகாசார்யர்), ஸ்ரீவேதாந்த தேசிகர் முதலான விசிஷ்டாத்வைதாசார்யர்களின் நூல்*

களிலே எடுத்துக் கண்டிக்கப்பெற்று வந்துள்ளன. பனிரண்டாம் நூற்றுண்டு முதல் மத்வமத ஆசார்யர்களாலும் எடுத்துக்கண்டிக்கப்பெற்று வந்துள்ளன. சங்கரருடைய ஸஹஸ்ரநாமபாஷ்யமும் பனிரண்டாம் நூற்றுண்டிலிருந்த ஸ்ரீபராசரபட்டரால் தம் பாஷ்யத்தில் ஆங்காங்கு மறுக்கப்பட்டிருக்கிறது. சங்கரர் பெயரில் வழங்கும் துதிநூல்கள் எதுவும் ஐந்நூறு வருடத்திற்கு முன் இருந்த எவராலும் எடுத்துக் கையாளப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இதிலிருந்தே ஆதிசங்கரருக்குப் பல நூற்றுண்டுக்குப்பின் அவர் பெயரில் ஏற்பட்ட மடத்தின் தலைவர்களாக இருந்த மடாதிபதிகளாலேயே அவருடைய பெயரிலவழங்கும் துதிநூலகளில் பெரும்பாலானவை இயற்றப்பெற்றிருக்கவேண்டும் என நடுநிலையாளர்களுக்கு நன்கு விளங்கும். ஆக, ப்ரஸ்தான த்ரய பாஷ்யங்களையும் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தையும் கொண்டே சங்கரரின் கடவுட்கொள்கையை நிர்ணயிக்கவேண்டும். அப்படிப்பார்க்கும்போது ஆதிசங்கரர் நாராயணன் ஒருவனையே ஸகுணப்ரஹ்மமாகக் கொண்டிருந்தார் என விளங்கும். இதை ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா என்னும் நமது முன் நூலில் நிலைநாட்டியிருக்கிறோம். இதற்கு முரணாக ஐந்நூறுவருடங்கட்குள் ஏற்பட்ட துதிநூல்களைக்கொண்டும் பொய்கள் நிறைந்த சங்கரவிஜயம் முதலான நூல்களைக் கொண்டும் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தார் என்று எழுதுவது அறிவுடைமையாகாது. 'மன்னுயிர்களின் சக்திக்கும .. ஏற்ப' என்று எழுதுகிறார் ஸ்ரீ கோபாலன். அப்படியானல் உயிர்களின் சக்தியின் ஏற்றதாழ்வையொட்டி ஷண்மதங்களில் எவ்விதமான ஏற்றத்தாழ்வு ஒப்புக்கொள்ளப்படுகிறது என விளக்கவேண்டும். சிவசக்தியே மோக்ஷப்பேற்றை அளிப்பதாக எழுதுகிறார் கோபாலன். விஷ்ணுவை உபாஸிக்கும் வைஷ்ணவர்களுக்கே நிலையான மோக்ஷப்பேறு உண்டென்றும். மற்ற தேவதைகளை உபாஸிப்பவர்களுக்கு அற்பபலனே என்றும் ஆதிசங்கரர் கீதாபாஷ்யத்தில் கல்வெட்டாகக் காட்டியிருப்பதற்கு முரணுயிருக்கிறது இது. இவ்விஷயத்தையும். கீதாபாஷ்யபங்க்திகளை முன் நூலில் எடுத்துக்காட்டி நிலைநாட்டியிருக்கிறோம். ஆக, கோபாலன் எழுதுவது அவருடைய கற்பனையில் உதித்ததேயொழிய, ஆதிசங்கரரின் மதமல்ல என்று நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். சாஸ்திரங்களையும். சங்கரரின் கிரந்தங்களையும்

ஆராய்ந்தால் சூரியன், முருகன், கணபதி, சிவசக்தி, சிவன், விஷ்ணு என்னும் தெய்வங்களில் முந்தியவர்கள் பிந்தியவர்களைககாட்டிலும தாழ்ந்தவர்கள் என விளங்கும். ஆக, இந்த ஆறுதெய்வங்களேயும பரமபொருளாகக்கொண்ட ஆறு மதங்களும் உண்மையாயிருககமுடியாது. இப்படி ஆறு மதங்களை ஒப்புக்கொண்டாலும், முன் எடுதத கிரமத்தில முந்தியமதம் பிந்தியதைவிடத்தாழ்ந்ததென்றே கொள்ளவேண்டும். படிப படியாக முன முன மதங்களிலிருந்து பின் பின மதங்களுககு ஏறிக் கடைசியில வைஷ்ணவனுகியே மோக்ஷதையடைகிருன் ஜீவன் என்றே கொள்ளவேண்டும்.

"ஆரோக்₃யம் ப₄ாஸ்கராதி₃ச்சேₒத் த₄நமிசசேₒத் ஹுதா ஶநாத் ।
ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சேₒத மோக்ஷமிச்சேₒத ஜநார்தநாத்₃॥"

[சூரியனிடமிருந்து ஆரோக்யத்தையும், அக்னியிடமிருந்து பணத்தையும், சிவனிடமிருந்து பரமாத்ம ஞானத்தையும், ஜனார்த்தனனிடமிருந்து மோக்ஷத்தையும் விரும்பக்கடவன்.]

"ஸூர்யஸ்யைவ து யோ ப₄கத: ஸபதஜந்மாந்தரம நர: ।
தஸ்யைவ து ப்ரஸாதே₃ந ருத்₃ரப₄க்த பரஜாயதே ॥
ஶங்கரஸ்ய து யோ ப₄க்த: ஸப்தஜந்மாந்தரம் நர: ।
தஸ்யைவ து ப்ரஸாதே₃ந விஷ்ணுப₄க்த: ப்ரஜாயதே ॥"

[ஏழுஜன்மம் சூரியனுககு பக்தனுயிருப்பவன், அவனருளால் சிவபக்தனுகப் பிறககிருன். ஏழுஜன்மம் சிவபக்தனுயிருபபவன் அவனருளால் விஷ்ணுபக்தனுகிருன்]

என்னும் ஸுப்ரஸித்தமான ப்ரமாணங்களுககும் சங்கருடைய ப்ரஸ்த₂ானத்ரய ஸஹஸ்ரநாம பாஷ்யங்களுக்கும் இதுவே ஒத்திருக்கும். இதை அத்வைதிகள் ஏற்றே தீரவேண்டும். இல்லாவிடில் ஆதிசங்கரரின் ப்ரஸ்தானதரய ப₄ாஷ்யங்களுக்கும், முன் நூலில எடுத்த வார்த்திகம், டீகை முதலானவற்றுக்கும ஜலதர்ப்பணமாவது செய்தாகவேண்டும். இனி, வி. கோபாலனின் தினமணிச் சுடர்க்கட்டுரையைச் சிறிய எழுத்துக்களில் பகுதி பகுதியாகத் தந்து, அதை ஆராய்வோம்.

உலகில் அறியாமை இருள் விலக சமயவானத்தில் சன்மார்க்க விடிவெள்ளியாகத் தோன்றி, அருள் ஒளி வீசி, அமுத மொழி பேசி புண்ணிய பாரத பூமியில் சமய வளர்ச்சிக் களங்களான ஐந்து

மடாலயங்கள் ஸ்தாபித்து, நாடெங்கும் பெருமைமிக்க தேவாலயங்களைத் தரிசித்து, பக்தி மணம் கமழும் பாசுர மலர்கள் பொழிந்து, "ஷண் மதங்கள்" என்னும் ஆறு மெய்யான வழிபாட்டு முறையை அருளிய, காலமும் ஞாலமும் போற்றும் சங்கர பகவத்பாதாள் பற்றிய பல சுவை மிக்க செய்திகளைப் பண்டைய மன்னர்கள் படைத்த கலைச் சின்னங்களிலிருந்தும் கல் வெட்டுக்களிலிருந்தும் அறிகிறோம். சங்கரர் பற்றிய கல்வெட்டுச் செய்திகள் கடல் கடந்து காம்போஜம், பர்மா, மலேயா ஆகிய நாடுகளிலும் தவ முனியின் தத்துவ நெறிகள் பிற நாடுகளிலும், போற்றப்பெற்ற பெருமை புலப்படும். கேரள பூமியில் காலடியில் அவதரித்த சங்கரர் காலம்பற்றி பலவிதக் கருத்துக்கள் உள்ளன. எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அவர் வாழ்ந்திருக்க வேண்டும் என்று பொதுவாகக் கருதப்படுகிறது.

*ஆதிசங்கரர் மடாலயங்களை ஸ்தாபித்தாரா என்பது பற்றியே நடுநிலைநிற்கும் ஆராய்ச்சியாளர்கள் ஐயுறுகிறார்கள். இப்போது காணும் மடங்கள் அனைத்துமே அவர் வழி வந்தவர்களால் பிற்காலத்தில் நிறுவப்பட்டவை என்பது ஆராய்ச்சியாளர் துணிவு. "பக்தி மணம் கமழும் பாசுர மலர்களைப் பொழிந்தார் என்றும், "ஷண்மதங்கள் என்னும் ஆறு வழிபாட்டுமுறைகளை அருளினார்" என்றும் எழுதியிருப்பதற்குப் பண்டை நூல்களில் யாதொரு ஆதாரமுமில்லை. ஐந்நூறு வருடங்கட்குள் ஏற்பட்ட கற்பனையேயிது என முன் நூலில் ஸ்தாபித்தோம். நிற்க;*

*இககட்டுரையில் சங்கரரின் காலம் 8-ம் நூற்றாண்டின் முற்பகுதி என்று ஓராதாரமும் காட்டாமல் எழுதப்பெற்றுள்ளது. கி.பி. 788முதல் கி.பி. 820வரை சங்கரருடைய காலம் என்று ப்ரமாணங்காட்டி முன் நூலில் நிரூபித்தோம். தினமணிச்சுடர்க் கட்டுரையைக்கண்ட "கி. ரா" எனபவர் "ஸ்ரீசங்கரருடைய கால நிர்ணயம்" என்னும் கட்டுரையொன்றை 1-5-66 சுடரில் வெளியிடுவித்திருக்கிறார். அதில் ஸாரமாக ஒரு சான்றையும் காட்டாமல் "சங்கரருடைய ஜனன காலம் இன்றைக்கு சுமார் இரண்டாயிரத்து ஐம்பத்தொரு ஆண்டுகளுக்கு முன்னர்" என்று எழுதுகிறார். "சிவ ரஹஸ்யம்" என்ற புராண நூல் கி. பி. இரண்டாவது நூற்றாண்டில் ஏற்பட்டது என்றும், அதில் சங்கரரைப்பற்றிக் கூறியுள்ளதால் சங்கரர் இரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் என்றும் எழுதுகிறார். "சிவரஹஸ்யம்" இன்னும்*

*அச்சாகவில்லையென்றும், அதன் பிரதியொன்றில் உள்ள குறிப்புகளிலிருந்து அதன் காலத்தை நிர்ணயிககலாம் என்றும் எழுதுகிறார். சிவரஹஸ்யம் என்பது பதினெட்டு மஹாபுராணங்களில் சேர்ந்ததலல. ஆயிரம் வருடத்திற்கு முற்பட்ட எந்த நூலிலும் மேற்கோளாகக் காட்டப்பட்டது மல்ல; ஆகையால் அது ஆயிரம் வருடங்களுக்குள் கற்பிக்கப் பட்டதே என நிர்ணயிக்கலாம். இத்தகைய ஒரு சுவடியில் சில குறிப்புகளை எழுதிவைத்திருப்பதால் மாத்திரம் அது பண்டை நூலாகிவிடாது.*

சங்கரர் ஜீவியகாலமாகிய எட்டாம் நூற்றுண்டின் முற்பகுதியில் காஞ்சியை ஆண்டவன் பல்லவ பெருவேந்தன் ராஜசிம்மனுகும். (கி பி. 700-728) அம்மன்னர் எழுப்பிய காஞ்சி கைலாசநாதர் ஆலயத்தில் காணப்படும் ராஜசிம்மனின் குணுதிசயத்தைக் குறிப்பிடும் கல்வெட்டுக்களில் ஒன்று "சங்கரபக்த" என்று காண்பது இங்கு விசேஷ முக்கியத்துவம் உடையது. ஆதிசங்கரர் புரிந்த அற்புத சமயப்பணிகளுள் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களுக்கு உற்சாகம் தரும் அரும்பணி "ஷண்மத ஸ்தாபன"மேயாகும். ஆதிசங்கரர் அவதரித்த எட்டாம் நூற்றுண்டளவில், பாரதபூமியெங்கும் சமயப்பூசல்களும், கருத்து வேற்றுமைகளும் மலிந்திருந்தன. அவரவர் தமது விருப்பம்போல் ஒரு கடவுளைப் போற்றுவதும், மற்ற கடவுளைத் தூற்றுவதுமான ஓர் அமைதியற்ற நிலைமை நிலவியது. இந்நிலையில் பிற மதங்கள் ஆதிக்கம் பரவுவது சுலபமாகவே இருந்திருக்கவேண்டும். இத்தருணத்திலேயே பகவத்பாதாள், காணுபத்யம், சைவம், சாக்தம், கௌமாரம், வைஷ்ணவம், சௌரம் எனும் ஷண்மதங்களையும் ஆறு குற்றமற்ற மெய்யான வழிபாட்டு முறைகளையும் உலகுக்கு அருளினுர் சங்கரர் புனருத்தாரணம் செய்த இந்த ஷண்மதக் கடவுளர்கள் கி. மு. கி. பி என்று வரையறுத்துச் சொல்லக்கூடிய காலவரம்புக்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலேயே வழிபடப்பட்டுவந்திருக்கின்றனர். வேதங்கள், புராணங்கள், இதிகாசங்கள், இலக்கியங்கள் போன்ற துறைககள் மூலமும் இதனை மெய்ப்பிக்கலாம். பிறமதப் புரையோடல்களாலும், இந்துமத உட்பூசல்களாலும், வலுவிழந்து பொலிவிழந்து தலைமையிழந்துகிடந்த இறைவழிபாட்டு முறைமைகளை சங்கரர் "ஷண்மத ஸ்தாபன" மூலம் ஒன்றுபடுத்தி ஓங்கச் செய்தார். இந்த அரும்பணியாற்றிய அருள்முனியை, "ஷண்மத ஸ்தாபனுச்சாரியார்" என்று வரலாறு போற்றுகிறது.

*"ஶங்கரபக்த" என்பது ஆதிசங்கரபக்தரைக் குறிக்க வேண்டுமாகில், "ஶங்கராசார்ய பக்த" என்று இருந்திருக்க*

வேண்டும். அப்படியில்லாமையாலே "சிவபக்தன்" என்னும் பொருளையே தரும். ஆகையால் ராஜசிம்மனுக்கும் ஆதி சங்கரருக்கும் முடிச்சுப்போட முயல்வது பொருத்தமற்றதே யாகும். "ஷண்மதக் கடவுளர்கள் கி.மு. கி.பி. என்று வரை யறுத்துச்சொல்லக்கூடியகாலவரம்புக்குப் பலஆயிரம்ஆண்டு களுக்கு முற்பட்ட காலத்திலேயே வழிபடப்பட்டு வந்திருக் கின்றனர்' என்று எழுதிய பின்பு, சங்கரர் இக்கடவுள் வழி பாடுகளை உண்டாக்கினர் எனக் கூறமுடியாது. 'நலிந்து கிடந்தவற்றை நிலை நிறுத்தினர்' என்று கூறுகிறோம் எனில், இவ்வாறு கடவுளர்களை மாத்திரம் பொறுக்கியெடுக்கக் காரணம் என்ன? என்னும் கேள்வியெழுகிறது. மேலும், "பீ₄ஷோதே₃தி ஸூர்ய:" முதலான வேதவாக்யங்களின்படி பரம்பொருளுக்குபயந்துதொழில்புரியும்சூரியனைச் சேர்த்துக் கொண்டவர், அவனிலும் மேம்பட்ட இந்திரனையும், முருகன், கணபதி சிவசக்தி, சிவன், ஆகியவர்களையும் படைத்த பிரமனையும் ஏன் கைவிட்டார் என்னும் கேள்வியும் எழு கிறது. சிவனுக்காக ஒரு மதத்தை ஸ்தாபித்தவர் அவன் மனைவிககு ஒரு மதத்தையும், இரு பிள்ளைகளுக்கு இரு மதங்களையும ஸ்தாபிக்க முடியுமா? அவசியந்தானுண்டா? என்னும் கேள்விகளும் எழுகின்றன. இவற்றுக்கு அத் வைதிகள் பதிலுரைக்கக் கடமைப்பட்டவர்கள். இவற்றை யெல்லாம் சிந்தித்து,சங்கரரின் ப்ரஸ்த₂ானத்ரயப₄ாஷ்யங்களை யும் ஆராய்ந்தால் சங்கரர் இவ்வாறு மதங்களை ஸ்தாபித் திருக்க முடியாது என விளங்கும்.

சங்கரர் அருளிய ஷண்மத வழிபாட்டில், காணபத்யம் என்பது கணபதியை வழிபடும் நெறி, சைவ நெறியில் சிவபெருமான் தலை மைக் கடவுள். சக்தியை வழிபடும் நெறி சாக்தம், குமரனுக்குரிய வழிபாட்டு நெறி கௌமாரம், வைஷ்ணவம் விஷ்ணுவை வழிபடும் நெறி. சௌரம் சூரிய வழிபாட்டு நெறி.

"சைவநெறியில் சிவபெருமான் தலைமைக் கடவுள்" என்று எழுதியவர், மற்ற மதங்கள் அந்தந்த தெய்வங்களை "வழிபடும நெறி" என்று எழுதியிருப்பதின் கருத்து விளங்க வில்லை. வெறும் வழிபாட்டு நெறி ஒரு மதமாகாது. சைவத் தில் சிவபெருமான் 'தலைமைக் கடவுள்' என்றதுபோல, சாக்தத்தில் சிவசக்தி தலைமைக் கடவுள் என்று கொள்ள வேண்டும்; கா₃ணபத்தியத்தில் கணபதி தலைமைக் கடவுள் என்று கொள்ளவேண்டும். கௌமாரத்தில் குமரன் தலை

மைக கடவுள் என்று சொள்ளவேண்டும். புருஷனைத் தலைமைக் கடவுளாககொண்ட மததனதையும, மனைவியையும் இரு பிள்ளைகளையும தலைமைக் கடவுளராகக் கொண்ட மதங்களையும் எப்படி ஒருவரே ஸ்தாபிகக முடியும? இது எல்லாரும் சிரிக்கத்தக்கதாயன்றோ இருக்கிறது. இதற்காவது பதில்சொல்லவேண்டாமா?

மேலும், ஸ்ரீரங்கம் வாணிவிலாஸ் பிரஸ்ஸில் 1935ல ஆதிசங்கரருடைய சரித்திரம் ஒன்று பதிப்பிக்கப்பெறறுள்ளது. அதில், பக்கம் 96. 97. 98ல ஆதிசங்கரரின வாககினால மற்ற மதங்கள் அடைந்த துர்ககதியை வித்யாரண்யர் விவரித்திருப்பதாக இரண்டு ஶ்லோகங்கள் தரபபெற்றுள்ளன. அந்த ஶ்லோகங்களின் பொருள்,- 'காணுதர்களுடைய வாக்கைப் பரிஹாஸத்திற்குககூட மதிபபாரிலலை, காபாலி மதம் எங்கேயோ ஓடி ஒளிந்துபோய்விட்டது. சைவமதமும் அசிவமாக ஆயிற்று. ஆர்ஹதமதம் நிந்தனைக்குள்ளாயிற்று. சாக்தமதம் துாக்கதியடைந்தது. வைஷ்ணவமதத்தைப் போஷணம செய்வாரில்லை. பௌததர்களுடைய பிரஸகதியே அற்றுப்போயிற்று. அவாகளை அனுஸரிததுச் சென்றது நையாயிகர்களுடைய மதமும். கௌமாரிலரால விருததி ஆக்கப்பட்ட கர்மமதத்தைப் பற்றியும பேசுவார் இலலை. கபிலரால் போஷிக்கப்பட்ட கபிலமதமும் லயத்தையடைந்தது இவைகளுக்கெல்லாம் காரணம், நிர்தயவுடன் துர்மதங்களையெல்லாம் பிளந்தெறிந்த ஸ்ரீசங்கரருடைய ஒப்பிலலாத ஸூகதிகளேயாம்'' என்று தரபபெற்றுள்ளது. இதிலிருந்து சாகத சைவ வைஷ்ணவ மதங்கள் சங்கரரால கண்டிககப்பட்டு மலினமாயின என்பது ப்ராசீனரான அத்வைதாசார்யர்களில் ஒருவரான வித்யாரண்யரின் கருத்து என விளங்குகிறது. அப்படியிருக்கும்போது இம்மதங்களை ஆதி சங்கரர் நிறுவினர் என்றும, ஸ்தாபிததார் எனறும் எழுதுவது எப்படி ஒட்டும் என்னும் கேள்விக்கு பதில சொலல வேண்டிய கடமையும் அத்வைதிகளுக்கு உண்டு. இக் கேள்வியை அத்வைதமதத்தைச்சேர்ந்த ''ஸ்ரீ. T. K. உமாபதி ஜகதீசசர்மா'' எனனும அன்பர் விகடனைககுறித்துக கேட்டிருப்பதை இறுதியில் கொடுககபபடும் கடிதத்திலிருந்து அறியலாம்.

சங்கரின் ஷண்மத வழிபாட்டு நெறி, பண்டைய கலைச்சின்னங்கள் பலவற்றில் மேற்கொள்ளப்பெற்றுக் காண்கிறது. திருச்சி கீழ்க்

குடைவரைக் கோயில் ஷண்மதக் கடவுள்களுக்காக அமைக்கப்பட்டிருக்கிறது என்று கருதப்படுகிறது.

சங்கரர் பல்லவப்பெருவேந்தன் ராஜசிம்மனுக்குச் சமகாலத்தவராக இருந்திருக்கவேண்டும் என்று முன்னமே குறிப்பிட்டோம். மகாபலிபுரத்துக் கலைச்சின்னங்கள் அனைத்தையும் ராஜசிம்மனே படைத்திருக்கவேண்டுமென்று சமீபத்தில் வற்புறுத்தப்படுகிறது. இதனை ஏற்றுக்கொண்டால் இதுவரை எதற்காக அவை படைக்கப்பட்டன என்ற புதிர் விளங்காதிருக்கும் பஞ்சபாண்டவ ரதங்களின் மர்மத்துக்கு ஒரு திறவுகோல் கிடைத்திருக்கிறது மகாபலிபுரத்துச் சிற்பச்செல்வங்கள் முற்றுப்பெருத நிலையில் காண்பினும் அவை சங்கரரின் ஷண்மதக்கொள்கைத் தளத்திலே எழுப்பப்பெற்றவை என்பது நம் கருத்து. "பஞ்சபாண்டவ ரதங்கள்" என்று தவருகச் சொல்லப்பெறும் ஐந்து ரத வரிசைகள் பஞ்சபாண்டவர்களுக்காக வழங்கப்பட்டதல்ல என்பதை அனைவரும் ஏற்கின்றனர். பின்னர், அவை எதற்காக வழங்கப்பட்டன என்ற இயல்பாக எழும் கேள்விக்குத் திட்டவட்டமான பதில் இதுவரை கிடைக்கவில்லை. அந்த ரதங்கள் ஷண்மதக் கடவுளர்களான கணபதி, சிவன், சக்தி, குமரன், விஷ்ணு, சூரியன் ஆகியோர்க்காகவேஅமைக்கப்பட்டிருக்க வேண்டும். இந்தக் கூற்றை உறுதி செய்வனபோன்று அந்த ரதங்களுக்கு எதிரே சிவனின் வாகனம் நந்தி, சக்தியின் வாகனம் சிம்மம், குமரனின் வாகனம் யானை (முருகனுக்கு மயில் வாகனமாயினும் மிகப் பழமையான நூல்களில் கந்தன் யானைவாகனராகவே குறிப்பிடப்பெறுகிருர்) ஆகியவை காணப்படுகின்றன. திரௌபதி ரதம் என்று கூறப்படும் ரதம். ஆகம நூல்களில் விவரிக்கப்படும் சக்தி ஆலயம்போன்றே அமைந்து காண்கின்றது. இந்த ரதங்கள் ஆங்காங்குள்ள சிறு குன்றுகளைக் குடைந்து வழங்கப்பெற்றவையாதலால் அந்தந்த தெய்வங்களுக்குரிய வாகன அமைப்பு முறைப்படி நேர் எதிராகக் காணப்படாதது இயல்பே. மேலும் ஷண்மதக் கடவுளர்களுக்கு ஆறு ரதமல்லவா வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்ற கேள்வி எழுகிறது. அந்த ரதங்கள் அவ்விடத்திலிருந்த பாறைகளில் குடைந்தவையே அன்றி, திட்டமிட்டு எழுப்பப்பெற்றவை அல்ல; ஆதலால், ஷண்மதத்தின் ஆருவது நெறியின் நாயகனுக்கு பிறிதொரு இடத்தில்—வளையாங்குட்டை ரதம் போன்று—வடிக்கப்பட்டிருக்கக் கூடும். ஆனல் இந்த அற்புதப்பணி பூர்த்தி பெருததால் அதன் ஷண்மதப் பிரதிபலிப்பும் பூர்த்தி பெறவில்லை. ஆனல் அந்த நோக்கம் பூரணமானதே.

பல்லவர் சோழர் நிர்மாணித்த பல ஆலயங்களிலும் சங்கரரின் ஷண்மதபோதனை செல்வாக்குப் பெற்றிருக்கின்றது. மூலத்தானம் சிவபெருமானுக்காக உள்ள ஓர் ஆலயத்தில் பின்புறத்தில் விஷ்ணு

வின் திருமேனியும், மற்றும் சக்தி, கணபதி, குமரன், நவக்கிரகங்களில் எண்மர் சூழ சூரியன் ஆகிய இறைவடிவங்களும் முக்கியமான அம்சங்களாகும். இங்ஙனம் சங்கரர் வகுத்த ஷண்மத நெறி தேவாலய அமைப்பில் பூர்ணமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது.

*முற்கூறிய காரணங்களிலிருந்து ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம செய்திருக்க இடமேயில்லையென்று விளங்கும். கோவிலகளில இந்த ஆறு கடவுளர்களின் சிலைகள் மாத்திர மல்ல; மற்றும் பிரமன், இந்திரன் முதலான எததனையோ கடவுளர்களின் சிலைகளும் உள்ளன. அப்படியிருக்கும்போது தங்களுடைய கற்பனைக்கு சாதகமாகத் தாங்களே இந்த ஆறு கடவுளர்களின் சிலைகளை எடுத்துககொண்டு 'ஷண்மதக் கடவுளர்' 'ஷண்மதக் கடவுளர்' என்று பன்னிப்பன்னி எழுதுவதினால எதையும ஸாதிககமுடியாது. மாமல்லபுரச் சிற்பங்கள் 'மாமல்லன்' எனப் பெயர் பெற்ற நரசிம்ம பல்லவன் செய்தவை என்று ஸுப்ரஸித்தமாயுள்ளதை மாற்ற முயல்வதும, 'பஞ்சபாண்டவர் ரதம்' என்று வழங்கப் படுகிற ஐந்து ரதங்களை ஷண்மத ரதமாக்க அரும்பாடுபடுவதும், ஆறுவது ரதத்திற்கு இடம் தேடுவதும் நகைக்கத்தக்கதாயுள்ளது. மூன்று கடவுளர்களுக்கு வாஹனத்தைக் கண்டுபிடித்தவர் மற்ற மூன்று கடவுளர்களின் வாஹனங்கள் என்ன ஆயிற்றென்று விளககவில்லையே! பஞ்சபாண்டவ ரதங்களைத் திரிமூர்த்திகளுக்கும், கிறிஸ்தவர்களின் பரமபிதாவுக்கும் இஸ்லாமியர்களின் அல்லாவுக்குமான ரதங்கள் என்று ஆராய்ச்சி செய்து முடிவுகட்டினாராம் ஒருவர்! அவ்வாராய்ச்சியிலாவது ஐந்து ரதங்கள் என்னும் எண்ணிக்கை ஒத்திருக்கிறது. இவ்வாராய்ச்சி அதையும் மீறி ஐந்தை ஆறாக்கி ஆறுவதைத் தேடச்சொல்லுகிறது! இத்தகைய ஆராய்ச்சிகளால் ஷண்மதங்களே ஸித்திக்காது. அவற்றை ஆதிசங்கரர் ஸ்தாபித்தார் என்று ஒருகாலும் ஸித்திக்காது.*

பர்மாவின் தடோன் என்னுமிடத்தில் நிகழ்த்திய புதைபொருள் ஆராய்ச்சியின் விளைவாக விஷ்ணு அனந்தசயனர் சிற்பங்கள் கிடைக்கப் பெற்றன. பகன் என்னுமிடத்தில் விஷ்ணு ஆலயச் சுற்றுச் சுவரில் தசாவதாரக் காட்சிகள் காணப்படுகின்றன. 1920ல் கலங்கோன் என்னுமிடத்தில் விஷ்ணுவின் நாபித்தாமரையில் தோன்றும் திருமூர்த்தி வடிவம் கண்டெடுக்கப்பட்டது. இவை எட்டாம் நூற்றாண்டளவில் ஓர் பெரிய முயற்சியின் விளைவாக ஹிந்து சமயம் பர்மாவில் பரவியதை உணர்த்துகின்றன. வேசாலியில் கண்டெடுக்

கப் பெற்ற நாணயங்கள் சிலவற்றில் நந்தியும், சூலமும் பொறிக்கப் பட்டிருப்பதும் பொருள்பொதிந்தது. ஸயாம் கல்வெட்டுக்கள் கி.பி. ஆறும் நூற்றுண்டு முதல் பதின்மூன்றும் நூற்றுண்டு வரை சைவ வைணவ மதங்கள் அங்கு வளர்ந்ததைக் குறிப்பிடுகின்றன. இவை அனைத்தும் சங்கரரின் போதனைகள் கடல் கடந்தும் பரவிய உன்னதத்தாலேயே சாத்தியமானது எனலாம்.

சங்கரரது ஷண்மதக் கடவுளர்களில் கணபதியும் குமரனும் 'கடாரம்' என்று தமிழிலக்கியங்களும் சோழர் கற்சாசனங்களிலும் குறிப்பிடும் 'கெடா' என்னுமிடத்தில் கிடைத்துள்ளன. சீனத்து பிட்சு ஒருவர் கி. பி. 414ல் ஜாவாவிற்கு வருகை தந்தபோது, பூர்ணவர்மன் என்ற ஜாவாமன்னன் ஹிந்து மதத்தைத் தழுவியதாகவும் விஷ்ணு பக்தனுக விளங்கியதாகவும் அம்மன்னன் 'கோஸஹஸ்ரம்'எனும் தானம் வழங்கியுள்ளதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

*கடல் கடந்து வைஷ்ணவ மதமும் சைவ மதமும் கி.பி. ஐந்தாம் நூற்றுண்டு முதலே பரவியிருந்தன என்று கோபாலனே எழுதிவிட்டபடியால் எட்டாம் நூற்றுண்டுக்கு முன்னமே ஆழ்வார்கள் நாயன்மார்களின் முயற்சியால் இவ்விரு மதங்களும் மிகப் பரவிவிட்டன என்பதும், ஆதிசங்கரர் இவற்றை ஸ்தாபிக்கவேண்டிய அவசியமேயில்லையென்றும் விளங்குகிறது. சங்கரர் ஸ்தாபித்தது அத்வைதமதமேயொழிய சைவமதமுமல்ல; வைஷ்ணவமதமுமல்ல. அத்வைதமதத்தை ஸ்தாபித்தபோதிலும், வியாவஹாரிகதசையில் ஆதிசங்கரர் விஷ்ணுவையே ஸகுணப்ரஹ்மமாகவும், விஷ்ணு ஸாயுஜ்யத்தையே அழிவற்ற பலனுகவும் கொண்டார் என்பது அவருடைய ப்ரஸ்தானத்ரயபாஷ்யங்களிலிருந்து விளங்குகிறது. "ஷண்மதம்" "ஷண்மதம்" என்று எத்தனை தடவை எழுதினாலும், குன்றிலிட்ட விளக்காகவும், வெள்ளிடைமலையாகவும், கையிலங்கு கனியாகவும் விளங்கும் இவ்வுண்மையை மறைக்க முடியாது.*

மலேயாவில் கண்டெடுக்கப்பெற்ற கல்வெட்டு ஒன்று. 'அஞ்ஞானத்தின் மூலமே கர்மம் விளைகிறது; கர்மமே பிறவிக்குக் காரணமாகிறது; கர்மத்திலிருந்து விடுபட ஞானமே சாதனம்' என்ற சங்கரர் கொள்கையை அப்படியே முழங்குகிறது.

*"அஞ்ஞானத்தினுலும், அதனுல் ஏற்படும் கர்மத்தாலும் ஸம்ஸாரம் ஏற்படுகிறது; ஞானத்தாலேயே மோக்ஷம் ஏற்படுகிறது" என்று ச்ருதிஸ்ம்ருதிகளனைத்தும் ஒருமிடமுக கோஷிக்கும் முடிவு. இக்கொள்கை சங்கரரால் புதிதாகக்*

கண்டுபிடிக்கப்பட்டதுபோலே எழுதுவது அறியாமை யாலோ, அபிமானத்தாலோ விளைந்தது. எவ்வகையான ஞானத்தாலே மோக்ஷம் ஏற்படுகிறது என்னும் விஷயத்தில் வேதாந்திகளிடையே பெருத்த கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ளது. பரமபுருஷனான நாராயணன் விஷயமான பக்திரூபமான ஞானத்தாலோ 'அவனே உபாயம்' என்னும பிரபத்திரூபமான ஞானத்தாலோ மோக்ஷம உண்டாகிறது என்று விசிஷ்டாத்வைதிகளான ஆழ்வார்களும் ஆசாரியர்களும கோஷித்திருக்கின்றனர். 'நானே ப்ரஹ்மம்' என்னும் வாக்யார்த்தஜஞானத்தாலே மோக்ஷம் என்று ஆதி சங்கரர் கூறினர். சிவஞானத்தாலே மோக்ஷம் என்றனர் சைவர். இப்படியே மற்றும் பல மதங்களிலும் ஒவ்வொரு விதமான ஞானத்தாலேயே மோக்ஷம ஒப்புக்கொள்ளப்படுகிறது. இந்நிலையில, அத்வைதிகள் ஞானம என்பது ஆதி சங்கரருக்கே சொந்தம்போலே எழுதிவருவது அவர்களுடைய ஞானத்தைக் காட்டவில்லை.

இனி அத்வைதமதத்தைச் சார்ந்தவரும், நமக்கு நேரில் பரிசயமில்லாதவரும், 'ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா' என்னும் நம் நூலின் நியாயத்தைக்கண்டு அதில் ஈடுபட்டிருப்பவருமான ஸ்ரீ. உமாபதி ஜகதீச சர்மா, (ஔந்த் காமப், பூனா) ஷண்மதப் பொய்யை வருடந்தோறும் தீபாவளி மலர்களில பரப்பிவரும் விகடனுக்கு எழுதியிருக்கும் கடிதத்தைக் கொடுத்துவிட்டு, அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்விகளைக் கொடுக்கிறோம்.

### உமாபதி ஜகதீசசர்மா விகடனுக்கெழுதிய கடிதம்

அன்புமிக்க ஆனந்தவிகடன் ஆசிரியர் அவர்களுக்கு, T. U. K. ஜகதீசசர்மா அநேக நமஸ்காரம. உபய க்ஷேமம். தமிழ் மக்கள் எங்கெல்லாம் உளரோ, அங்கெல்லாம் தங்கள வார இதழ் கிடைக்கப் பெற்று, தமிழ் நாட்டில வாழ்வதுபோன்ற மனநிலையை அடைந்து நாங்களெல்லாம் மகிழ்வுறுமபடி பல்வகையிலும எங்களுக்கு நலம் செய்கிறீர்கள்.

மக்களுக்குப் பல்வகையான அறிவு நலம் பத்திரிகைகளின் வாயிலாகவும் கிடைக்க ஹேது உளது என்பதை நன்கு உணர்ந்து நீங்கள் பல பல சமயங்களில விகடன் சிறப்பிதழ்களில் ஆராய்ச்சிக் கட்டுரை, அறிவுரைக் கட்டுரை, சரித்திரக் கதைகள், ஆகியவற்றைக் காலமறிந்து வெளியிடுகிறீர்கள். ஆகவே நாங்களும தங்களுக்குக் கடப்பாடுடையோம்.

1964 தீபாவளி இதழில் ''கௌமாரம்'' என்னும் கட்டுரையை ''சைவஞ்ச வைஷ்ணவம் சாக்தம், ஸௌரம் வைநாயகம் ததா! ஸ்காந்த₃ஞ்ச ப₄க்திமார்க்க₃ஸ்ய த₃ர்சனானி ஷடே₃வ ஹி'' எனகிற ஶ்லோகத்தை இட்டு, ''ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் ஷண்மத ஸ்தாபனம செய்து மனித சமுதாயத்தின் ஆனமீக வளர்ச்சிக்கு அடிகோலினார்கள்'' என்றும், ''உலகம இயங்கத் தேவையான விருஞானமாக சாக்தத்தையும், இயங்கும உலகத்தில் இனனலற்று வாழ வழிகாட்ட காணுபத்யத்தையும், பினபு பரம்பொருளின சாமராஜ்யத்தை அணுக அரியதொரு வழிகாட்டியாகக் கௌமாரத்தையும் நிர்மாணிததார்கள்'' என்றும், மற்றும் பல சிறப்புக்களை விளக்கி, ஸ்ரீ ஆசார்யாள் உவப்புக்கு உரிய மதமாகக் கௌமாரததைப்பற்றிப் பலபட எழுதியுள்ளீர்களா.

ஶ்ரிய:பதியின கருணுவிலாஸமே துணைசெய்ய, அவனது அருளாணையினபடி. அவ்வப்போது பாரத தேசததில் உலகம் உய்ய அவதாரம் செய்த ஆசார்யர்களிடமெல்லாம— அவர்கள் வழி வழி வந்த பரமாசார்யர்களிடமெல்லாம பெருமதிப்பும பக்தியும் உடையோம்.

ஸ்ரீ சங்கர பகவதபாதாசார்யாள் தமக்கு மிக ப்ரீதியான—உத்தமோத்தமமான ஒரு மதத்தைததானே—ஒரு கொள்கையைத்தானே—உலக க்ஷேமத்தின பொருட்டு—சத்யமான மோக்ஷ சாதநம் எது? எனபதைத்தானே விளங்கவைததுவிட்டுப போயிருபபார்கள்?

கீதையை அதயயனம செய்த பெரியோர்களெல்லாம் ஒப்ப—ப்ரமமசூதரம, கீதா, உபநிஷத், ஸஹஸ்ரநாம பாஷ்யங்களிலெலலாம் ஒப்பற்ற—ஈடு இணையற்ற—ஒரு பெரும் தனி முதலென—ஒரு பரமபொருளை—ஸ்ரீமந நாராயணனையே காட்டித்தந்தவர்கள், பிறிதொரு தெய்வக கொள்கையை நமக்குக் கைக்காட்டிவிட்டுபோதல் எப்படிப் பொருத்தமாவது? சூர்யன், கணபதி, முருகன, சிவன், காளி முதலிய தெய்வங்கள் பரமபதத்துக்கு அதிகாரிகளல்லரென்றும், சாமான்ய பலன்களே தர வல்லமையுடையரென்றும், அழிவுடைய (சீக்கிரமே நசித்துப்போகும்) லாபத்தையே வரமாக அருள வல்லவர்களென்றும் தெளிவுபடுத்தியுள்ள ஸ்ரீ ஆசார்யாள், இந்தத் தெய்வங்களை வழிபட்டு நீங்கள் உய்ந்துபோகலாம்—வீடு பெறலாம்—ஆதமலாபம் அடையலாம்—என்று எப்படி உபதேசிப்பார்?

நீங்கள் 1964, 1965 ஆண்டு தீபாவளி மலரில் குறிப்பிட்டுள்ள ஆறுசமயங்களைப்பற்றியும், ஸ்ரீரங்க க்ஷேத்திரததில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மத்தியில் மிகவுவப்போடு எழுந்தருளி இருக்கும்படி ஸ்ரீ ஆசார்யாளுக்கு ஆலய நிர்மாணம் செய்து அதில் அமிருத சிலையில் அவரை பிரதிஷ்டை செய்வித்து ஒப்பற்ற கடனாற்றியுள்ள அன்பர் திரு. டீ. கே. பாலஸுப்ரஹ்மண்யம அவர்கள் 1935-ம் ஆண்டு வெளியிட்டுள்ள ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யர் சரித்திரம் என்கிற நூலில் எழுதியுள்ளார்கள். அதாவது:— ''இந்த மாதிரியான துர்கக்ஷிகளையெல்லாம் கணப்பொழுதில நிராகரிதது

ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஸன் மதத்தை எங்குமே நிலைநாட்டினார்கள். இவர்களுடைய அமிருதமயமான வாக்குப்பெருக ஆரம்பித்ததும மற்றைய மதங்கள் அடைந்த கதியைப பின்வருமாறு ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள் வர்ணித்திருக்கிறார்கள்.

"காணாதர்களுடைய வாக்கைப் பரிஹாஸத்திற்குக்கூட மதிப்பாரில்லை. காபாலிமதம எங்கேயோ ஓடி ஒளிந்துபோய்விட்டது. சைவ மதமும் அசிவமாக ஆயிற்று. ஆர்ஹதமதம நிந்தனைக்குள்ளாயிற்று. சாகதமதம துர்க்கதியடைந்தது. வைஷ்ணவமதத்தைப் போஷணம் செய்வாரில்லை.........இவைகளுக்கெல்லாம் காரணம, நிர்தயவுடன் துர்மதஙகளையெல்லாம பிளநதெறிந்த ஸ்ரீ சஙகரருடைய ஒப்பில்லாத ஸூக்திகளேயாகும்." இபபடி இருககு—

"சைவஞ்ச வைஷ்ணவம் சாக்தம் ஸௌரம வைநாயகம் ததா ஸ்காந்த₃ஞ்சப₄க்திமார்க்₃ஸ்ய த₃ர்ஶனி ஷடேவஹி." எனகிற ஶ்லோகததைக் காட்டி, அதவைதத்தை விளக்கி மற்ற பிற மதங்களையெல்லாம் கண்டித்து அத்வைதமதத்தையே தனது அவதார காரண காரியமாக ஸதாபித்துவிட்டுத் தேவரெல்லாம துதித்துக் கைதொழுது வணங்கச் சிவமாகி எழுந்தருளிய ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாசார்யாள், மேற்குறித்த இந்த ஆறு சமயங்களை ஸ்தாபனம் செய்தார் என்று பனனிப்பன்னி எழுதுவதின பொருள என்ன ?

மேற்குறித்த ஷண்மதங்கள் ஸ்ரீ ஆசார்யாள் காலத்துக்கு முன் இருந்ததில்லை என்று எப்படி உடனபட்டு, பினபு இவறறை ஸ்ரீ ஆசார்யாள் நிறுவியதாக ஏற்றுக்கொள்வது ? ருத்ரோபாஸனை, தேவிவழிபாடு, கணபதி மதம், சூர்யோபாஸனை, முருகன அருள் வேட்டல், முக்திப் பேறு வழங்கும தெய்வநாயகனை ஸ்ரீவிஷ்ணு பக்தி ஆகியவெல்லாம் சமீப காலந்தொட்டே வழககிற்கு வந்தவை என்று கொள்ளப்படுமோ ? எட்டாம நூற்றாண்டு ஒனபதாம நூற்றாண்டின இடையில் வந்தது தானே ? ஸ்ரீ ஆசார்யாள் காலம் கி. பி. 788 முதல் கி. பி. 820 வரை 32 ஆண்டுகள் என்று தெரிகிறதே. அறிஞர்கள் ஷை அவதார காலத்தை முனபின்னாக மதித்தாலும், நம் நாட்டில் சிறந்த முறையில் வேத வைதிக முறையான சாஸ்திரீய வழிபாடு அநாதிகாலந்தொட்டு சூர்ய சந்திர வம்சத்து மன்னர்களாலும், வேதகாலத்து மஹரிஷிகளாலும கையாளப்பட்டு வந்திருக்கவும், பணடைத் தமிழிலககியஙகளிலும ஐவகை நிலத்துக்கும கடவுளும், அவர்கட்குச் செய்யப்படும சிறப்பும் காணக் கிடைக்கவும, ஸ்ரீ ஆசார்யாள் காலத்திலே இவ்வழிபாடுகள், ஷண்மதங்கள் உருவெடுததன என்று பிரசாரம செய்வதில் ஒவ்வாமை தானே உளது !

சத்யதர்சனத்தின் பெயரால் சத்யத்தைத்தானே பின்பற்ற வேண்டும. தயவுசெய்து விளக்கம் தந்து வழிகாட்டவேண்டுகிறேன.

நமஸ்காரம். தங்கள்,

**T. U. K. ஜகதீசசர்மா.**

# கேள்விகள்



1. அத்வைத ஸித்தாந்தத்தின்படி அநாதிகாலமாக வ்யாவஹாரிகஸத்யமாயிருக்கும் இவ்வுலகைப் படைத்து அளித்து அழிப்பதான ஸகு3ணப்3ரஹ்மமொன்று வியவஹார நிலையில் ஒப்புக்கொள்ளப்படுகிறது. அந்த ப்ரஹ்மம் எந்த தேவதை? ஆதிசங்கரருடைய ப்ரஸ்தானத்ரய ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலிருந்தும், ப்ராசீனரான வார்த்திக டீகாகாரர்களின் நூல்களிலிருந்தும் அந்த ப்ரஹ்மம் நாராயணனே என்று தேறுகிறதென்பதை மறுக்க முடியுமா?

2. விஷ்ணு, சிவன், சக்தி, கணபதி, முருகன், ஸூர்யன் என்னும் ஆறுமே அந்த ப்ரஹ்மம் என்று கூறுவீர்களாகில், "ஈமதே தே3வ ஏக:" "ஸ ஆத்மா அங்க3ாந்யந்யா தே3வதா:" "தமீஸ்வராணாம் பரமம் மஹேஸ்வரம் தம் தே3வதாநாம் பரமம் ச தைவதம்" "திவ்யோ தே3வ ஏகோ நாராயண:" "நாராயணாத்3 ப்3ரஹ்மா ஜாயதே, நாராயணாத்3 ருத்3ரோ ஜாயதே, நாராயணாதி3ந்த்3ரோ ஜாயதே" "ஏகோ ஹவை நாராயண ஆஸீந்ந ப்3ரஹ்மா நேசாந:" முதலான ஸ்ருதிகளில் ஒருவனே உலகனைத்துக்கும் காரணம் என்றும், அவனிடமிருந்தே பிரமன், சிவன், இந்திரன், ஸூர்யன் முதலான எல்லா தேவதைகளும் உண்டாவதாகவும், அவனாலேயே ரக்ஷிக்கப்படுவதாகவும், அழிக்கப்படுவதாகவும் உபனிஷத் வாக்யங்கள் உத்கோஷிப்பது எப்படிப் பொருந்தும்? இவ்வாக்யங்களைப் பொருந்த விடுவதற்காக இந்த தேவதைகளில் ஒன்றை ஸகுண ப்ரஹ்மமாகவும், மற்றவற்றை அந்த ப்ரஹ்மத்திற்கடங்கிய தேவதைகளாகவும் ஒப்புக்கொள்ளுகிறோமெனில்: அந்த ஸகுண ப்ரஹ்மம் நாராயணனே என்பதை ஆதிசங்கரரின் ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களின்படி ஒப்புக்கொள்ளுகிறீர்களா?

3 ஆதிசங்கரர் தாமியற்றிய துதிநூல்களில் முற்கூறிய ஆறு தேவதைகளையும் ஸகுண ப்ரஹ்மமாகப் பாடியிருக்கையாலே, அவ்வறுவரையும் ஸகுண ப்ரஹ்மமாகவே ஒப்புக்கொள்ளுகிறோம் என்பீர்களாகில், அத்துதி நூல்கள் ஆதிசங்கரருக்குப் பல நூற்றாண்டுகள் வரையில் எவராலும் கையாளப்படாததிலிருந்து அவை பிற்காலத்தில் இயற்றப்பெற்றவை என விளங்கவில்லையா? அவற்றில் சில அவரியற்றியவையாகவே தேறினாலும், ஸ்துதிபரமான அவற்றைக்கொண்டு தத்துவத்தை நிச்சயிப்பதைக் காட்டிலும், தத்துவத்தை நிஷ்கர்ஷிக்கவென்றே ஏற்பட்ட ப்ரஸ்தானத்ரய பாஷ்யத்திலிருந்தே தத்துவத்தை நிஷ்கர்ஷிப்பது நியாயமல்லவா?

4. ஸங்கரவிஜயம் முதலான சரித்திர நூல்கள் ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்ததாக எழுதியிருப்பதால் ஆறு தேவதைகளையும் ஸகுண ப்ரஹ்மமாகவே கொள்ளுகிறோம் என்பீர்களாகில், ஸ்ரீகண்டஸமாலோசனத்திலும், 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா' என்னும் நம் நூலிலும் நிரூபிக்கப்பட்டபடி ஸங்கரவிஜய நூல்களில் பல பொய்கள் பெய்யப்பெற்றிருக்கிறபடியால், அவை நம்பத்தகாதவை என விளங்கவில்லையா?

5. ஆறு தேவதைகளைப் பரமபொருளாகக் கொண்ட ஆறு மதங்களை ஒருவர் எப்படி ஸ்தாபிக்கமுடியும? அதிலும் புருஷனாகிய சிவனுக்கு ஒரு மதத்தையும, மனைவியாகிய சக்திக்கு ஒரு மதத்தையும், இருபிள்ளைகளுக்கு இரு மதங்களையும் எப்படி ஸ்தாபிக்க முடியும்? பரமபொருளுக்கு அடங்கி நடக்கும ஜீவன என்று பல வேதவாக்யங்களில் கோஷிக்கப்படும் சூரியனைப பரமபொருளாகக் கொண்ட மதத்தை வைதிகர் ஒருவர் ஸ்தாபிக்கமுடியுமா?

6. சூரியனுக்கு ஒரு மதமெனறால், அவனுக்கும தலைவனான இந்திரனுக்கும, எல்லா தேவதைகளையும படைத்த பிரமனுக்கும ஒரு மதததை ஸ்தாபிக்கவேண்டாமா? சூரியனைபபோலவே உலகிற்குதவும வாயு முதலான மற்ற தேவதைகளும், இவர்கள் அனைவர்க்கும தலைவனான இந்திரனும், அவனையும் படைத்த பிரமனும் ஒவ்வொரு மதத்திற்குத் தலைவராயிருக்கமுடியாதபடி என்ன பாபத்தைச் செய்தார்கள்?

7. சாகத சைவ வைஷ்ணவ மதங்களை ஆதிசங்கரர் தம நூல்களாலே மலினமடையச் செய்தார் எனறு வித்யாரண்யர் கோஷித்திருக்கும்போது ஆதிசங்கரரே அமமதங்களை எப்படி ஸ்தாபிககமுடியும?

8. இவ்வாறுதெய்வங்களைக் காட்டிலும் மேலானதொன்றே ஸகுணப்ரஹமம எனபீர்களாகில், அப்படியொன்றிருந்தால ஆதிசங்கரர் அதைப் பரமபொருளாகக் கொண்ட மததததையன்றோ முதலில் ஸ்தாபித்திருக்கவேண்டும்? அதையனறோ மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் உபாஸிக்கவும, சரணமடையவும் வேணடும? அதையனறோ கோவில் கட்டிக் கும்பிடவேணடும்? அப்படிப்பட்ட தெய்வம் எது? ஆதிசங்கரர் தம் நூல்களில் எங்கெங்கு அதைப் பற்றிக் குறிததிருக்கிறார்?

9. ஐந்நூறு வருடத்திற்கு முற்பட்ட எந்த நூலிலும் காணாபத்யம் முதலானவற்றை ஷண மதங்களாகக் குறிபபிடாததிலிருந்தே இந்த ஷண்மதக் கற்பனை நவீனமென விளங்கவில்லையா?

## முடிவுரை

இப்பிரசுரத்தை நாம் எலலாப் பத்திரிகைகளுக்கும், அத்வைத சமூகத்தைச் சேர்ந்த அறிஞர்கள் பலருககும் அனுப்புகிறோம். எவராவது நம்கேள்விகளுககு நேர்மையுடன் பதிலிறுக்க முன்வந்தால, பதிலகளை நம ஸுதர்சனத்திலேயே அச்சிட்டு ஆராய ஸித்தமாயிருக்கிறோம். பதிலுரைக்கத துணிவில்லாமல் 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரே' 'சிவாநந்தலஹரி பாடினார்' 'ஸௌந்தர்யலஹரி பாடினார்' என்று திருப்பித் திருப்பி யெழுதி வந்தால அப்ராமாணிகர்களின் அபத்தப்பிதற்றலாக அதைக் கருதிக காற்கடைக் கொள்வோம்.

---

# ஷண்மத ஸ்தாபந சர்ச்சை—அறிமுகம்

—※—

அநாதியான வேதாந்தங்கள், அனைத்துலகையும் படைத்தளித்தழிக்கும பரம்பொருளாக நாராயணனைக் கூறி, அவன் படைக்கும் எலலாப் பொருள்களின் பெயர்களும் உண்மையில் அவன பெயர்களே என்றும், பாட்டன் தன பெயரைப் பேரனுக்கு வைபபதுபோலே, தன்னால் படைக்கப்பட்டுத் தனக்கு அவயவமாயிருக்கும் ஒவ்வொரு பொருளுக்கும் தன் பெயர்களில் சிலவற்றைப் படைக்கும்போதே அவனே வைத்தான் என்றும் முழங்குகின்றன. இதை வால்மீகி வியாஸர் முதலான பண்டைக்கால ரிஷிகளும் ஸ்ரீராமாயணம், மஹாபாரதம் போன்ற தம் நூல்களிலும் வெளிப்படுத்தியுள்ளனர். பிற்காலத்தில், இதையறியாத அறிவிலிகள் சிலர் சாஸ்திரங்களில் ஹிரண்யக$_3$ர்ப்ப$_4$ன், சிவன், இந்திரன் முதலான சப்தங்களால் பரம்பொருளைக் கூறியிருப்பதைப் பார்த்து மயங்கி, பிரமன், சிவன், இந்திரன் முதலான தேவதைகளே பரம்பொருள் என்று கூறத் தலைப்பட்டனர். இது அந்த$_4$க$_3$ஜந்யாயரீதியிலே அவர்களுடைய அறிவின்மையைக் காட்டுகிறது. அதாவது—குருடர் சிலர் யானை எப்படியிருக்கும் என்று பார்க்க விரும்பி ஒரு யானையை ஒவ்வொரு புறம் தடவிப்பார்த்து யானை இப்படித்தானிருக்கும் என்று முடிவுகட்டிக் கொண்டனராம். யானையின் காதைத தடவிப் பார்த்த ஒருவன் 'யானை முறம்போலேயிருக்கிறது' என்றும்; காலைத் தடவிப்பார்த்த ஒருவன் 'யானை தூண் போலேயிருக்கிறது' என்றும், வயிற்றைத் தடவிப்பார்த்த ஒருவன் 'யானை சுவர் போலேயிருக்கிறது' என்றும், துதிக்கையைத் தடவிப்பார்த்தவன் 'உலக்கைபோலேயிருக்கிறது' என்றும், வாலைத்தடவிப்பார்த்தவன் 'சாட்டை போலேயிருக்கிறது' என்றும். இதுபோலே—ஆனைபோலே அறப்பெரியனும் பரமாத்மாவான நாராயணனுக்கு அவயவங்

களாய், அவன் பெயர்களில் சிலவற்றைப் பெற்றிருக்கும் பிரமன், உருத்திரன், இந்திரன் முதலான தேவதைகளைப் பரம்பொருளாக மயங்குவதும் குருட்டுத்தனமேயாகும். இத்தகைய அகக்குருடர்கள் சிலர் மிகமிகப் பிற்காலத்தில் சிவனுடைய மனைவியான சக்தியையும், சிவனுடைய இரு பிள்ளைகளையும், இந்திரனுக்கும் தாழ்ந்த ஸூர்யனையும் பரம்பொருளாகக் கூறத்தலைப்பட்டனர். இவர்களுடைய குருட்டுத்தனத்தை அறிவாளிகள் எடுத்துக்காட்டிய போதும் ஒப்புக்கொள்ளாமல் எங்களுடைய கொள்கைகளை ஆதிசங்கரரே ஸ்தாபித்திருக்கிறார் என்று கூறத் தலைப் பட்டனர். ஶாக்தம், கா₃ணாபத்யம், கௌமாரம், ஸௌரம் என்னும் மதங்கள் தலையெடுக்கத் தொடங்கியதே ஐந்நூறு வருடங்களுக்குள்தான் என்பதையும், 1100 வருடங்களுக்கு முற்பட்ட ஆதிசங்கரர் இவற்றோடு சைவத்தையும், வைஷ்ணவத்தையும் சேர்த்து ஷண்மதங்களாக்கி இவற்றை ஸ்தாபித்திருக்கவே முடியாது என்பதையும், ஆதி சங்கரர் நாராயணனே ஸகலகல்யாணகு₃ண பூர்ணன் பரம்பொருள் என்னும் வேதா₃ந்த ஸித்₃தா₄ந்தத்தையே ஏற்றுக்கொண்டவர் என்பதையும் அவருடைய பா₄ஷ்யங்கள் முதலான ப்ரமாணங்களிலிருந்து சென்ற விஶ்வாவஸு வருடத்திலிருந்து நிலைநாட்டி வருகிறோம் நாம். அவ்விவாதம் ப்ரதிபக்ஷிகளும் மறுக்கமுடியாதபடி இந்த சாதாரண வருடத்தில் நிலைநாட்டப்பட்டது. இந்த ஷண்மதஸ்தாபந சர்ச்சையை அன்பர்கள் படித்துப்பார்த்து நடுநிலைநின்று தம் கருத்துக்களைத் தெரிவிப்பார்களாக.

இங்ஙனம்,

சாதாரண-ஹு
மார்கழியில்
ஸ்வாதி

உண்மையை உயிரினும் ஓம்பும்
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்.
3, புத்தூர் அக்ரஹாரம்,
திருச்சி-17.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஷண்மத ஸ்தா₂பந சர்ச்சை

## முகவுரை

ஆதிகாலத்தில் நமது நாட்டில் உள்ள அனைவரும் ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே ஸர்வாத்மாவான பரம் பொருள்; மற்ற தேவதைகள் அனைவரும் அவனுக்கு அங்கமாய் அடங்கிநடப்பவர்கள் என்னும் வேதாந்தக் கொள்கையைப் பின்பற்றி வந்தனர். வால்மீகியின் ஆதி காவ்யம், வியாஸரின் மஹாபாரதம் முதலான ப்ராசீந ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களையும், தமிழிலுள்ள பரிபாடல் முத லான சங்கவிலக்கியங்களையும் ஆராய்ந்தால் இந்நிலை தெளி வுறத் தெரியவரும். விஷ்ணுசித்தவிஜயம், சாதிமத ஆராய்ச்சி முதலான நூல்களில நாம் இவ்வுண்மையை நிலைநாட்டி வருகிறோம். பிற்காலத்தில், வேதவாக்யங் களுக்குப் பொருளுரைப்பதில கருத்துவேற்றுமை ஏற்பட்டு, 'நிர்விஶேஷசிந்மாத்ர ப்₃ரஹ்மமொன்றே மெய்; மற்றவை யனைத்தும் பொய்' என்னும் அத்வைத மதத்தை ஆதிசங்கரர் நம்நாட்டில் பரப்பினர். இம்மதம் ஸ்ரீராமாநுஜர் முதலான விஶிஷ்டாத்₃வைத மதாசார்யர்களாலும், மத₄வர் முதலான த்₃வைதமதாசார்யர்களாலும் கண்டிக்கப்பட்டு விஷ்ணு பரத்வம் நிலைநாட்டப்பட்டது. அத்வைத மதத்தைப் பரப்பிய ஆதிசங்கரரும் அவருடையதென அனைவரும் இசையவேண்டிய ப்ரஸ்தா₂நத்ரய பாஷ்யங்களிலும், ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்திலும், வ்யாவஹாரிக த₃ஶையில் அனைத்துலகையும் எல்லா தேவதைகளையும் படைத்தளித்து அழிக்கும் பரமாத்மாவான ஸகு₃ண ப்₃ரஹ்மம் நாராயணனே என்பதைப் பலவிடங்களில் ஒப்புக்கொண்டிருக்கிறார். அப்பயதீக்ஷிதர் காலம் வரையில் அத்வைதிகள் இதை ஏற்றுக்கொண்டேயிருந்தனர். வைஷ்ணவர்களோடு ஸ்பர்த்தை₄ (போட்டி) காரணமாக அப்பயதீக்ஷிதரே அத்வைதிகளில் முதலில இதை மறுக்க முற் பட்டார். சிவதத்வவிவேகம், சிவார்க்கமணிதீ₃பிகை முத லான பல நூல்களை எழுதி, ஆதி₃ஶங்கரஹ்ருத₃யவிருத்₃த₄

மாக நாராயணனுக்கு ஜீவத்வம் ஸாதிக்கமுயன்று தோல்வியுற்றார். இத்தோல்வியினால் கடும் கொதிப்புற்ற அவராலும், அவருடைய சிஷ்யப்ரசிஷ்யர்களாலும் விஷ்ணுபரத்வமாகிற உண்மையை மறைக்கப் பல முயற்சிகள் செய்யப்பட்டன. அன்றுவரை எவராலும் தொடப்படாத பல உபநிஷத்துக்களைக் கற்பித்து 'நூற்றெட்டு உபநிஷத்துக்கள்' என்னும் சுவடி ஏற்படுத்தப்பட்டது. சங்கரமடத்தில் அவ்வப்போது இருந்த மடாதிபதிகளால் இயற்றப்பட்ட பல துதிநூல்கள் ஆதிசங்கரரால் இயறறப் பெற்றதாகப் பிரசாரம் செய்யப்பெற்றது. ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்ததாகப் பொய்ப்பிரசாரம் தொடங்கபெற்று நாளுக்குநாள் விருத்தியடைந்து வருகிறது. இத்தகைய பற்பல பிரசாரங்களால், விஷ்ணுபரத்வத்தை இசைந்து வந்த அத்வைதிகள் சிறிது சிறிதாக அதை மறுக்கமுற்பட்டு, இன்று பெரும்பாலும் தேவி உபாஸகர்களாக மாறிவிட்டனர். வைஷ்ணவர்களையும் இப்படி மாற்றுவதற்குப் பல வகைகளில் பொதுஜனப் பத்திரிகைகள் மூலம் பிரசாரம் செய்து வருகின்றனர் என்பதும், அதை அவ்வப்போது நாம் ப்ரமாணங்களைக்காட்டி மறுத்து வருகிறோம் என்பதும் பண்டிதவுலகம் அறிந்தது. இம்முறையில் நாலு வருடங்களாக நடந்துவரும் ஷண்மத ஸ்தாபன சர்ச்சையை அன்பர்களுக்கு நினைவுறுத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

விச்வாவஸு "விகடன்" தீபாவளிமலரில் "வைஷ்ணவம்" என்னும் தலைப்பில் வைஷ்ணவத்தை இழிவு படுத்தும் கட்டுரையொன்று வெளியிடப்பட்டது. அடுத்த மாதத்திலேயே (ஸுதர்சனம் 216ல்) "**ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா**" என்னும் நூலில அக்கட்டுரையில் சொல்லியிருக்கும் விஷயங்கள் சிறிதும் பொருந்தமாட்டாதவை என்பதை நிரூபித்தோம். சில மாதங்களுக்குப்பின் ஷண்மத ஸ்தாபனப் பொய்யானது பராபவ சித்திரை கலைமகளிலும், 24-4-66 தினமணி சுடரிலும் வெளிவந்த கட்டுரைகளில் வி. கோபாலன் என்பவரால் திருப்பியெழுதப்பட்டபோது ஸுதர்சனம் 222ல் "அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்வி

கள்"என்னும் நூலில்,"ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகர்"என்று கூறும் அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்விகளை அச்சிட்டு இரு நூல்களையும் சேர்த்து ஆயிரக்கணக்கான பிரதிகளை அத்வைதமதஸ்தர்களான பல பண்டிதர்களுக்கும் அனுப்பி, இயன்றால் அக்கேள்விகளுக்கு பதிலுரைக்குமாறும், இயலாவிட்டால் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகர் என்னும் பொய்ப் பிரசாரத்தை நிறுத்தும்படியும் மநஸ்ஸாக்ஷியுள்ள அத்வைதிகளைக் கேட்டுக்கொண்டிருந்தோம்.

ஒரு வருடம் கழிந்து, மேலமாம்பலம் ஸ்ரீசங்கரபக்த ஜனசபா ஸ்தாபகரான ப்ரஹ்மஸ்ரீ ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா என்பவர், "ஸ்ரீசங்கரஜயந்தி விழா மலர்-67" என்னும் மலரில் (காலஞ்சென்ற) போலகம் ராமசாஸ்திரியைக் கொண்டு ஓர் கட்டுரை எழுதுவித்து நமக்கு அனுப்பினர். அதில் நம் கேள்விகளைத் தொடாமலேயிருப்பதைச் சுட்டிக் காட்டி, கேள்விகளுக்கு பதில் எழுதுமாறு ஸுதர்சனம் 235ல (பிலவங்க ஆனி இதழில) எழுதினோம் நாம். இரண்டு மாதங்கழித்து ராமசாஸ்திரி காமகோடிப்ரதீபத்தில் இதைக் குறித்து (கேள்விகளைத தொடாமல்) ஏதோவொரு கட்டுரை எழுதி நமக்கும் அனுப்பாமலிருந்தார். ஓர் அன்பர் மூலம் அதைக்கண்ட நாம், கேள்விகளுக்கு பதிலுரைக்கும்படி கேட்டு ஸுதர்சனம் 237ல் எழுதி, ப்ரதீ₃பம் ஆசிரியருக்கு அனுப்பினோம். இன்றளவும் ப்ரதீபம் ஆசிரியர் பதில் எழுதவில்லை.

இந்நிலையில், முற்கூறிய ப்ரஹ்மஸ்ரீ ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா அவர்கள் மே' 70 கடைசியிலும், ஜுன் '70லும் அனுப்பிய கடிதங்களில் நமது கேள்விகளை "**பாஷ்ய பாவக்ஞ பிரம்மஸ்ரீ வரஹூர் கல்யாண சுந்தர சாஸ்திரிகள்**" என்பவரிடம் கொடுத்ததாகவும், அவர் ப்ரமாணநிஷ்கர்ஷம் செய்துகொள்வதற்காக 22 கேள்விகள் எழுதி அனுப்பியதாகவும், அவற்றுக்கு நம் பதிலைப் பார்த்த பின் நமது கேள்விகளுக்கு பதிலுரைப்பார் என்றும் எழுதியுள்ளார். அந்தக் கேள்விகளை வரிசையாகக் கீழே சிறிய

*எழுத்துக்களில் கொடுத்து ஒவ்வொன்றின் கீழும் நமது பதில்களைப் பெரிய எழுத்துகளில அச்சிடுகிறோம்.*

1. ஒரு விஷயத்தை இது இப்படித்தான் என்று தீர்மானிக்க ப்ரமாணம் தேவையா, இல்லையா?

*ப்ரமாணம் தேவை என்பதே ப்ராமாணிகர்களின் முடிவு.*

2. தேவையானால் ப்ரமாணத்தின் லக்ஷணம் என்ன? அல்லது அதில் பலவகை உண்டா? ப்ரமாணம் ஒன்றுதானா?

**''ப்ரமிதி கரணம் ப்ரமாணம்''** *[ப்ரமைக்கு அஸாத₄ாரணகாரணமாயிருப்பது ப்ரமாணம்] என்பது ப்ரமாண லக்ஷணம்.* **''யதா₂ர்த்த₂ வ்யவஹாரானுகு₃ணம் ஜ்ஞானம் ப்ரமா''** *[உள்ளதை உள்ளபடி வ்யவஹரிப்பதற்கு—வழங்குவதற்கு—வேண்டிய அறிவு ப்ரமை] என்பது ப்ரமாலக்ஷணம்.* **ஆக, உள்ளதை உள்ளபடி வழங்கத் தனிக் காரணமாயிருப்பது எதுவோ அதுவே ப்ரமாணம்** *எனப்படுகிறது. ப்ரமாணங்கள்:* **(1) ப்ரத்யக்ஷம் (2) அநுமாநம் (3) ஶப்₃த₃ம்** *என மூன்று வகைப்படும். மற்றும பலவகைப் பட்ட ப்ரமாணங்களைப் பல மதஸ்த₂ர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அவையனைத்தையும் இம்மூன்றுக்குள்ளே அடக்கிவிடலாம் என்பது விஶிஷ்டாத்வைதிகளின் நிரூபணம். இம்மூன்று ப்ரமாணங்களுக்கும் லக்ஷணம் முதலானவை நமது தமிழ் விவரணத்தோடு கூடிய 'ஸங்மதகாரிகாவளீ' என்னும் வடமொழி நூலில் விவரிக்கப் பட்டுள்ளது. அந்நூலை அனுப்பியிருக்கிறோம். அதில் பார்த்துக்கொள்வது.*

3. வேதங்கள் மூன்று நான்கா? எல்லாம் பிரமாணங்களா? சிலவை தான் ப்ரமாணங்களா?

*வேதங்கள் ருக், யஜுஸ், ஸாமம், அத₂ர்வணம் என்று நான்காக வேதவ்யாஸரால் பிரிக்கப்பட்டன. அத₂ர்வ வேத₃ம் ஆபி₄சாரிகப்ரயோக₃ங்களையே அதி₄கமாகக் கொண்டதாகையால், முக்கிய வேதங்கள் முதல் மூன்றே என்னும்*

கருத்திலே வேதங்களை 'த்ரயீ' என மூன்றாக வழங்குவதும் உண்டு. வேதங்கள் முழுவதும் ஸ்வத:ப்ரமாணம் (வேறொன்றைத் தம் ப்ராமாண்யத்திற்கு அபேக்ஷியாமல் தாமே ப்ரமாணமாயிருப்பவை). ஶப்தப்ரமாணதத்தில் அடங்கும்.

4. உபநிஷத்துக்கள் எவ்வளவு? அவைகள் எல்லாம் ப்ரமாணங்களா? சிலவைதான் ப்ரமாணங்களா?

உபநிஷத்துக்கள் இவ்வளவு என்ற கணக்கு எந்த ஶாஸ்திரத்திலும், எந்த ப்ராமாணிகராலும் கூறப்படவில்லை. அநந்தமான வேதங்களில் அநந்தமான உபநிஷத்துக்கள் இருந்திருக்கலாம். அவற்றில் சிலவே ப்ராசீனர்களால் கையாளப்பட்டுள்ளன. 'நூற்றெட்டு உபனிஷத்துக்கள்' என்னும் அச்சுப்புத்தகம் நவீன கல்பனை. இதில் உள்ள பெரும்பாலான உபனிஷத்துக்கள் ஐந்நூறு வருடங்களுக்கு முன் எந்த ப்ராசீனராலும் கையாளப்படாமையாலும், 'வேதங்கள் நாலு' 'வேதாங்கங்கள் ஆறு' 'மஹா புராணங்கள் பதினெட்டு' என்பதுபோலே 'உபநிஷத்துக்கள் 108' என்று எந்த சாஸ்திரத்திலும், ப்ராசீந ப்ராமாணிக க்₃ரந்தங்களிலும் காணப்படாமையாலும் ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்ட ப்ராசீந ப்ராமாணிகர்களால் கையாளப்பட்டவற்றையே உபநிஷத்துக்களாக ஏற்றுக்கொள்ள முடியும். நாம் அனுப்பியுள்ள விஷ்ணுசித்தவிஜயம் என்னும் நமது நூலின் இரண்டாவது பாகததின் கடைசியில் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ள (1) உபநிஷத்துக்கள் நூற்றெட்டா? (2) சமயசாதனத்தைக் குறித்துச் சில கேள்விகள் என்னும் இரு கட்டுரைகளிலும் இவ்விஷயம் விரிவாக ஆராயப்பட்டு நடுநிலைநின்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அங்கு கண்டுகொள்வது. 'சமய சாதனம்' என்னும் சைவப் பத்திரிகையோடு எழுந்த விவாதத்தின் போது இக்கட்டுரைகள் எழுதப்பட்டன. இரண்டாவது கட்டுரையில் நாம் சமயசாதனத்தைக் குறித்துக் கேட்டிருந்த கேள்விகளுக்கு பதில் கூற இயலாமல் அப்பத்திரிகையே நின்றுவிட்டது.

5. ஸ்ம்ருதிகள் எவ்வளவு? அவற்றை ஒருவரே இயற்றினரா? பலர் இயற்றினர்களா?

*மந்வாதி₃ஸ்ம்ருதிகள் என்றும், ஶ்ரௌத ஸூத்ரங்கள் என்றும், த₄ர்மஸூத்ரங்கள் என்றும், க்₃ருஹ்யஸூத்ரங்கள் என்றும், பரமைகாந்திகளின் த₄ர்மங்களை விவரிக்கும் பரமத₄ர்மஶாஸ்த்ரங்கள் என்றும் ஸ்ம்ருதிகள் பல வகைப்படும். இவற்றில பரம்பொருளைப்பற்றிய நிர்ணயம் முதலிற்சொன்ன மந்வாதி₃ஸ்ம்ருதிகளிலும், கடைசியிற் சொன்ன பரமத₄ர்மஶாஸ்திரங்களிலுமே விசேஷமாகக காணப்படுகிறது. இவ்விரண்டினிடையேயும் ஸாமாந்ய த₄ர்மங்களைப் பரக்கப்பேசும் மந்வாதி₃ஸ்ம்ருதிகளே நெடுங் காலமாகப் பல ஸ்ம்ருதி புராணங்களிலும், பற்பல மதத்தைச் சேர்ந்த பண்டைச் சான்றோர்கள் பலராலும் எடுத்துக் கையாளப்பட்டிருக்கிறபடியால அவற்றுக்குப் பரிக்₃ரஹாதிஶயம் உண்டு. பரமைகாந்திகளின் விஶேஷ த₄ர்மங்களை விளக்கும் பரமத₄ர்மஶாஸ்திரங்களுக்கு அத்தகைய பரிக்₃ரஹாதிஶயம் இல்லாவிடிலும் பூர்வாசார்யர்களாலும், த₄ர்மஶாஸ்திரவிசாரத்தைச் செய்யும் நிப₃ந்த₄காரர்களாலும் அவை எடுக்கப்பட்டிருக்கையாலே அவற்றுக்கும் ப்ராமாண்யமுண்டு. யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியின் தொடக்கத்தில் (1-4, 5)*

''மந்வத்ரி விஷ்ணு ஹாரீத யாஜ்ஞவல்க்யோஶநாங்கி₃ரா: |
யமாபஸ்தம்ப₃ஸம்வர்த்தா: காத்யாயநப்₃ருஹஸ்பதீ ||
பராஶரவ்யாஸ ஶங்க₂லிகிதா₃ா த₃க்ஷகௌ₃தமௌ |
ஶாதாதபோ வஸிஷ்ட₂ஶ்ச த₄ர்மஶாஸ்த்ரப்ரயோஜகா: ||''

*[(1) மனு (2) அத்ரி (3) விஷ்ணு (4) ஹாரீதர் (5) யாஜ்ஞவல்க்யர் (6) உஶநா (7) அங்கி₃ரா (8) யமர் (9) ஆபஸ்தம்பர் (10) ஸம்வர்த்தர் (11) காத்யாயனர் (12) ப்₃ருஹஸ்பதி (13) பராஶரர் (14) வ்யாஸர் (15) ஶங்க₂ர் (16) லிகி₂தர் (17) த₃க்ஷர் (18) கௌ₃தமர் (19) ஶாதாதபர் (20) வஸிஷ்டர் என்னும் இருபதுபேர் த₄ர்மஶாஸ்திரம் எழுதியவர்கள்.] என்று பெயரிட்டு இருபது ஸ்ம்ருதிகள் எடுக்கப்பட்டன. அபரார்க்கர் என்னும்*

*நிபந்த₄காரர் எடுத்த கௌ₃தமஸூத்ரத்திலும், வீரமித்ரோத₃யம் என்னும் நிப₃ந்த₄க்₃ரந்த₂த்தில் எடுக்கப்பட்ட ஶங்க₃லிகி₂தஸூத்ரத்திலும், பராஶரஸ்ம்ருதியிலும் (1-1-13. 14, 15) இந்த ஸ்ம்ருதிகளில் பெரும்பான்மையானவை எடுக்கப்பட்டன. காருடபுராணத்தில் (93-4, 5, 6 ஜீவாநந்தர்பதிப்பு 223-ம் பக்கம்.)*

''வக்தாரோ த₄ர்மஶாஸ்த்ராணும் மநுர் விஷ்ணுர் யமோऽங்கி₃ரா: |
வஸிஷ்ட₂த₃க்ஷஸம்வர்த்த ஶாதாதப பராஶரா: |
ஆபஸ்தம்போ₃ஶநோவ்யாஸா: காத்யாயநப்₃ருஹஸ்பதீ ||
கௌ₃தம: ஶங்க₂லிகி₂தெள ஹாரீதோத்ரிரஹம் தத₂ா |
ஏதே விஷ்ணும் ஸமாராத₄ய ஜாதா த₄ர்மோபதே₃ஶகா: ||

*என்று இந்த ஸ்ம்ருதிகர்த்தாக்களின் பெயர்கள் எடுக்கப்பட்டு, இவர்கள் பரமபுருஷனை விஷ்ணுவை ஆராதித்தமையாலேயே த₄ர்மஶாஸ்திரம் செய்ய வல்லவரானூர்கள் என்று கூறப்பட்டது. புராணங்களிற்போலே ஸ்ம்ருதிகளிலும் ஸாத்விகராஜஸ தாமஸப்பிரிவுகள் உண்டு என்று பாத்மபுராணத்தில் விளக்கப்பட்டது. அப்புராணத்தில் (பூஞ ஆநந்த₃ாஶ்ரமப்பதிப்பில் உத்தரகண்டம் 263ம் அத்தியாயத்தில்) ஓர் அழகான விருத்தாந்தம் விவரிக்கப்படுகிறது:— பார்வதீ தேவியானவள், சிவப்பிரானைப்பார்த்து ''பாஷண்டர்களோடு பேசவே கூடாதென்று நீர் சொன்னீர்; அப்பாஷண்டர்களின லக்ஷணம் என்ன' என்று கேட்டாள்; ''நாரயணனைக் காட்டிலும் வேறான ஒரு தேவனைப் பரமாத்மாவாக யார் கூறுகிறூர்களோ, அவனேடு ஸமமாக ப்₃ரஹ்மருத்₃ராதி₃ தேவதைகளை யார் சொல்லுகிறூர்களோ, கபாலம், ப₄ஸ்மம் (சாம்பல்), எலும்பு முதலான அவைதி₃கமான அடையாளங்களை யார் தரிக்கிறூர்களோ, ஸந்யாஸாஶ்ரமத்துக்குத் தகுதியில்லாமலே சடை மரவுரிகளை யார் தரிக்கிறூர்களோ, அவைதி₃கமான பல செயல்களை யார் செய்கிறூர்களோ அவர்கள் பாஷண்டிகள்'' என்று தொடங்கி விரிவாகப் பாஷண்டி₃களின அடையாளங்களைச் சொன்னூர் சிவன். இதைக்கேட்ட*

பார்வதி, "இதுவே பாஷண்டிகளின் லக்ஷணமாகில், நீர் ஏன் கபாலம், ப₄ஸ்மம், எலும்பு முதலான அந்த வேத₃நிந்தித₃மான அடையாளங்களை தரிக்கிறீர்?" என்று கேட்டாள்; இப்படிக் கேட்கப்பட்ட முக்கட்பிரான் ஒருவருமில்லாத இடத்திற்குப் பார்வதியை அழைத்துச்சென்று, 'நீ இதை எவரிடமும் சொல்லாதே' என்று ஆணையிட்டு "முற்காலத்தில் நமுசி முதலான அஸுரர்கள் வேத₃த₄ர்ம நிஷ்டா₂ர்களாய்,விஷ்ணு ப₄க்தர்களாயிருந்தமையாலே வெல்லவரிய ப₃ல வீர்யங்களை உடையவர்களாயிருந்தனர். அவர்களால் அடக்கப்பெற்ற தேவர்கள் பரமபுருஷனை விஷ்ணுவிடம் முறையிட்டனர். விஷ்ணுவானவர் என்னைப் பார்த்து, 'தே₃வத்₃வேஷிகளான இவ்வஸுரர் அவைதி₃கர்களாய், என்னிடம் பக்தியற்றவர்களாகி பலங்குறைந்தவர்களாவதற்காக நீ நேரேயும், பல அந்தணர்களை ஆவேசித்து நின்றும், பல பாஷண்ட₃ ஶாஸ்திரங்களையும், தாமஸ புராணங்களையும் செய்து, அவற்றில் கபால ப₄ஸ்மாஸ்தி₂ த₄ாரணம் முதலான பாஷண்ட₃த₄ர்மங்களை அவர்களுககு உபதேசிப்பாயாக' என்று நியமிக்க, 'இதனால் எனக்குப் பெரும் பாவம் வந்து சேருமே' என்று நான் நடுங்க, 'தேவதைகளின் நலத்துக்கும், பாவிகளான அஸுரர்கள் அழிவதற்கும் நீ இப்படிச் செய்தே தீரவேண்டும். ஆயினும், இதற்கு ப்ராயச்சித்தமாக என்னை நெஞ்சில் தியானித்து, என்னுடைய தாரக மந்திரத்தை ஜபித்துக்கொண்டேயிருந்தால் உன்னிடம் பாபம் ஒட்டாது' என்று நியமித்தார். நானும் அப்படியே செய்தேன்" என்று கூறினார் சிவன். இதை கேட்ட பார்வதீதே₃வியால்

**"தாமஸாநி ச ஶாஸ்த்ராணி ஸமாசக்ஷ்வ மமாநக₄ ।**
**ஸம்ப்ரோக்தாநி ச யைர் விப்ரைர் ப₄க₃வத்₃ப₄க்திவர்ஜிதை: ॥**
**தேஷாம் நாமாநி க்ரமஶ: ஸமாசக்ஷ்வ ஸுரேஶ்வர ॥**

[குற்றமற்ற தேவர் தலைவனே! பகவத்பக்தியற்ற அந்தணர்களாலே சொல்லப்பெற்ற தாமஸ ஶாஸ்திரங்களை வரிசையாய்ப் பெயரிட்டு எனக்குச் சொல்லுவீராக.] என்று பிரார்த்திக்கப்பட்ட முக்கட்பிரான்,

"ஶ்ருணு தே₃வி ப்ரவக்ஷ்யாமி தாமஸாநி யதா₂க்ரமம் |
யேஷாம் ஸ்மரணமாத்ரேண பாதித்யம் ஜ்ஞாநிநாமபி ||
ப்ரத₂மம் ஹி மயா சோக்தம் ஶைவம் பாஶுபதாதி₃கம் |
மச்ச₂க்த்யாவேஶிதைர் விப்ரை: ப்ரோக்தாநி ச தத: ஶ்ருணு ||
கணாதே₃ந ச ஸம்ப்ரோக்தம் ஶாஸ்த்ரம வைஶேஷிகம் மஹத் |
கௌ₃தமேந தத₂ா ந்யாயம ஸாங்க்₂யம் து கபிலேந வை ||
தி₄ஷணேந தத₂ா ப்ரோக்தம சார்வாகமதிக₃ர்ஹிதம் |
தை₃த்யாநாம் நாஶநார்த்த₂ாய விஷ்ணுநா பு₃த்₃த₄ரூபிணா ||
பௌ₃த்₃த₄ ஶாஸ்த்ரமஸத ப்ரோக்தம நக்₃நநீலபடாதி₃கம் |
மாயாவாத₃மஸச்ச₂ாஸ்த்ரம ப்ரச்ச₂ந்நம பௌ₃த்₃த₄முச்யதே ||
மயைவ கதி₂தம் தே₃வி கலௌ ப்₃ராஹ்மணரூபிணா |
அபார்த்த₂ம ஶ்ருதிவாக்யாநாம தூ₃ர்ஶயல் லோககர்₃ஹிதம் ||
கர்மஸ்வரூபத்யாஜ்யத்வமதர வை ப்ரதிபாத்₃யதே |
ஸர்வகர்மபரிப்₄ரஷ்டம வைத₄ர்ம்யத்வம் தது₃ச்யதே ||
பரேஶஜீவயோரைக்யம் மயா து ப்ரதிபாத்₃யதே |
ப்₃ரஹ்மணோபி ஸ்வயம ரூபம நிர்க்கு₃ணம் வக்ஷ்யதே மயா ||
ஸர்வஸ்ய ஜக₃தோ ऽப்யத்ர மோஹநார்த்த₂ம் கலௌ யுகே₃ |
வேத₃ார்த்த₂வந்மஹாஶாஸ்த்ரம் மாயயா யத₃வைதி₃கம் ||
மயைவ ரக்ஷ்யதே தே₃வி ஜக₃தாம் நாஶகாரணாத் |
த்₃விஜநமநா ஜைமிநிநா பூர்வம் வேத₃மபார்த்த₂கம் ||
நிரீஶ்வரேண வாதே₃ந க்ருதம ஶாஸ்த்ரம் மஹததரம் |"

*[தேவியே! தாமஸஶாஸ்திரங்களை முறைப்படி சொல்லுகிறேன் கேளாய்! இந்தத் தாமஸஶாஸ்திரங்களை (ஆநுகூல்ய பு₃த்₃தி₄யோடு) நினைத்தால்கூட அறிவாளிகளுக்கும் பதிதத் தன்மை ஏற்படும். முதன் முதலில் பாசுபதம் முதலான சைவாகமங்கள் என்னால் நேரே சொல்லப்பட்டன. என் சக்தியால் ஆவேஶிகக்கப்பட்ட அந்தணர்களாலே உபதேசிக்கப்பட்ட தாமஸ சாஸ்திரங்களை அடுத்தபடி கூறுகிறேன் கேளாய்! வைஶேஷிகம் என்னும் பெரிய ஶாஸ்திரம் கணாத₃ராலே கூறப்பட்டது; கௌதமராலே ந்யாய ஶாஸ்திரம் கூறப்பட்டது (இவ்விரண்டும் பரமாணுவை ஜகத்காரணமாகச் சொல்லுகின்றவை.) கபிலரால் (மூல ப்ரக்ருதியை ஜகத்காரணமாகச் சொலலும) ஸாங்க்₂ய*

ஶாஸ்திரம் செய்யப்பட்டது. தே₃வகு₃ருவான பிருஹஸ்பதியால் மிகத்தாழ்ந்ததான சார்வாக ஶாஸ்திரம் இயற்றப் பட்டது. திரிபுராசுரர்களை அழிப்பதற்காக பு₃த்₃த₄ாவதாரம் எடுதத விஷ்ணுவாலே நக்₃னம் நீலபடம் முதலான பிரிவுகளையுடைய பௌ₃த்₃த₄ம் என்னும் தீய சாஸ்திரம் உபதேசிக்கப்பட்டது. மாயாவாதம் என்னும் தீய ஶாஸ்திரம் மறைந்துநிற்கும் பௌ₃த்₃த₄மதம் எனப்படுகிறது. கலியுகத்தில் அந்தணவுருக்கொண்ட என்னாலேயே அது சொல்லப்படும். வேதவாக்யங்களுக்கு அனைவரும் இகழத்தக்க அவப்பொருள்களை அந்த மாயாவாதம் காட்டும். அந்த மதத்தில கர்மததிற்கு ஸ்வரூபத்யாக₃மே சொல்லப்படும். அதில், எல்லாக் கர்மங்களினின்றும் நீங்கிய ஸந்யாஸாஶ்ரமம் சொல்லப்படும். அதில ஜீவாத்மாவுக்கும் பரமாதமாவுக்கும என்னால் ஸ்வரூபைக்யம் கூறப்படுகிறது. பரஹ்மத்திற்கு நிர்கு₃ணஸ்வரூபமும் என்னால் சொல்லப்படுகிறது. கலியுகத்தில் தீயவர்கள் அனைவரும் மயங்குவதற்காக அவைதி₃கமான இந்தப் பெரிய ஶாஸ்திரம் வேதா₃ர்த்த₂ம் போலே என்னால வஞ்சனையால் அவர்களை அழிப்பதற்காக ரக்ஷிக்கப்படப்போகிறது. ஜைமினியென்னும் அந்தணராலே வேதத்தின் பூர்வபா₃க₄மாகிற பெரிய சாஸ்த்ரம் நிரீஶ்வர வாதம் செய்யவதாய், அவப்பொருளுடையதாகச் செய்யப் பட்டது.] என்று தொடங்கிப் பாவிகளை அழிப்பதற்காக சைவாக₃மம், மாயாவாத₃ ஶாஸ்திரம் முதலான அஸச்ச₂ாஸ்திரங்களைத்தான் நேரேயும், பல அந்தணர்களின் உட்புகுந்தும் இயற்றியிருப்பதை ரஹஸ்யமாகப் பார்வதிக்குச் சொல்லி, பதினெட்டு மஹாபுராணங்களில் ஸாத்விக ராஜஸ தாமஸப்பிரிவைச் சொல்லி,

**"வாஸிஷ்ட₂ஞ்சைவ ஹாரீதம் வ்யாஸம் பாராஶரம் தத₂ா ।**
**ப₄ாரத்₃வாஜம் காஶ்யபம் ச ஸாத்விகா முக்தித₃ா: ஶுப₄ா: ॥**
**யாஜ்ஞவலக்யம் தத₂ாऽऽத்ரேயம தைத்திரம் த₃ாக்ஷமேவ ச ।**
**காத்யாயநம் வைஷ்ணவம் ச ராஜஸா: ஸ்வர்க்க₃த₃ா: ஶுப₄ா: ॥**
**கௌ₃தமம் பா₃ர்ஹஸ்பத்யஞ்ச ஸாம்வர்த்தம் ச யமம ஸ்மருதம் ।**
**ஶங்க₂ம் சௌஶநஸம்தே₃வி தாமஸா நிரயப்ரத₃ா: ॥**

**கிமத்ர ப$_3$ஹூனோக்தேந புராணேஷு ஸ்ம்ருதிஷ்வபி|**
**தாமஸா நரகாயைவ வர்ஜயேத் தாந் விசக்ஷண: ||"**

*[(1) வாஸிஷ்ட்டம். (2) ஹாரீதம். (3) வ்யாஸம். (4) பாராஶரம். (5) பா$_4$ரத்$_3$வாஜம். (6) காஶ்யபம் என்னும் ஆறு ஸ்ம்ருதிகளும் ஸத்வகு$_3$ணப்ரதா$_4$னரால இயற்றப்பெற்றவை; (அதனாலேயே) சுபமானவையாய். பின்பற்றுகிறவர்களுக்கு முக்தியளிப்பவையாயிருப்பவை. (1) யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி (2) அத்ரிஸ்ம்ருதி (3) மைத்திரஸ்ம்ருதி (4) த$_3$க்ஷஸ்ம்ருதி (5) காத்யாயனஸ்ம்ருதி (6) விஷ்ணுஸ்ம்ருதி என்னும் ஆறும் ரஜோகுணப்ரதா$_4$னரால இயற்றப்பெற்றவையாகையாலே பின பற்றுகிறவர்களுக்கு ஸ்வர்க்கமளிப்பவையாயிருப்பவை. (1) கௌ$_3$தமஸ்ம்ருதி. (2) ப்$_3$ருஹஸ்பதி ஸ்ம்ருதி (3) ஸம்வர்த்தஸ்ம்ருதி (4) யமஸ்ம்ருதி (5) ஶங்க$_2$ ஸ்ம்ருதி (6) ஔஶநஸஸ்ம்ருதி என்னும் ஆறும் தமோகு$_3$ண ப்ரதா$_4$னர்களால் இயற்றப்பெற்றவையாகையாலே பின் பற்றுகிறவர்களுக்கு நரகத்தை அளிப்பவையாயிருப்பவை. பல சொல்லி என்? புராணங்களிலும். ஸ்ம்ருதிகளிலும் தாமஸங்கள் தம்மைப் பின்பற்றுவார்க்கு நரகத்தையே அளிக்குமாகையால. அறிவாளியாயிருப்பவன் அவற்றை விலக்கவேண்டும்.] என்று ஸ்ம்ருதிகளிலும் ஸாத்விக ராஜஸதாமஸப்பிரிவைச் சொல்லி தாமஸஸ்ம்ருதிபுராணங்கள் அடியோடு விலக்கத்தக்கவை என்று உத்கோஷித்தார்.*

*வீரமித்ரோதயம் என்னும் நிப$_3$ந்த$_4$க்$_3$ரந்த$_2$த்தில் எடுக்கப்பட்ட ப்ரயோக$_3$பாரிஜாதம் என்னும் நூல்—*

**"நாரத$_3$: புலஹோ கா$_3$ர்க்$_3$ய: புலஸ்த்ய: ஶௌநக: க்ரது: |**
**போ$_3$தா$_4$யனோ ஜாதுகர்ண: விஶ்வாமித்ர: பிதாமஹ: ||**
**ஜாபா$_3$லிர் நாசிகேதஶ்ச ஸ்கந்தோ$_3$ லோகா$_3$க்ஷிகௌ$_3$தமௌ|**
**வ்யாஸ: ஸநத்குமாரஶ்ச ஶந்தநுர் ஜநகஸ் ததா$_2$ ||**
**வ்யாக்$_4$ர: காத்யாயநஶ்சைவ ஜாதுகர்ண்ய: கபிஞ்ஜல: |**
**பௌ$_3$தா$_4$யநஶ்ச காணாதோ$_3$ விஶ்வாமித்ரஸ் ததை$_2$வ ச ||**
**பைட$_2$நஸிர் கோ$_3$பி$_4$லஶ்சேத்யுபஸ்ம்ருதிவிதா$_4$யகா: ||"**

[1. நாரதர் 2. புலஹர் 3. கா³ர்க்³யர் 4. புலஸ்த்யர் 5. ஶௌநகர் 6. க்ரது 7. பௌ³தா⁴யநர் 8. ஜாதுகர்ணர் 9. விஶ்வாமித்ரர் 10. பிதாமஹர் 11. ஜாபா³லி 12. நாசிகேதர் 13. ஸ்கந்த³ர் 14. லோகா³க்ஷி 15. கௌ³தமர் 16. வ்யாஸர் 17. ஸநத்குமாரர் 18. ஶந்தனு 19. ஜநகர் 20. வ்யாக்⁴ரர் 21. காத்யாயனர் 22. ஜாதுகர்ண்யர் 23. கபிஞ்ஜலர் 24. பௌ³தா⁴யனர் 25 காணாத³ர் 26. விஶ்வாமித்ரர் 27. பைடீ²நஸி 28. கோ³பி⁴லர் என்னும இருபத்தெட்டு பேரும் உபஸ்ம்ருதிகளைச் செய்தவர்கள்.] என்று உபஸ்ம்ருதிகளைச் செய்தவர்களில இருபத்தெட்டுபேரை எடுக்கிறது. [விஶ்வாமித்ரர் இருவர் இருந்திருப்பதாகத் தெரிகிறது.]

யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதியில் எடுக்கப்பட்ட இருபது ஸ்ம்ருதிகளும். "மன்மத²நாத²தத்தர் (ஶாஸ்திரி) M. A." என்பவரால் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கில மொழிபெயர்ப்போடு கல்கத்தாவில் அச்சிடபபெற்றிருக்கின்றன. இவற்றில் பெரும்பான்மையான ஸ்ம்ருதிகள் பம்பாய் வெங்கடேஶ்வர ஸ்டீம் பிரஸ்ஸிலும், பூனா ஆநந்தாஶ்ரமத்தில், "ஸ்ம்ருதிஸமுச்சயம்" என்னும் பெயரிலும் அச்சிடப்பெற்றுள்ளன. மாக்ஸ் முல்லர் என்னும் ஐரோப்பியர் இந்த ஸ்ம்ருதிகளில் பலவற்றை "The Sacred books of the east" என்னும் வரிசையில், ஜூலியஸ் ஜாலி. ஜார்ஜ் பூ⁴லர் முதலான ஐரோப்பிய அறிஞர்கள் பலரைக்கொண்டு சென்ற நூற்றாண்டின் இறுதியில ஆங்கிலத்தில மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார். "மந்மூக²ராய் மோர். 5. கிளைவ்ரோ. கல்கத்தா-1" என்னும் விலாஸத்தில் முற்கூறிய ஸ்ம்ருதிகளும். மற்றும் பலவும் அச்சிடப்பெற்றுள்ளன. திருவனந்தபுரம் அரசாங்கத்தாரால் (Trivandrum Sanskrit Series No 120) ஶௌநகஸ்ம்ருதியும். (ஷை 134) யோக³யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியும் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. க்ரந்த²ாக்ஷரத்திலும். தெலுங்கு அக்ஷரங்களிலும் ஶாண்டி³ல்யஸ்ம்ருதி முதலான சில ஸ்ம்ருதிகள் தமிழ் நாட்டில பதிப்பிக்கப்பெற்றுள்ளன. ஒரே பெயரில்

இரண்டு அல்லது மூன்று விதமான ஸ்ம்ருதிகள் கூட உள்ளன. நமக்குத் தெரிந்தவரையில், முற்கூறிய எல்லாப் பதிப்புகளிலும் 57 ஸ்ம்ருதிகள் அச்சிடப்பெற்றுள்ளன. அவையாவன:—1. மனு. 2. அத்ரி (2) 3. விஷ்ணு. 4. ஹாரீதர் 5. யாஜ்ஞவல்க்யர். 6. உஶநா (2) 7. அங்கி$_3$ரா (3) 8. யமர் 9. ஆபஸ்தம்$_3$பர். 10. ஸம்வர்த்தர். 11. காத்யாயனர். 12. ப்$_3$ருஹஸ்பதி(2) 13.பராசரர். 14.வ்யாஸர். 15.ஶங்க$_2$ர். 16. லிகி$_2$தர். 17. த$_3$க்ஷர். 18. கௌ$_3$தமர். 19. ஶாதாதபர், 20. வஸிஷ்ட$_2$ர்(2) 21. கே$_3$ாபி$_4$லர். 22. தே$_3$வலர். 23.ப்ரஜாபதி. 24. ப்$_3$ருஹத்$_3$யமர். 25. லகு$_4$விஷ்ணு, 26. லகு$_4$ஶங்க$_2$ர், 27. லகு$_4$ஶாதாதபர். 28. லகு$_4$ஹாரீதர். 29. லகு$_4$ஆஶ்வலாயனர். 30. வ்ருத்$_3$த$_4$ஶாதாதபர். 31. வ்ருத்$_3$த$_4$ஹாரீதர். 32. ஶங்க$_2$லிகி$_2$தர். 33. போ$_3$த$_4$ாயநர். 34. லகு$_4$வ்யாஸர். 35. மார்கண்டே$_3$யர். 36. வ்ருத்$_3$த$_4$கௌ$_3$தமர். 37. லகு$_4$யமர், 38. அருணர், 39.புலஸ்த்யர். 40.பு$_3$த$_4$ர் 41.யோக$_3$யாஜ்ஞவல்க்யர். 42.ப்$_3$ருஹத்$_3$யோக$_3$யாஜ்ஞவல்க்யர்.43.ப்$_3$ரஹ்மோக்தயாஜ்ஞயவல்க்யர். 44.காஶ்யபர். 45. வ்யாக்$_4$ரபாத$_3$ர் 46.கபிலர். 47. வாதூ$_4$லர். 48. விஶ்வாமித்ரர். 49. லோஹிதர். 50. நாராயணர். 51. ஶாண்டி$_3$ல்யர். 52. கண்வர். 53. த$_3$ால்ப்$_4$யர். 54. ப$_4$ாரத்$_3$வாஜர், 55. வ்ருத்$_3$த$_4$பராஶரர் (பராஶரவிஶிஷ்ட பரமத$_4$ர்மஶாஸ்த்ரம்) 56. ஶௌநகர். 57. லோக$_3$ாக்ஷி.

அச்சிடப்பட்டுள்ள இவை தவிர அச்சிடப்படாத மற்றும் பல ஸ்ம்ருதிகளும் நிப$_3$ந்த$_4$காரர்களால் எடுக்கப் பட்டுள்ளன. ஸ்ம்ருதிகளை இயற்றியவர்கள் பலர் என்பது அந்தந்த ஸ்ம்ருதிகளிலிருந்தே விளங்குகிறது.

நிற்க. ஸூத்ரஶைலியில் அமைந்த ஶங்க$_2$லிகி$_2$த ஸ்ம்ருதியொன்று இருந்ததாகப் பழைய நிப$_3$ந்த$_4$நூல்களிலிருந்தே தெரிகிறது. இப்போது அச்சிடப்பட்டிருக்கும் ஶ்லோகரூபமான ஶங்க$_2$லிகி$_2$தஸ்ம்ருதிகள் அதிலும் வேறுபட்டவையென்று அறியத்தக்கது. ஶ்லோகரூபமான ஶங்க$_2$ ஸ்ம்ருதியில் வேத$_3$விருத$_3$த$_4$மான பகுதிகள் யாதொன்றும் இல்லாமையாலும், வேதத்தோடு அது மிகவும் ஒத்திருக்கையாலும், கீழே எடுத்த பாத்$_3$மபுராண ஶ்லோகத்தில் தாமஸம்

என்று கழிக்கப்பட்டது ஸூத்ரசைலியில் அமைந்திருந்த ஶங்க₂ஸ்ம்ருதியே என்று அறியத்தக்கது. இவ்வண்ணமே ப்₃ருஹஸ்பதிஸ்ம்ருதியும் ஸூத்ரசைலியில் ஒன்று அமைந்திருந்ததாகத் தெரிகிறது. அதுவே சார்வகமதத்தை உபதேசிப்பது ; "அத₂லோகயதம். ப்ருதி₂வ்யாபஸ் தேஜோ வாயுரிதி தத்வாநி. தேப்₄யஶ் சைதந்யம கிண்வாதி₃ப்₄யோ மத₃ஶக்திவத்" [இனி. லோகாயதமதம் விவரிக்கப்படுகிறது. பூமி, ஜலம், அகனி, வாயு என்று நாலு பொருள்களே உள்ளன. கள் முதலான திரவியங்களில மத₃சக்தி உண்டாவதுபோலே இந்த நாலு பூதங்களுடைய சேர்த்தியிலே அறிவு என்று ஒரு தன்மை பிறக்கிறது.] என்று தொடங்குவதாக ஈட்டின் ப்ரமாணத்திரட்டு முதலான ப்ராசீன நூல்களிலே எடுக்கப்பட்ட அந்த நாஸ்திகநூலே பாத்மபுராணத்தில் தாமஸமாகக் கழிக்கப்பட்டதென்று உணரத்தக்கது. மந்மதநாததத்தர் முதலானோரால் அச்சிடப் பெற்ற இருபது ஸ்ம்ருதிகளில சேர்ந்த ஶ்லோகரூபமான ப்₃ருஹஸ்பதிஸ்ம்ருதியும், பல பூர்வாசார்யர்களாலும், ப்ராசீநநிப₃ந்த₄காரர்களாலும் கையாளப்பட்டதும், இப்போது லுப்தமாயிருப்பதும் 'பரோடா ஓரியண்டல் இன்ஸ்டியூட்' என்னும் ஸ்தாபனத்தால் காசி ஹிந்து ஸர்வ கலாசாலைப்பேராசிரியர் ஸ்ரீ K. V. ரங்கசாமி அய்யங்காரைக் கொண்டு புநருத்₃த₄ாரணம செய்யப்பெற்று (GAEKWAD'S ORIENTAL SERIES. VOLUME LXXXV) பதிப்பிக்கப் பெற்றிருப்பதுமான ஶ்லோகரூபமான ப்₃ருஹஸ்பதிஸ்ம்ருதியும் வேதத்தையொட்டியிருக்கையாலே கைக்கொள்ளத்தக்கவையே. மற்றும் பாத்₃மபுராணத்தில் தாமஸமென்று கழிக்கப்பட்ட கௌ₃தம ஸம்வர்த்த யம ஔஶநஸ ஸ்ம்ருதிகள் பரதத்துவத்தைப் பற்றிப் பேசாமலே செல்கின்றனவாகையாலே தாமஸமென்று கழிக்கப்பெற்றனவென்று கொள்ளத்தக்கது.

"யா வேத₃பா₃ஹ்ய: ஸ்ம்ருதயா யாஶ்ச காஶ்ச குத்₃ருஷ்டய: |
ஸர்வாஸ்தா நிஷ்ப₂லா: ப்ரேத்ய தமோநிஷ்டா₂
ஹி தா: ஸ்ம்ருதா: || [மநு 12-95]

[வேதத்திற்குப் புறம்பானவையும், வேதத்திற்கு அவப் பொருள் உரைப்பவையுமான ஸ்ம்ருதிகள் மறுமையில பயனற்றவையாகும். அவை தாமஸங்களன்றோ.] என்று பகவான் மநுவும் வேதத்திற்கு முரண்பட்ட தாமஸ ஸ்ம்ருதிகள் மறுமையில நல்ல கதியை விளக்கமாட்டா என முழங்கினர். "ஸ்ம்ருத்யநவகாஶதோ₃ஷப்ரஸங்க₃ இதி சேத் ந; அந்யஸ்ம்ருத்யநவகாஶதோ₃ஷ ப்ரஸங்கா₃த்" [ப்ரஹ்மஸூத்ரம் 2-1-1] [(ஸாங்க்₂யமதத்தை ஒப்புக் கொள்ளாவிடில) கபிலஸ்ம்ருதி வீணுகப்போகிறதே எனில்; கூடாது; (அதை ஒப்புக்கொண்டால்) மற்ற ஸ்ம்ருதிகள் வீணுகப்போகும்] என்று ப்₃ரஹ்மஸூத்ரகாரரும், வேத₃த்தோடு முரண்பட்ட ஸ்ம்ருதிகளைக் கைவிட்டு, வேதத்தை ஒட்டியிருக்கும் ஸ்ம்ருதிகளையே ஏற்கவேண்டும் என அறுதியிட்டார். "விரோதே₄ த்வநபேக்ஷம் ஸ்யாத் அஸதி ஹ்யநுமாநம்" [ஜைமிநிஸூத்ரம் 1-3-3] [வேதத்தோடு விரோதிக்குமாகில், (ஸ்ம்ருதி) கைவிடத்தக்கதே; விரோத மில்லாவிடிலன்றோ மூலவேதத்தை அநுமானம செய்வது.] என்று பூர்வமீமாம்ஸையில் விரோத₄ாதி₄கரணத்தில் ஜைமிநி யும் இவ்விஷயததை மிகத்தெளிவாக உரைத்தார். வேத₃ாந்திகள் அனைவரும் ஒப்புக்கொள்ளும் விஷயமிது. ஆக, வேதத்திற்கு முரண்படாத ஸ்ம்ருதிகள் வேதத்திற்கு உபப்₃ரும்ஹணமாகக்கொள்ளத்தக்கவை என்றதாயிற்று.

6. இதிஹாஸங்கள் எவ்வளவு? அவற்றை ஒருவரே இயற்றி ஞரா? பலர் இயற்றிஞர்களா?

ஸ்ரீராமாயணமும், மஹாபா₄ரதமும் நம்நாட்டில பல்லாயிரக்கணககான வருஷங்களாக இதிஹாஸங்கள் என வழங்கப்படுகின்றன. ஸ்ரீராமாயணத்தை இயற்றியவர் வாலமீகிமஹர்ஷி. மஹாபாரதத்தை இயற்றியவர் வேத வியாஸர். இவை பரமப்ரமாணமாக வேதாந்திகள் அனைவராலும் கொண்டாடப்படுகின்றன.

7 புராணங்கள் எவ்வளவு? அவற்றை ஒருவரே இயற்றி ஞரா? பலர் இயற்றிஞர்களா? அவை எல்லாம் ப்ரமாணங்களா? அவற்றுள் சிலவைதான் பிரமாணங்களா?

மஹாபுராணங்கள் பதினெட்டாகக் கணக்கிடப்பட்டிருக்கின்றன. உபபுராணங்களும் உண்டு; அவற்றை இயற்றியவர் பலர் என்பது அந்தப்புராணங்களைப் பார்த்தாலே தெரியவரும். "அஷ்டாத₃ஶ புராணநாம் கர்த்தா ஸத்யவதீஸுத:" [பதினெட்டு புராணங்களையும் செய்தவர் ஸத்யவதீபுத்ரரான வியாஸர்] என்று கூறுவது 'அவர் வேதங்களைப்போலே புராணங்களையும் பல பிரிவாகப் பிரித்து ஸாத்விகராஜஸ தாமஸகுணமுடையவர்களிடையே அந்தந்தப் புராணங்களை ப்ராசாரம் செய்வித்தார்' என்னும் கருத்திலேயே என்றே கொள்ளமுடியும்.

"இதிஹாஸ புராணுப்₄யாம் வேத₃ம் ஸமுபப்₃ரும்ஹயேத் ।
பி₃பே₄த்யல்பஶ்ருதாத்₃வேத₃: மாமயம ப்ரதரிஷ்யதி"
[பாரதம்]

[இதிஹாஸபுராணங்களைக்கொண்டு வேதத்தை விளக்க வேண்டும். வேத பாகங்களில் சிலவற்றை அத்₄யயனம்செய்துவிட்டு. தான் அத்₄யயனம் செய்யாத மற்ற வேத பாகங்களின் பொருளைச் சொல்லும் இதிஹாஸ புராணங்களைக் கேளாதவனைக்கண்டு, 'இவன் என்னைக் கலககிவிடுவானோ' என று வேதம் பயப்படுகிறது.] எனகிறபடியே, ஸ்ம்ருதிகளைப்போலே இதிஹாஸ புராணங்களும் வேதோ₃பப்ரும்ஹணங்களாகும். வேதத்தை உபப்₃ரும்ஹணம் செய்வதற்கு ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களில் ஏதேனும் ஒன்று போராதோ? மூன்றும் வேண்டுமோ? என்னில: வேதமானது பகவானுக்கு ஆராத₄னமான கர்மங்களைச் சொல்லும் பூர்வபாகமெனறும், ஆராதிக்கப்படும் அவனைச் சொல்லும் உத்தரபாகமாகிற உபனிஷத்துக்களென்றும் இருவகைப் பட்டிருக்கிறது. வேதத்தின இவ்விருபகுதிகளையும்

"ப்ராயேண பூர்வபா₄கா₃ர்த்த₄பூரணம் த₄ர்மஶாஸ்த்ரத: ।
இதிஹாஸபுராணுப்₄யாம வேத₃ாந்தார்த்த₂: ப்ரகாஶ்யதே ॥"

[பெரும்பாலும் த₄ர்மஶாஸ்திரங்களைக்கொண்டு வேதத்தின் பூர்வப₄ாகததில தெளிவாயிராத அர்த்தங்கள் தெளிவு படுத்தப்படுகின்றன. உத்தரப₄ாக₃மான வேதாந்தங்களின்

அர்த்தம் இதிஹாஸ புராணங்களைக்கொண்டு தெளிவு படுத்தப்படுகின்றது.] என்கிறபடியே (முறையே) ஸ்ம்ருதிகளும். இதிஹாஸபுராணங்களும் விவரிக்கிறபடியால் இவையனைத்தும் வேண்டியிருக்கிறது. உத்தரபாகத்தை விவரிக்க இதிஹாஸபுராணங்கள் இரண்டும் வேண்டுமோ? ஒன்று போராதோ என்னில்: இரண்டிலும் ஒவ்வொரு குறையிருக்கையாலும், ஒன்றிலுள்ள குறை மற்றொன்றிலில்லாமையாலும் இரண்டும் வேண்டும். அதாவது:—

''ஸங்கீர்ணாஸ்தாமஸாஸ்சைவ ராஜஸாஸ் ஸாத்விகாஸ் ததா$_2$।
கல்பாஸ்சதுர்வித$_4$ா: ப்ரோக்தா ப்$_3$ரஹ்மணோ தி$_3$வஸாத்யயே ||
யஸ்மிந் கல்பே து யத் ப்ரோக்தம் புராணம் ப்$_3$ரஹ்மணா புரா।
தஸ்ய தஸ்ய து மாஹாதம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே ||
அக்$_3$நே: ஶிவஸ்ய மாஹாதம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே।
ராஜஸேஷு ச கல்பேஷு அதி$_4$கம் ப்$_3$ரஹ்மணோ விது$_3$: ||
ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணாஞ்ச நிக$_3$த$_3$யதே।
ஸாத்விகேஷ்வத$_2$ கல்பேஷு மாஹாத்ம்யமதி$_4$கம் ஹரே: ||
தேஷ்வேவ யோக$_3$ஸம்ஸித்$_3$த$_4$ா க$_3$மிஷ்யந்தி பராம க$_3$திம் ||''
[மாத்ஸ்யம் 290]

[பிரமனுக்கு ஒவ்வொரு நாள் முடிந்தவுடனும் ஸங்கீர்ணங்கள். தாமஸங்கள், ராஜஸங்கள், ஸாத்விகங்கள் என்று நான்குவிதமான கல்ப(கால)ங்கள் சொல்லப்படுகின்றன. ஆதிகாலத்தில் எந்தக் கல்பத்தில் எந்தப் புராணம் பிரமனால் உபதேசிக்கப்பட்டதோ, அந்தப் புராணத்தின் மாஹாத்மயம் அந்தக் கல்பத்தின் ஸ்வரூபத்தையொட்டிச் சொல்லபபடுகிறது. அக்னியுடையவும். சிவனுடையவும பெருமை தாமஸ கல்பங்களிலே சொல்லப்பட்டது. ராஜஸகல்பங்களில பிரமனுடைய பெருமை சொல்லப்பட்டதாக (அறிவாளிகள்) அறிகின்றனர்; ஸங்கீர்ண(மிச்ர) கல்பங்களில் ஸரஸ்வதிக்கும் பித்ருக்களுக்கும் பெருமை சொல்லப்படுகிறது. ஸாத்விககல்பங்களில் பகவான் ஹரிக்கு அதிகமான பெருமை சொல்லப்படுகிறது. அவற்றைப்பற்றிநின்றே யோகிகள் பரமபதமடைகின்றனர்.] என்று மாத்ஸ்யபுராணத்திலும்,

"வைஷ்ணவம் நாரதீ$_3$யஞ்ச தத$_2$ா ப$_4$ாக$_3$வதம் ஶுப$_4$ம் |
கா$_3$ருட$_3$ஞ்ச தத$_3$ா பாத்$_3$மம் வாராஹம் ஶுப$_4$த$_3$ர்ஶநே |
ஸாத்விகாநி புராணாநி விஜ்ஞேயாநி ஶுப$_4$ாநி வை ||"

*[பாத்ம-உத்தர 263-83]*

*[(1) வைஷ்ணவம், (2) நாரதீயம், (3) பாகவதம், (4) காருடம், (5) பாத்மம், (6) வாராஹம் என்னும் ஆறு அழகிய புராணங்களும் ஸாத்விக புராணங்களாகையாலே மோக்ஷமளிப்பவை.]*

"ப்$_3$ரஹ்மாண்ட$_3$ம் ப்$_3$ரஹ்மவைவர்த்தம் மார்க்கண்டேயம் ததை$_2$வ ச |
ப$_4$விஷ்யம் வாமநம் ப்$_3$ராஹ்மம் ராஜஸாநி நிபே$_3$ாத$_4$ மே ||"

*[பாத்ம-உத்தர 263-84]*

*[(1) ப்$_3$ரஹ்மாண்ட$_3$ம், (2) ப்$_3$ரஹ்மவைவர்த்தம், (3) மார்க்கண்டே$_3$யம், (4) ப$_4$விஷ்யம், (5) வாமனம் (6) ப்$_3$ராஹ்மம் என்னும் ஆறு புராணங்களும் ராஜஸங்களென்று அறிவாயாக.]*

"மாத்ஸ்யம் கௌர்மம் தத$_2$ா லைங்க$_3$ம் ஶைவம் ஸ்காந்த$_3$ம் ததை$_2$வ ச |
ஆக்$_3$நேயஞ்ச ஷடே$_3$தாநி தாமஸாநி நிபே$_3$ாத$_4$ மே ||"

*[பாத்ம-உத்தர 263-81]*

*[(1) மாத்ஸ்யம், (2) கௌர்மம், (3) லைங்கம், (4) சைவம், (5) ஸ்காந்த$_3$ம், (6) ஆக்$_3$நேயம் என்னும் ஆறு புராணங்களையும் தாமஸ புராணங்களென அறிவாயாக]*

"ஸாத்விகா மோக்ஷத$_3$ா: ப்ரோக்தா ராஜஸா: ஸ்வர்க்$_3$க$_3$த$_3$ா: ஶுப$_4$ா: |
ததை$_2$வ தாமஸா தே$_3$வி நிரயப்ராப்திஹேதவ: ||"

*[ஸாத்விக புராணங்கள் மோக்ஷத்தையும், ராஜஸ புராணங்கள் ஸ்வர்க்கத்தையும், தாமஸ புராணங்கள் நரகத்தையும் அளிக்கும்.]* என்று பாத்மபுராணத்திலும்,

"நாத்$_3$ரியேத புராணேஷூ$_3$ ராஜஸாந் தாமஸாம்ஸ்தத$_2$ா |
அநீஶாநாம் பரேஶத்வம் வ்ருத$_2$ா யத்ரோபவர்ண்யதே ||"

[ராஜஸதாமஸ புராணங்களை ஆதரிக்கக்கூடாது; ஏனெனில்; ஈச்வரரல்லாத ப்ரஹ்மருத்ராதிகளை வீணாக அவற்றில் பரமாத்மாவாகச் சொல்லப்படுகிறதன்றோ] என்று ஸ்ம்ருதியிலும் சொன்னபடியே புராணங்களில பெரும்பகுதி ராஜஸதாமஸங்களாயிருக்கையாகிற குறை புராணங்களுக்கு உண்டு. இக்குறை இதிஹாஸங்களுக்கு இல்லை. கதைகளையும், (ஸாமாந்ய) த₄ர்மார்த்த₂காம புருஷார்த்தங்களையும் விரிவாகச்சொல்லி, அவற்றினிடையே ஒரு சில இடங்களிலேயே பரமதத்துவமான பகவத்ஸ்வரூபத்தையும், பரமஹிதமான பக்திப்ரபத்திகளையும், பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தையும் தெளிவுபடுத்துகையாலே, பரமதத்வஹித புருஷார்த்தங்களை ப்ரத₄ாநப்ரமேயமாகக் கொண்டிராமலிருக்கையாகிற குறை இதிஹாஸங்களுக்கு உண்டு. பரமதத்வஹித புருஷார்த்தங்களையே ப்ரத₄ாநப்ரமேயமாகக் கொண்ட புராணங்களுக்கு இக்குறையில்லை. ஆகையாலே வேதாந்தார்தகத்தை விளக்க இரண்டும் வேண்டும். இப்படி இரண்டும் வேண்டுமாயினும் இவ்விரண்டினுள்ளும், பரிக்₃ரஹாதிசயம் (சாஸ்திரங்களாலும் சான்றோர்களாலும் விசேஷமாகக் கொண்டாடப்படுகை) நடுநிலைமை, இயற்றியவர்கள் பரமாப்தர்களாயிருக்கை முதலான பல காரணங்களாலே இதிஹாஸங்கள் புராணங்களைக் காட்டிலும் ப்ரப₃லமாகவுமிருககின்றன.

8. ஆகமங்கள் எவ்வளவு? அவற்றின் வகைகள் யாவை? அவையெல்லாம் ஒருவரால் இயற்றப்பட்டனவா? பலபேரால் இயற்றப்பட்டனவா? அவையெல்லாம் ப்ரமாணமா? அவற்றுள் சிலவையே ப்ரமாணங்களா?

ஆகமங்கள் சைவம், வைஷ்ணவம் என இருவகைப்படும். சைவாகமங்களில் காரணம், காமிகம் முதலான பல பிரிவுகளும், வைஷ்ணவாகமங்களில் பாஞ்சராத்ரம், வைக₂ாநஸம் என்னும் இரு பெரிய பிரிவுகளும், அவை ஒவ்வொன்றிலும் பல ஸம்ஹிதைகளும் உள்ளன. ஒவ்வொரு ஆகமத்தைச் சேர்ந்த ஸம்ஹிதை ஓவ்வோராலயத்தில் பின்பற்றப்படுகிறது. ஐந்தாவது கேள்வியின் கீழ் எடுக்கப்பட்ட

பாத்மபுராண வசனத்திலிருந்து சிவனால் ஆஸுரமோஹ நார்த்த₂மாக ஶைவாக₃மங்கள் இயற்றப்பட்டன என விளங்குகையால் அவை ஸாத்விகர்களான முமுக்ஷுக்களுக்கு ப்ரமாணமாகமாட்டா. முமுக்ஷுக்களல்லாதார் இவ்வுலகப் பலனைப் பெறுவதற்கு சிவன், சக்தி, கணபதி, முருகன் முதலான தெய்வங்களை உபாஸிப்பதற்கு அவை பயன்படுகின்றன. ப்ரஹ்மஸூத்ரத்தில் "பத்யுரஸாமஞ்ஜஸ்யாத்" என்று தொடங்கும் பஶுபத்யதி₄கரணத்தில், பசுபதி இயற்றிய சைவாகமங்களில் பல குற்றங்களிருக்கையால, அவை ப்ரமாணமாகமாட்டா என்று பா₃த₃ராயணரெனும் வியாஸர் நிர்ணயித்தருளினார். அவரே அடுத்தான உத்பத்யதி₄கரணத்திலும், தமது மஹாபா₄ரதத்திலும் பாஞ்சராத்ரம் பரமப்ரமாணம் என்றும் நிலைநாட்டியருளினார். ஆதி₃ஶங்கரரும், தமது ப்₃ரஹ்மஸூத்ரபாஷ்யத்தில் பசுபத்யதி₄கரணத்தில சைவாகமங்கள் அப்ரமாணம என நிரூபித்து, பாஞ்சராத்ராதி₄கரணத்தில, "பாஞ்சராத்ரிகள் நாராயணன் பரமாத்மா என்று கூறுவது மறுக்கப்படவில்லை; பஞ்சகாலபராயணர்களாய், அவனை ஆராதி₄ப்பதே மோக்ஷஸாத₄நம் என்று கூறுவதும் மறுக்கப்படவில்லை; பாஞ்சராத்ரத்தில் ஜீவனுக்கு உத்பத்தி சொல்லியிருப்பதே மறுக்கப்படுகிறது" என்று பொருள்பட எழுதியிருக்கிறார். பாஞ்சராத்ரத்தில் பலவிடங்களில் ஜீவன் உத்பத்தியற்றவன் என்று கூறியிருப்பதை எடுத்துக்காட்டி, ஜீவோத்பத்தியைக் கூறுவதாக சங்கரரால கருதப்பட்ட வசநம் வேறு பொருளை உடையது என்று நிரூபித்து, பாஞ்சராத்ரம் முழுவதும் ப்ரமாணம் என்பதே ப்ரஹ்மஸூத்ரகாரருடைய கருத்து என்று வைஷ்ணவாசார்யர்கள் நிலைநாட்டினார்கள். இதிலிருந்து சங்கர மதஸ்தர்களான அத்வைதிகள் சைவாகமங்களில் பரம்பொருளாகக் கூறப்பட்ட சிவனையும், சக்தி, கணபதி, முருகன் ஆகிய சிவ குடும்பத்தையும் ஸகு₃ணப₂ரஹ்மமாக உபாஸிப்பது நியாயமல்ல என்பதும், நாராயணனை ஸகு₃ணப்₃ரஹ்மமாக உபாஸிப்பதே நியாயம் என்றும் தெளிவாக விளங்குகிறது. ஷண்மதஸ்தா₂பந சர்ச்சையில் இவ்விஷயம்

மிக முக்கியமானது. 'பா₄ஷ்ய பா₄வஜ்ஞர்' என்னும் விருது வகிக்கும் சாஸ்திரிகள் நமது கேள்விகளுக்கு பதில உரைக்கும் போது இவ்விஷயத்தைத் தெளிவுபடுத்தவேண்டும்.

9. காவ்யங்கள் ப்ரமாணங்களா? ப்ரமாணங்களெனில், எல்லாமா, சிலவையா?

காலததை வென்று நிற்கும் காவியங்கள் ஶப்₃த₃வ்யுத்பத்தி, பத₃ங்களின் பிரயோகம் முதலானவற்றைத் தெரிவிப்பதில் ப்ரமாணமாகின்றன. மேலும், அவ்வக்காலங்களில் நாட்டின் நிலையைத் தெரிவிப்பதிலும அவை பயனபடுகின்றன. உதா₃ஹரணமாக, ஆதி₃காவ்யமான வால்மீகி ராமாயணத்தைப் பார்த்தால, அக்காவியம் விஷ்ணுபரத்வத்தையும், மற்ற தேவதைகளின் அவரத்வததையுமே சொல்லுகையாலும், 'ஜக₃த் ஸர்வம் ஶரீரம் தே' என்று உலகிற்கும் நாராயணனுககும ஶரீரஶரீரிபா₄வத்தைச் சொலலுகையாலும, "கோ ந்வஸமிந்....கு₃ணவாந்" "ப₃ஹூ₄வ குணவத்தர:" "ப₃ஹவோ ந்ருப கல்யாணகு₃ணா: புத்ரஸ்ய ஸந்தி தே" "கு₃ணாநாமாகரோ மஹாந்" என்று முதலிலிருந்து முடிவு வரையில் பகவானுடைய கல்யாணகுணங்களையே சொல்லுகையாலும், நிர்க்கு₃ணவாததததையும ஜக₃ந்மித்₂யாத்வ வாதத்தையும் எங்குமே செய்யாமையாலும அக்காலத்தில பா₄ரத தே₃ஶத்தில விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ மதமே கொடி கட்டிப்பறந்தது எனறும், அத்வைத மதமும, சைவம், சாக்தம், முதலான மதங்களும் எவராலும் பின்பற்றப்படவில்லை என்றும் விளஙகுகிறது தமிழ் நாட்டில மிகபபழைய நூலகளான சங்க இலககியங்களை ஆராயநதால, தமிழ்நாட்டிலும இந்நிலையே நிலவியது என விளங்குகிறது. இதை நமது 'சாதிமத ஆராய்ச்சி' என்னும் நூலில விரிவாக விளக்கியிருக்கிறோம். அதை சாஸ்திரிகளுக்கும அனுப்பியிருககிறோம். அதில காணலாம். பிற்காலக காவியங்களை ஆராய்ந்தால் பௌததம் சமணம, சைவம் சாக்தம், அதவைதம முதலான மதஙகள் நமது நாட்டில சிறிது சிறிதாக வலுவடையத்தொடஙகின என விளங்கும். சைவம், சாக்தம், அதவைதம ஆகியவை வலுவடைய வலுவடைய பௌத்தஜைநமதங்கள் வலு

விழுந்தன என்பதும், ஆதிகாலத்தில் கொடிகட்டிப் பறந்த விஶிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவமதம் சிறுபான்மையின ரால் பின்பற்றப்படும் மதமாக ஆயிற்று என்பதும் விளங்கும். ஆகையால், காவியங்களைக்கொண்டு அநாதி3 ஸித்3த4 வைதி3கமதம் எது என்று நிர்ணயிப்பதில், ப்ராசீந காவ்யங்களுக்கே ப்ராமாண்யாதிஶயம் உண்டு. பிற்காலக் காவியங்களுக்கு அச்சிறப்பு கிடையாது.

10. நிகண்டுகள் ப்ரமாணங்களா? ப்ரமாணங்களெனில், எல்லாமா, சிலவையா?

நிக4ண்டுகள் எலலாமே பத3ங்களின் பிரயோகங் களைத் தெரிவிப்பதில் ப்ரமாணங்கள். அவற்றிலும் பரிக்3 ரஹாதிஶயமுடைய அமரகோஶம், வைஜயந்தி முதலான சிலவற்றுக்கு அப்ரஸித்3த4ங்களான மற்றவற்றைக காட்டி லும் ப்ராமாண்யாதிஶயம உண்டு.

11. போதாயன வ்ருத்தி எக்காலத்தியது? எங்குள்ளது? இப்பொழுது கிடைக்குமா?

ஸ்ரீ ப4க3வத்3ராமாநுஜரால் — தம் ஸ்ரீ பாஷ்யத்தின் தொடக்கத்தில், ப4க3வத்3போ3தா4யனரால் இயற்றப்பெற்ற விஸ்தீர்ணமான ப்3ரஹ்மஸூத்ரவ்ருததியைப பூர்வாசார் யர்கள் சுருக்கினார்கள் என்றும், அவர்களுடைய மதத்தை அநுஸரித்து ஸூத்ராக்ஷரங்களுக்குத் தாம் உரையெழுதுவ தாகவும்—ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது. வ்ருத்தியிலிருந்து சில வாக்யங்களை அவர் தம் ஸ்ரீபாஷ்யத்தில் ஏழு இடங்களில எடுத்திருக்கிறார். ஆதி3ஶங்கரர் தம் ப்3ரஹ்மஸூத்ர பா4ஷ்யத்தில (3-3-53) உபவர்ஷர் என்பவர் கர்மப்3ரஹ்ம மீமாம்ஸைகள் இரண்டுக்கும் வ்ருத்தி எழுதியிருப்பதாக எடுக்கிறார். போ3தா4யநரும் இவ்வுபவர்ஷரும் ஒருவரே எனவும், ஶாப3ரபா4ஷ்யத்தில் (1-1-5) எடுக்கப்பட்ட உபவர்ஷரே இவர் எனவும் சிலர் கருதுகிறார்கள். பரபஞ்ச ஹ்ருத3யம் என்னும் நூலோவெனில் பூர்வோத்தர மீமாம்ஸைகளிலுள்ள இருபது அத்தியாயத்திற்கும் போ4தா4யநர் க்ருதகோடி என்னும் விரிவான வ்ருத்தி

எழுதினர் என்றும். அந்த வ்ருத்தியின் விரிவைக்கண்டு பயந்து. அதைச் சிறிது சுருக்கி உபவர்ஷர் ஓர் வ்ருத்தி இயற்றினர் என்றும் கூறுகிறது. போ₃தா₄யநர். உபவர்ஷர் என்னும் நாமபே₄த₃ம் இதற்கே ஸாத₄கமாயிருப்பதால் இதுவே சரியெனத் தோன்றுகிறது. போ₃தா₄யநருடைய வ்ருத்தியோ. உபவர்ஷருடைய வ்ருத்தியோ இப்போது காணப்படவில்லை. காஶ்மீரஶாரதா₃பீட₂த்திற்குச் சென்று அங்கிருந்த போ₃தா₄யநவ்ருத்தி க்₃ரந்த₂த்தின் ஓரே பிரதியை ஸேவித்துவிட்டுவந்து ஸ்ரீராமாநுஜர் தம் ஸ்ரீபா₄ஷ்யத்தை இயற்றினர் என்று ஸ்ரீராமாநுஜர் காலத்திற்கு 150 வருஷங் களுக்குள் எழுதப்பெற்ற ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை நூல் கூறுகிறது.

12. மூலக்ரந்தம் ப்ரமாணமா? வ்யாக்யானம் பிரமாணமா? ஒரு மூலக்ரந்தத்திற்குப் பல வ்யாக்யானங்கள் இருக்குமானுல் எல்லாம் ப்ரமாணங்களா, சிலவைதாஞ?

மூலமாயினும், வியாக்கியானமாயினும் எது ஶ்ருதி ஸ்ம்ருதிகள் முதலான ப்ரமாணங்களை ஓட்டியிருக்கிறதோ, எது ந்யாயாநுக்₃ருஹீதமாயிருக்கிறதோ அதுவே ப்ரமாணம்; மற்றவை பரமாணமல்ல.

13. ஒரு க்ரந்தம் மற்றவர்களால் கையாளப்பட்டிருந்தால் தான் ப்ரமாணமா? இல்லாத போனுலும் ப்ரமாணமா? கையாளப் படுவது எம்முறையில்? அதிலும் காலவரையறை யாதேனுமுண்டா? அதாவது, குறிப்பிட்ட வருஷத்திற்குள் கையாண்டிருந்தால்தான் ப்ரமாணம். இல்லையேல் இல்லை என்ற நியதி ஏதாவது இருக்கிறதா?

ஐந்நூறு வருடங்களுக்குள் மதச் சண்டைகள் மிகவும் அதி₄கமாகி தமது பிடிவாதத்தை ஸ்தா₂பிப்பதற்காகப் பல கற்பனைகள் சிலரால் செய்யப்பெற்றுள்ளன. அவையாவன:- (1) அதற்குமுன் எவராலும் தொடப்படாத சுமார் 80 உபனிஷத்துக்களைப் புதிதாகக் கற்பித்து. ப்ராசீநர்களால் கையாளபபட்ட உபனிஷத்துககளிலும் பல மாறுதலகளைச் செய்து 'நூற்றெட்டு உபனிஷத்துக்கள்' என்னும் சுவடி உண்டாக்கப்பட்டிருக்கிறது. (2) ஆதிஶங்கருடைய சிஷ்ய

ப்ரபிஷ்யர்களால்எண்ணூறு வருடங்களுக்குமேல் கையாளப் படாத பல துதிநூல்கள் ஆதிஶங்கரர் இயற்றியதாகக் கற்பனை செய்யப்பெற்றுள்ளது. (3) ப்ரஹ்மஸூத்ரத்தில் கண்டிக்கப்பட்ட 1. ஸாங்க்₂யம் 2. யோக₃ம் 3. நையாயிகம் 4. வைஶேஷிகம் 5 பௌ₃த்₃த₄ம் 6. ஜைநம் என்னும் ஆறு வேத₃பா₃ஹ்ய மதங்களே நெடுங்காலமாகப் பலநூல்களில் ஷண்மதங்கள் என்றும், ஷட்₃த₃ர்ஶநங்கள் என்றும் அறு சமயங்கள் என்றும் வழங்கப்பட்டு வந்திருக்கும்போது, ஐந்நூறு வருடங்களுக்கு முன் எவராலும் அப்படி வழங்கப் படாத 1. சைவம் 2 சாகதம் 3. கா₃ணாபத்யம் 4. கௌமாரம் 5. ஸௌரம் 6. வைஷ்ணவம் என்னும் மதங்களுக்கு ஷண்மதங்கள் என்று பெயர் வைத்து, ஆதிஶங்கரர் இந்த ஷண்மதங்களை ஸ்தாபித்தார் என்று பிரசாரம் செய்யப் படுகிறது (4) எந்த சமூகத்தினராலும் பின்பற்றப்படாத சிவ விசிஷ்டாத்வைதம் என்னும் மதத்தைக கற்பித்து, அதற்காக ஸ்ரீகண்ட₂பா₄ஷ்யம் என்று ஒரு பா₄ஷ்யத்தை ஏற்படுத்தி. அந்த ஸ்ரீகண்ட₂ர் ஸ்ரீராமாநுஜருககும் முற்பட்டவர் என்று பரசாரம் செய்யப்படுகிறது. (5) முற்கூறிய பொய்களை மெய்யாக்குவதற்காக ஶங்கரவிஜயம் எனனும் நூலை ஆதிஶங்கரர் பிறந்து சுமார் ஆயிரம் வருடங்கழித்துக் சற்பித்து அதில் பல பொய்களைப் பெய்து வைத்திருப்பது. இவையும், இவைபோன்ற மற்றும் பல க்ருத்ரிமச் செயல்களும் ஐந்நூறு வருடங்களுக்குள் செய்யப்பட்டிருப்பதால். ஐந்நூறு வருடங்களுககு முற்பட்ட ப்ராசீந மஹான்களால கையாளப்பட்ட க்₃ரந்த₂ங்களையும், ப்ரமாணவாக்யங்களையுங்கொண்டு சர்ச்சைசெய்து நிர்ணயிப்பதுதான் முறை. பலரால் பன்னெடுங்காலமாகக் கையாளப் பட்ட கிரந்தங்களில் ப்ரக்ஷேப உத்க்ஷேபங்களைச் செய்வது சிரமம் என்பதும். அப்படிக் கையாளப்படாத கிரந்தங்களில் அவற்றைச்செய்வது எளிது என்பதும் எளிதில் விளங்கும். ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்ட பூர்வாசார்யர்கள் எத்தனையோ கருத்துவேற்றுமை கொண்டிருந்தபோதிலும், ப்ரமாணங்களைப் புதிதாகக் கற்பித்தோ, மாற்றியோ எழுதியதில்லை. ஐந்நூறு வருடங்களுக்குள்ளிருந்தவர்கள்

*சிலருக்கு ஏராளமான உபநிஷத்துக்களையே கற்பிக்கும் துணிவு ஏற்பட்டுவிட்டபடியால் அவர்களுடைய நூல் களுக்கு ப்ராமாண்யம் குறைவுதான். அதிலும் ஆயிரம் வருடங்களுக்கு முற்பட்ட ஆதிசங்கரரைப்பற்றி ஒரு நிர்ண யம் செய்யும்போது, அவருடையதென அனைவரும் இசைய வேண்டிய ப்ரஸ்தாநத்ரய ஸஹஸ்ரநாம பாஷ்யங்களைக் கொண்டும், அவருக்கு சமீபகாலத்திலிருந்த அவருடைய சிஷ்ய ப்ரசிஷ்யர்களுடைய நூலகளைக் கொண்டும் நிர்ண யிக்கவேண்டுமேயொழிய அவருக்கு நெடுங்காலத்திற்குப் பிற்பட்ட நூல்களைக் கொண்டும், அவர் காலத்திற்குப் பல நூற்றுண்டுகள் வரையில் எவராலும் கையாளப்படாத நூல்களைக்கொண்டும் நிர்ணயிப்பது முறையன்று என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.*

14. ஆராய்ச்சி என்பதன் சரியான பொருள் என்ன ?

*எந்த விஷயத்தைப் பற்றியும் சரியான ப்ரமாண யுக்திகளைக்கொண்டு நடுநிலை நின்று விசாரம் செய்து முடிவு கட்டுவதே நலல ஆராய்ச்சியாகும்.*

15. ஒரே விஷயத்தில் முரண்பட்ட கொள்கைகள் உள்ள ஆராய்ச்சியாளர்கள் இருக்கமுடியுமா ? அவ்வாறிருந்தால், யாருடைய ஆராய்ச்சியைச் சரியெனக் கொள்வது ?

*சரியான ப்ரமாண யுக்திகளைக்கொண்டு நடுநிலைநின்று விசாரம் செய்யாதபோது தவறான ஆராய்சிகள் ஏற்படு கின்றன. நல்ல ப்ரமாண யுக்திகளைக்காட்டி நடுநிலை நின்று விசாரம் செய்து எவர் முடிவுகட்டுகிறாரோ, அவருடைய ஆராய்ச்சியையே சரியெனக்கொள்ளவேண்டும்.*

16. இவரிவர் இன்னின்னவருடைய அவதாரம் என்பதை அறிய எது எதைப் ப்ரமாணமாகக் கொள்ளவேண்டும் ?

*அவருக்கு சமீபகாலத்தில் உள்ளவர்கள் 'இவர் இன்னா ருடைய அவதாரம்' என்று எழுதியிருந்து, அந்நூல் நெடுங் காலமாகக் கையாளப்பட்டிருந்தால் அதை ப்ரமாணமாகக்*

கொள்ளலாம். புராணங்களில் இவர் இன்னாருடைய அவதாரம் என்பதைச் சிலவிடங்களில கூறியிருக்கிறது. உதாஹரணமாக முன் எடுத்த பாத்ம புராண ஶ்லோகங் களில் ஆதிஶ$_3$ங்கரர் சிவனுடைய அவதாரம் என்று உணர்த்தியிருக்கிறது.

17. ஒருவரைப் பிரமாணமாக ஏற்றுக்கொண்டால் அவர் சொல்லுவது எல்லாமே ஏற்றுக்கொள்ளத் தக்கதா? அல்லது சிலவை தானா?

கேள்வியில் ‘ஒருவரைப் பிரமாணமாக’ என்பதற்கு பதிலாக “ஒருவரை ஆப்தராக” என்று இருந்தால் நன்றாயிருக்கும்; ஆப்தன் சொல்லுவதை ப்ரமாணமென்னலாமே யொழிய, ஆப்தனையே ப்ரமாணமென்பது முக்$_2$யப்ரயோக$_3$ மாகாது; ப்ரமிதிகர்த்தாவை ப்ரமாதா என்றும், ப்ரமிதி கரணத்தை ப்ரமாணம் என்றும், ப்ரமாண வாக்யத்தைச் சொல்லுபவனை ஆப்தன் என்றும் வ்யவஹரிப்பதே க்$_3$ராந்தி$_2$கஶைலீ. சிறு விஷயமான இது நிற்க; உலகிலுள்ள சேதனர் அனைவர்க்கும் ப்$_4$ரமம், ப்ரமாத$_3$ம், விப்ரலிப்ஸை முதலான தோ$_3$ஷங்கள் உள்ளன. ப்$_4$ரமப்ரமாத$_3$ங்களற்ற ஸர்வேஶ்வரனான நாராயணனுக்கும் அஸுரர்களை மயக்கு வதற்காக விப்ரலிப்ஸை ஏற்பட்டு, அவன் பு$_3$த்$_3$தா$_4$வதார மெடுத்துக் கள்ள நூலான பௌத்$_3$தா$_4$க$_3$மத்தைச் செய் தான் என்று ப்ரமாணங்கள் பேசுகின்றன. பிரமனும் ரஜஸ்தமோகுணங்களுக்கு வசப்பட்டவனே என்றும், அக்குணங்கள் ப்ரதா$_4$னமாயிருந்தபோது ராஜஸ தாமஸ புராணங்களாகிற பொய்நூல்களை இயற்றினான் என்றும், சிவப்பிரானும் ஆஸுரமோஹநார்த்த$_2$மாக ஶைவாக$_3$மம் முதலான கள்ள நூல்களை இயற்றினார் என்றும் ப்ரமாணங்கள் பேசுவதைக் காட்டினோம். தே$_3$வகு$_3$ருவான ப்$_3$ருஹஸ்பதியும் சார்வாக மதத்தை இயற்றினார் என்பது ப்ரஸித்$_3$த$_4$ம். ஆகையால் ஆப்தர் என்பதனால் மாத்திரம் ஒருவர் சொல்லுவது அனைத்தையும் ப்ரமாணமாக ஏற்றுக் கொள்ள இயலாது. இதுபோலவே அநாப்தர் என்பதனால் மாத்திரம் ஒருவர் சொல்லுவது அனைத்தையும் அப்ராண

மென்று கழிக்கவும் முடியாது. எதிரி வெட்டிய குளத்திலும், சேற்றைத் தள்ளி நீரைக்கொள்வதுபோலே, அநாப்தர்கள் இயற்றிய பூர்வமீமாம்ஸா ஸூத்ரங்களிலும், நியாய ஶாஸ்திரங்களிலும், அவர்களுடைய மதத்தைத் தள்ளி நியாயங்களை மாத்திரம் வேதாந்திகள் அனைவரும் கைக்கொள்ளுகிறார்கள். ஆகையால், சொல்லப்படும் விஷயத்தின் ப்ராமாண்யத்தை ஆராய்ந்து அதைக் கைக்கொள்ள வேண்டுமே தவிர, சொல்லுகிறவர்களை மாத்திரம் பார்த்து எதையும் கைக்கொள்ளமுடியாது. **விவாதங்களில் இவ் விதி மிகவும் முக்கியமானது.**

18. ஸகுணம் நிர்குணம் என்று பரம்பொருளில் இருவகை உண்டா ?

இது ஷண்மதஸ்தாபந சர்ச்சைக்கு அவசியமில்லாத கேள்வி. இக்கேள்வியில் விவாதத்தை வளர்த்தினல் அத்வைத விசிஷ்டாத்வைத சர்ச்சையில் முடியும். இக் கேள்வியைக் கேட்டிருப்பதால், நாம் நமது நூலுக்கு 'அத்வைத விசிஷ்டாத்வைத சர்ச்சை' என்றே தலைப்புக் கொடுக்க நினைத்தோம்; ப்ரஹ்மஸ்ரீ வேங்கடேச சர்மா அவர்கள் இப்படித் தலைப்பு வேண்டாம் என எழுதியதால் தலைப்பை 'ஷண்மத ஸ்தாபந சர்ச்சை' என மாற்றினேம். ஆயினும், கேட்ட கேள்விக்கு பதிலுரைப்பது நமது கடமையாகையாலே பதிலும் உரைக்கிறேம்.

ஸகுணம் நிர்க்குணம் என்று இருவகையான ப்ரஹ்மத்தை அத்வைதிகளே ஒப்புக்கொள்ளுகிறார்கள். விசிஷ்டாத்வைதிகள் ஒப்புக்கொள்ளுவதில்லை; வேதங்களில் ஸகுணமென்றும் நிர்குணமென்றும் இரண்டுபடியாக ப்ரஹ்மத்தைப் பேசியதால் அத்வைதிகள் நிர்க்குண ப்ரஹ்மமே மெய்யென்றும், பொய்யான வ்யாவஹாரிக தஶையிலிருப்பது ஜகத்காரணமான ஸகுணப்ரஹ்மமென்றும் கொண்டார்கள். இதை விவரித்து, இது சரியல்ல என்பதை விசிஷ்டாத்வைத மத ரீதியில காட்டுவோமினி.

"வேத₃யதீதி வேத₃:" (वेदयतीति वेदः) என்னும் வ்யுத்பத்தியாலே, "(பிறர்க்கு) அறிவை அளிப்பது" என்னும் பொருளை உடையதாகிறது வேதசப்தம். இவ்வேதத்திற்கே சந்தஸ் (छन्दः) என்னும் ஒரு பெயரும் உண்டு. "ச₂ாத₃யதீதி ச₂ந்த₃:" (छादयतीति छन्दः) என்னும் வ்யுத்பத்தியின்படி, "(பிறர்க்கு) அறிவை மறைப்பது" என்பது அதன் பொருள். "மறை" என்று வேதத்திற்குத் தமிழில் வழங்கும் பெயரும் இத்தன்மையையே காட்டுகிறது. "மறையாய நால் வேதத்துள்நின்ற மலர்ச்சுடரே!" என்று இவ்விரு பெயர்களையும் ஒரு பாசுரத்தின் ஓரடியிலே வைத்துக் காட்டினார் நம்மாழ்வார். மேலெழப் பார்க்கும்போது வேததினுடைய இவ்விரண்டு பெயர்களிடையேயும் விரோதமிருப்பதாகத் தோன்றுகிறது. உண்மையில் விரோதம கிடையாது. எப்படியெனில்: புண்ணியம் புரிந்த நல்லவர்களுககு வேதம் தன்னுடைய உண்மைப் பொருளைக் காட்டுவதன்மூலம் அறிவை அளிக்கிறது. பாவம் புரிந்த தீயவர்களுக்குத் தன்னுடைய உண்மைப்பொருளை ஒளிப்பதன்மூலம் அறிவை மறைக்கிறது. ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள்போலே வேதத்திற்கு இவ்விரு தன்மைகளும் உள்ளன. இதனாலேயே அநாதிகாலமாக வேதத்துக்குத் தாத்பர்யநிர்ணயம் செய்வது மிகுந்த சிரமமான காரியமாயிருந்துவருகிறது.

உபனிஷத் முதலான சாஸ்திரங்களிலுள்ள வாக்யங்களில் மேலெழப் பார்க்கும்போது, சில வாக்கியங்கள் ஒன்றை விதிப்பதுபோலவும், மற்றும் சில வாக்கியங்ள்க அதையே தள்ளுவதுபோலவும் தோற்றுகின்றன. இதற்குப் பல உதாஹரணங்கள் உண்டு. (1) "யஸ்ஸர்வஜ்ஞ ஸர்வவித" முதலான வேதவாக்கியங்கள் ப்ரஹ்மத்திறகுப பல குணங்கள் உண்டென்று ஓதுகின்றன; "நிர்க்குணம்" என்னும் வாக்கியம் ப்ரஹ்மத்திற்கு குணமில்லை எனறு நிஷேதி₄க்கிறது. (2) "விகர்த்தா நாராயண:" "தத₃ாத்மாநம் ஸ்வயமகுருத" முதலான வாக்கியங்கள் ப்ரஹ்மத்திற்கு விகாரம் உண்டென்று ஓதுகின்றன; "அவிக்ரியம்" "அவிகாராய" முதலான வாக்கியங்கள் ப்ரஹ்மத்திற்கு

விகாரத்தை நிஷேதிக்கின்றன. (3) "ஆதித்ய வர்ணம்" "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" முதலான வாக்கியங்கள் தன் இச்சையால் எடுத்துக்கொள்ளப்பட்ட அப்ராக்ருத திவ்யமங்கள ஶரீரம் ப்ரஹ்மத்திற்கு உண்டென உரைக்கின்றன; "யஸ்ய ப்ருதிவி ஶரீரம்" "ஜகத் ஸர்வம் ஶரீரம் தே" "தாநி ஸர்வாணி தத்வபு:" "தத் ஸர்வம் வை ஹரேஸ் தநு:" முதலான வாக்கியங்கள் உலகனைத்துமே பரம்பொருளுக்கு சரீரம் என்று உத்கோஷிக்கின்றன; "அஶரீரம் ஶரீரேஷு" "நிஷ்கலம" "ந தஸ்ய கார்யம் கரணம் ச வித்யதே" முதலான வேதவாக்கியங்கள் ப்ரஹ்மத்திற்கு சரீரமில்லை என்று முழங்குகின்றன. (4) "ப்ருதககாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச" "த்வா ஸுபர்ணு ஸயுஜா" "போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா" முதலான வேதவாக்கியங்கள் சேதனம், அசேதனம், இவற்றை நியமிக்கும் ஈஶ்வரன் ஆகிய மூன்று தத்துவங்களும் வெவ்வேறு என்று கூறுகின்றன; ஆகையாலே இவை பேதஶ்ருதிகள் எனப்படுகின்றன. "நேஹ நாநாஸ்தி கிஞ்சந" "ஸர்வம் கலவிதம் ப்ரஹ்ம" முதலான வேத வாக்கியங்களோவெனில், ப்ரஹ்மத்திற்கும் மற்ற பொருள்களுக்கும் பேதமே கிடையாது என்று விதித்து, எல்லாப் பொருள்களும் ப்ரஹ்மமே என்று முழங்குகின்றன. அதனாலேயே இவை அபேதஶ்ருதிகள் எனப்படுகின்றன. (5) "விஷ்ணோ: கர்மாணி பஶ்யத" "கர்த்தா நாராயண:" "ஏக: ஶாஸ்தா" முதலான ஶ்ருதிவாக்யங்கள் பரம்பொருளுக்கு உலகைப் படைத்தளித்து அழித்தலின் பொருட்டு எண்ணிறந்த கிரியைகள் உண்டு என்று உத்கோஷிக்கின்றன; "நிஷ்க்ரியம்" முதலான சில ஶ்ருதி வாக்யங்களோவெனில் ப்ரஹ்மத்திற்குக் கிரியை கிடையாது எனக் கூறுகின்றன. (6) "நீலதோயத—மத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா" "ஶ்யாமா ஏக ரூபா பவந்தி—ஏவமிவ ஹி ப்ரஜாபதி:" முதலான வாக்கியங்கள் பரம்பொருளுக்கு நீலமேகஶ்யாமள வர்ணத்தை விதிக்கின்றன; "அகோத்ரமவர்ணம்" முதலான சில வாக்கியங்கள் பரம்பொருளுக்கு நிறம் கிடையாது என்று சொல்லுகின்றன.

(7) "அஜாயமானோ ப₃ஹுதா₄ விஜாயதே" என்னும் புருஷஸூக்த வாக்யம் ப்ரஹ்மத்திற்குப் பிறப்புகள் பல உண்டென்றும், பிறப்பில்லையென்றும் ஒரே மூச்சில் கோஷிக்கின்றது. குணம், விகாரம், சரீரம், பேதம், கிரியை, நிறம், பிறப்பு என்னும் இவ்வேழு விஷயங்களைப் போலே மற்றும் பல விஷயங்களை ப்ரஹ்மத்திற்கு உண்டென்று கூறும் வாக்கியங்கள் (விதி வாக்யங்கள்) ஒரு புறமும், இல்லையென்று கூறும் வாக்கியங்கள் (நிஷேத₄ வாக்கியங்கள்) ஒருபுறமும் எல்லா சாஸ்திரங்களிலும் விளங்காநிற்கின்றன. இவற்றினிடையே வெளிப்படையாகக் காணப்படும் விரோதத்தை எப்படிப் போக்கடிப்பது என்னும் கேள்வி எழுகின்றது.

அத்வைதிகள் அபச்சே₂த₃ந்யாயம் என்னும் பூர்வமீமாம்ஸாந்யாயத்தைக்கொண்டு "நிஷேத₄வாக்கியங்கள் குணம் முதலானவற்றை விதுக்கும் விதி₄வாக்கியங்களைத் தள்ளி விடுகின்றன; ப்ரஹ்மத்திடம் பொய்த்தோற்றமாகக் காணப்படும் குணம் முதலானவை விதி₄வாக்கியங்களாலே அநுவதிக்கப்பட்டு, உண்மையில் அவை ப்ரஹ்மத்திடம் இல்லை என்று நிஷேத₄வாக்கியங்களாலே காட்டப்படுகிறது" என்று கூறுகிறார்கள்.

இக்கூற்றைப் புரிந்து கொள்வதற்கு அபச்சே₂த₃ ந்யாயத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமாகையாலே அதை விவரிக்கிறோம். ஒரு யாகத்தில் ப்ரஸ்தோதா உத்₃கா₃தா முதலான ஐந்து ரித்விக்குகள் ஒருவர்பின் ஒருவராகப் பிடித்துக்கொண்டு நடக்கும்போது உத்காதா பிடிப்பை விட்டாராகில்தக்ஷிணையில்லாமலே அந்த யாகத்தை முடித்து, மறுபடியும் முன் கொடுக்கவிரும்பிய தக்ஷிணையைக்கொடுத்து அந்த யாகத்தைச் செய்யவேண்டியது என்றும், ப்ரதிஹர்த்தாவானவர் பிடிப்பை விட்டால், தன் சொத்து முழுவதையும் தக்ஷிணையாகக் கொடுத்து அந்த யாகத்தை முடிக்கவேண்டியது என்றும் இரண்டு வேதவாக்கியங்களில் கூறப்பட்டது. உத்காதாவும், ப்ரதிஹர்த்தாவும் ஒரே

காலத்தில் பிடிப்பை விட்டுவிட்டால் இரண்டு பிராயச்சித்தங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையாகையாலும், ஸமமான பலத்தை உடையவையாகையாலும், இரண்டிலும் ஏதாவதொன்றை அநுஷ்டிக்கலாம் என்பது ஒரு கருத்து; ரித்விக்குகள் ஐவரில் உத்காதா முக்கியமானவனுகையாலே அவனுக்குரிய பிராயச்சித்தத்தை அநுஷ்டிக்கலாம் என்று ஒரு கருத்து. இந்த அபச்சேத₃ம் (பிடிப்பு விடுதல்) இரண்டும் ஒன்று முன்னுகவும், மற்றொன்று பின்னுகவும் நேர்ந்து விட்டால் ஒன்றுக்கொன்று முரணுன இவற்றின் பிராயச்சித்தங்களை ஒன்றுக்குப்பின் ஒன்றுகத்தான் எப்படி அநுஷ்ட்டிப்பது என்னும் ஐயம் எழும். இவ்விடத்தில் வலிமை குறைந்தான முன் வாக்கியம் வலிமை மிக்கதான பின் வாக்கியத்தால் தள்ளப்படும் என்று பூர்வமீமாம்ஸையில் அபச்சேதாதிகரணத்தில் நிச்சயித்திருக்கிறுர்கள். எப்படியெனில்: "(முரண்பட்ட இரண்டுக்குள்) முன்னதைத் தள்ளாமல் பின்னது உண்டாகாது" என்னும் நியாயத்தின் படி. முதலில் தடையொன்றுமில்லாமையாலே தோன்றி விட்ட முதல் வாக்கியம் தனக்கு முரண்பட்ட முன் வாக்கியத்தைத் தள்ளாமல் தோன்றமுடியாத பின வாக்கியத்திலை. அப்பின் வாக்கியம் தோன்றும்போதே தள்ளப் பட்டுவிட்டபடியால் முன் வாக்கியம் வலிமை குறைந்ததாகிறது; பின் வாக்கியம் வலிமை மிக்கதாகிறது. இப்படிப் பட்ட இடத்தில் பின் வாக்கியம் முன் வாக்கியத்தைத் தள்ளும்—என்பது அபச்சேத₃ந்யாயமாகும்.

இந்த நியாயத்தைக்கொண்டு நிஷேத₄வாக்கியங்கள் முற்கூறிய விதிவாக்கியங்களைத் தள்ளும் என்று வாதம் செய்கிறுர்கள் அத்வைதிகள். உதாஹரணமாக ஸகு₃ண நிர்க்கு₃ண வாக்கியங்களை எடுத்துக்கொண்டால், முதலில் ஸகுண வாக்கியமானது தடையில்லாமல் ப்ரஹ்மம் குண முள்ளது என்று காட்டிவிடுகிறது; குணத்தைப்பற்றிய அறிவுக்குப் பின்பே தோன்றக் கூடிய குணநிஷேத₄ வாக்கியம், பின்னுல் தான் தோன்றும்போதே ஸகுண வாக்கியத்தைத் தள்ளாமல் பொருள்பட முடியாதாகை

யாலே, ஸகுணவாக்கியத்தைத் தள்ளியே தீரும். ஆகை யால, வலிமை குறைந்த ஸகுண வாக்கியம் தள்ளப்படு கிறது; வலிமைமிக்க நிர்க்குணவாக்கியம் அதைத் தள்ளு கிறது. இவ்வண்ணமாக 'ப்ரஹ்மம் குணமுள்ளது' என்பது பொய்; 'ப்ரஹ்மம் குணமற்றது' என்பதே மெய் என்று தேறுகிறது—என்பது அத்வைதிகளின் வாதம்.

இந்த வாதம் பொருந்தாது என்று விசிஷ்டாத்வைதா சார்யர்கள் பின்வருமாறு நிரூபிக்கிறார்கள்: அபச்சேதந்யாய ஸ்தலத்தில் எந்த வாக்கியமும் முன்னே பின்னே இருக்கலா மாகையாலே, இந்த வாக்கியந்தான் இந்த வாக்கியத்தைத் தள்ளும் என்னும் நியமமில்லை; உத்காதா ப்ரதிஹர்த்தா ஆகிய இருவருக்கும் ஒரே யாகத்தில் அபச்சேதம் ஏற்பட வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை; அப்படி இருவருக்கும் ஏற்பட் டாலும், ஒருவர்பின் ஒருவராக அபச்சேதம் ஏற்படவேண் டும் என்னும் கட்டாயமும்இல்லை; (இருவருக்கும் ஒரே சமயத் திலும் ஏற்படலாமன்றோ.) ஒரே யாகத்தில் ஒருவருக்குப்பின ஒருவராகத்தான் ஏற்படவேண்டும் என்னும் நிர்ப்பந்தம் இருந்தால்தான், பிராயச்சித்தத்தை விதிக்கும் இரண்டு வாக்கியங்களுக்கும் நியமேந விரோதம் ஏற்படும். ஒரே யாகத்தில இருவர்க்கும் ஒருவர்பின் ஒருவராக அபச்சேதம் நேருவதாக நிர்ப்பந்தம் கொண்டாலும், உத்காதாவின் அபச்சேதம் முன்னும், ப்ரதிஹர்த்தாவின் அபச்சேதம் பின்னும்தான் ஏற்படவேண்டும் என்றோ, இதற்கு நேர் மாறாகத்தான் ஏற்படவேண்டும் என்றோ ஒரு நிர்ப்பந்தமும் கிடையாது. ஆகவிப்படி அபச்சேத ந்யாயஸ்தலத்தில் ஒரு விதமான விரோதநியமமும் இல்லாமையாலே எந்த வாக்ய மும் அடியோடு அப்ரமாணமாகாது; எந்த ஒரு யாகத்தில் இருவர்க்கும் ஒருவர்பின் ஒருவராக அபச்சேதம் நேரு கிறதோ அங்குதான பின்வாக்கியம் முன்வாக்கியத்தைத் தள்ளுகிறது. ஆகையால், அபச்சேதந்யாயமானது பிர யோகத்தை அடிப்படையாகக்கொண்ட விரோதமுள்ள இடத்திலேயே செயல்படுவதாகும். ஸகுணநிர்க்குண வாக்கி யங்கள் அப்படிப்பட்டவையல்ல. இங்கு எப்போதும்

குணங்களை விதிக்கும் ஸகுணவாக்கியம் முன்னதாகவும், குணங்களைத் தள்ளும் நிர்க்குண வாக்கியம் பின்னதாகவுமே யிருக்கிறது என்னும் நிர்ப்பந்தம் உள்ளதாகையாலே, இவற்றினிடையே விரோதம் இயற்கையாகவே உள்ளது; அபச்சேதந்யாயஸ்தலத்திற்போல் குறிப்பிட்ட பிரயோகத்தால் செயற்கையாய் ஏற்படுவதல்ல. ஆகையால், விரோத பௌர்வாபர்ய நியமமற்ற இடத்திலேயே ஸஞ்சரிக்கத்தக்க அபச்சேதந்யாயத்தை, அந்நியமமுடைய ஸகுண நிர்க்குண வாக்யஸ்தூலத்தில் ஸஞ்சாரம செய்வித்தால், ஸகு₃ண வாக்கியங்கள் அடியோடு அப்ரமாணமாகப் போய்விடுமாகையாலே, அந்த நியாயத்தைக்கொண்டு ஆயிரக்கணக்கான ஸகுணவாககியங்களைத் தள்ளுவது எவ்வகையிலும் சிறிதும் பொருத்தமற்றது—என்று நிரூபிக்கிறார்கள் விசிஷ்டாத்வைதாசார்யர்கள்.

இனி, விதிநிஷேத வாக்கியங்களிடையே தோன்றும் விரோதத்தை எப்படிப் பரிஹரிப்பது? என்னும் கேள்வி எழுகிறது. பூர்வமீமாம்ஸையில் [1-3-3] விரோதா₄தி₄ கரணந்யாயம் என்று ஒரு நியாயம் உண்டு. நிரபேக்ஷமாய், தெளிவான ஒரு சாஸ்திரத்திற்கும், ஸாபேக்ஷமாய், தெளிவற்ற மற்றொரு சாஸ்திரத்திற்கும் விரோதம் ஏற்பட்டால், முந்திய சாஸ்திரத்திற்கு அநுகுணமாகப் பிந்திய சாஸ்திரத்திற்குப் பொருள்கொள்ளவேண்டும் என்பது அந்த நியாயத்தின் ஸாரமாகும். இந்த நியாயத்தைக்கொண்டு பார்க்கும் போது, ஸகுணஶ்ருதியை ஒட்டியே நிர்க்குண ஶ்ருதிக்குப் பொருள் கொள்ளவேண்டும் என்று தேறும். குணங்களைத் தள்ளும் நிர்க்குண ஶ்ருதியானது குணங்களை விதிக்கும் ஸகுணஶ்ருதியை எதிர்பார்க்கிறது; குணங்களை விதிக்கும் ஸகுணஶ்ருதி ஸர்வஜ்ஞத்வம் முதலான குறிப்பிட்ட குணங்களை விதிக்கிறபடியாலே தெளிவாயிருக்கிறது; குணங்களைத்தள்ளும் 'நிர்க்கு₃ணம்' என்னும் வாக்கியம் பொதுப்படையாயிருக்கையாலே தெளிவற்றதாயுள்ளது. ஆக, ஸாபேக்ஷமாய், அதனாலேயே பின்பு பொருள்படுவதாய், தெளிவற்றதான நிர்க்குண ஶ்ருதியைக் காட்டிலும்,

நிரபேக்ஷமாய், அதனாலேயே முதலில் பொருள்படுவதாய், தெளிவுடையதான ஸகு₃ணஶ்ருதி வலிமை மிக்கதென்று விரோதாதிகரணந்யாயத்திலிருந்து ஸித்திக்கிறது.

பூர்வமீமாம்ஸையில் (3-3-1) உபக்ரமாதி₄கரணந்யாயம் என்று மற்றொரு ந்யாயமும் உண்டு. "முன் வாக்கியத்தை அபேக்ஷிக்கும் பின் வாக்கியம் அந்த முன் வாக்கியத்திற்கு அநுகுணமாகவே பொருள்கொள்ளத்தக்கது" என்பது இந்த நியாயத்தின் ஸாரமாகும். ஸகுணநிர்க்குண வாக்ய ஸ்தலத்திலும் நிர்க்குணவாக்யம் பொதுப்படையாயிருக்கையாலே, முதலில் அறியப்படும் ஸகுணவாக்யத்தை அபேக்ஷிக்கிறது. ஆகையால் அதையொட்டியே பொருள் கொள்ளத்தக்கதாகிறது. ஆக, விரோதாதிகரணந்யாயம், உபக்ரமாதிகரணந்யாயம் என்னும் இரு நியாயங்களைக் கொண்டு பார்க்கும்போது அபச்சே₂த₃ந்யாயஸ்தலத்திற் போலே பிரயோகத்தை அடிப்படையாகக் கொள்ளாதவையாய், அதனாலேயே விரோதநியமம் உள்ளவிடங்களில் முன் வாக்கியத்திற்கு அநுகுணமாகவே பின்வாக்கியத்திற்குப் பொருள்கொள்ளவேண்டும் எனத்தேறுகிறது. அத்தகைய ஸகுணநிர்க்குணவாக்யஸ்தலததில் எப்படிப் பொருள் கொள்வது என்பதைச் சிந்திப்போம் இனி.

பூர்வமீமாம்ஸையில் உத்ஸர்க்காபவாதந்யாயம் என்னும் நியாயம் ஒன்று உண்டு. எந்த விதிக்கும் சில விதிவிலக்குகள் உண்டு என்பதை நாம் அனைவரும் அறிவோம். இதுவே உத்ஸர்க்காபவாதந்யாயம் எனப்படுகிறது. "ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூ₄தாநி" என்பது எந்த ஜீவராசியையும் கொல்லக்கூடாது என்று நிஷேதிக்கும் வாக்யம். "அக்₃நீஷோமீயம் பஶுமாலபே₄த" என்னும் வாக்யம் யாகததில் பிராணியைக் கொல்லவேண்டும் என்று கூறுகிறது. பூர்வ மீமாம்ஸகர்கள் முதல் வாக்கியத்தில் காணப்படும் நிஷேத விதிக்கு இரண்டாம் வாக்யம் விதிவிலக்கைத் தெரிவிக்கிறது என்று நிஶ்சயம் செய்திருககிறார்கள். இதுவே உத்ஸர்க்கா₃பவாத₃ந்யாயம் எனப்படும். இந்த மீமாம்ஸா

நியாயத்தைக்கொண்டு நம் பூர்வாசார்யர்கள் நிர்க்குண வாக்யங்களால் தெரிவிக்கப்படும் குணமின்மையாகிற பொதுவிதிக்கு ஸகுணவாக்யங்களால் விதிக்கப்படும் கல்யாணகுணங்கள் விதிவிலக்குகள் ஆகும் என்று நிர்ணயித்திருக்கிறார்கள்.

மேலும், வேதசாஸ்திரங்களில் 'குணம்' என்னும் பதம், மூலப்ரக்ருதியின் குணங்களான ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களாகிற குணவிசேஷங்களையே பலவிடங்களில் குறிப்பதைக் காண்கிறோம்; ஆகையால், நிர்க்குணவாக்கியங்கள் ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வாதிகள் பரம்பொருளிடமில்லையென்று கூறுகின்றனவென்றும் ஸகுணவாக்யங்கள் அப்ராக்ருதமான கல்யாணகுணங்கள் அவனிடமிருக்கின்றனவெனக் கூறுவதாகவும் கொண்டால் இவ்வாக்யங்களிடையே மேலெழுந்தோன்றும் விரோதமும் இல்லை என்று நம் பூர்வாசார்யர்கள் நிரூபிக்கிறார்கள்.

ச₂ாக₃பஶுந்யாயம், அல்லது ஸாமாந்ய விசேஷந்யாயம் என்று அழைக்கப்படும் மற்றொரு பூர்வமீமாம்ஸாந்யாயமும் உண்டு. ஒரு வேதவாக்கியம் யாகத்தில் பசுவை உபயோகிக்கவேண்டும் என்று கூறுகிறது. 'பசு' என்னும் சப்தம் எந்த நாலுகால் பிராணியையும் குறிக்கும். இவ்வாக்கியத்திலிருந்து இங்கு குறிக்கப்படும் 'பசு' நாலுகால் பிராணிகளில் எதுவென்று விளங்கவில்லை. மற்றொரு வேதவாக்கியம் அந்த யாகத்தில் 'ச₂ாக₃ம்' எனப்படும் வெள்ளாட்டை உபயோகிக்கவேண்டும் என்று விதிக்கிறது. முதல் வாக்கியத்தில் காணப்படும் 'பசு' என்னும் ஸாமாந்ய பதம் இரண்டாவது வாக்யத்தில் காணப்படும் 'ச₂ாக₃ம்' என்னும் விசேஷ பதத்தின் பொருளையே உடையது என்று பூர்வமீமாம்ஸகர்கள் நிர்ணயித்திருக்கிறார்கள். இதுவே சாகபஶுந்யாயம், அல்லது ஸாமாந்யவிசேஷந்யாயம் எனப்படுகிறது. நமது பூர்வாசார்யர்கள் இந்த நியாயத்தை உபயோகப்படுத்தி, நிர்க்குணவாக்யங்களில் உள்ள 'குணம்' என்னும் ஸாமாந்ய ஶப்தம், "அபஹதபாப்மா விஜரோ

விம்ருத்யுர் விஶோகோ விஜிக₄த்ஸ: அபிபாஸ:'' என்னும் வாக்கியத்தில் பரம் பொருளிடம் இல்லாதவையாக கோஷிக்கப்படும் குண விஶேஷங்களான தாழ்ந்த குணங்களையே குறிக்கிறது என்று நிச்சயித்திருக்கிறார்கள். தாழ்ந்த குணங்களைத் தள்ளும் இவ்வாக்கியம், அதே மூச்சிலேயே ''ஸத்யகாமஸ் ஸத்ய ஸங்கல்ப:'' என்று பரம் பொருளானது கல்யாணகுணங்கள் எல்லாவற்றுக்கும் கொள்கலமாயிருப்பது என்று கோஷித்திருப்பதும் குறிக் கொள்ளத்தக்கது.

மேலும், குணங்கள் தள்ளத்தக்கவையாகில், அவை ஒரு ஹேதுவால் செயற்கையாய் உண்டானவையாயிருக்க வேண்டும்; அத்தகைய ஹேதுவொன்று ஶ்ருதிகளில் சொல்லப்படவில்லை; ஹேது சொல்லப்படாததோடன்றியில், ''நாஸ்யோ ஹேதுர் வித்₃யத ஈஶநாய'' என்னும் ஶ்ருதிவாக்யத்தில் ப்ரஹ்மத்தின ஈஶனம் (நியமனம்) முதலான குணங்களுக்கு ஹேது இல்லை என்றும் கூறப்பட்டுள்ளது; இதிலிருந்தே குணங்கள் இயலவானவை என்று அர்த்த₂ாத் ஸித்திகும். இப்படி ஆர்த்த₂மாக ஸித்திப்பதுமட்டுமலல; ''பராஸ்ய ஶக்திர் விவிதை₄வ ஶ்ரூயதே ஸ்வாப₄ாவிகீ ஜ்ஞாநப₃லக்ரியா ச'' என்னும் ஶ்ருதி பரம்பொருளின் சக்தி, ஜ்ஞானம், ப₃லம், கிரியை முதலிய கல்யாணகு₃ணங்கள் ஸ்வாப₄ாவிகமானவை (இயல்வானவை) என்று ஶாப்த₃மாகவே கூறுகின்றது. இத்தகைய இயல்வான கல்யாண குணங்களைப் பரமபொருளுக்குள்ளதாகத் தானே விதிதது விட்டுத் தானே அவற்றை ஶ்ருதி தள்ளுமா எனபதைச் சிறிது சிந்திக்கவேண்டும். குணங்களைத் தள்ளும் வாக்கியங்கள் 'நிர்க்கு₃ணம்' என்றாற்போலே பொதுப்படையாக அவற்றைத் தள்ளுகின்றவையாகவோ, 'அபஹத பாப்மா' என்று தொடங்கும் ஶ்ருதியிற்போலே தாழ்ந்த குணங்களையே தள்ளுகின்றவையாகவோ உள்ளன என்பதையும் கல்யாண குணங்களை ஓரிடத்திலும் ஶ்ருதி குறிப்பிட்டு எடுத்துத் தள்ளவில்லையென்பதையும், தாழ்ந்த குணங்களை ஓரிடத்திலும் குறிப்பிட்டு எடுத்து விதிக்கவில்லை என்பதை

யும். நோக்கும்போது, ஶ்ருதி கல்யாண குணங்களையும் தள்ளுவதாகக் கூறுவதில் ஔசித்யம் சிறிதுமில்லை என விளங்குகிறது.

இதுபோலவே, பரம்பொருளுக்கு விகாரம், சரீரம், கிரியை, பிறப்பு, நிறம் முதலானவற்றைக் கூறும் வாக்கியங்கள் (புண்யபாப) கர்மம் காரணமாக ஏற்படாதவையாய், தன் இச்சையாலேயே பரம்பொருளால் விரும்பி ஏற்றுக்கொள்ளப்பட்டவையான விகாரம் முதலானவை பரம்பொருக்கு உண்டென விதிக்கின்றன என்றும், விகாரம் முதலானவை இல்லையென நிஷேதிக்கும் வாக்கியங்கள் ஜீவனுக்குப்போலே கர்மம் காரணமாக ஏற்பட்ட விகாரம் முதலானவை பரம்பொருளுக்கு இல்லை என்று தள்ளுகின்றன என்றும் முற்கூறிய நியாயங்களைக்கொண்டு நிர்ணயிப்பதே பொருத்தமுடையதென விளங்கும்.

பேதஶ்ருதிகளுக்கும், அபேதஶ்ருதிகளுக்கும் மேலெழத் தோன்றும் விரோதத்தை, எல்லாவுலகையும் பரம்பொருளுக்கு ஶரீரமாக முழங்கும் க$_4$டகஶ்ருதிகள் பரிஹாரிகையாலே அபேதஶ்ருதிகளைக்கொண்டு பேதஶ்ருதிகளைத் தள்ள வேண்டியதில்லையென்றும், க$_4$டகஶ்ருதிகளால காட்டப்படும் ஶரீராத்ம ப$_4$ாவத்தைக் கருத்திற்கொண்டே அபே$_4$த$_3$ ஶ்ருதிகள் சித$_3$சித்$_3$விஶிஷ்ட ப்ரஹ்மத்தை ஒன்றாகக் கூறுகின்றனவென்றும், பே$_4$த$_3$ஶ்ருதிகள் சித$_3$சிதீ$_3$ஶ்வரர்களிடையே ஸ்வரூபபே$_4$த$_3$த்தைக் கூறுகின்றனவென்றும் விளங்கும். "**ஸர்வம் தம் பராத$_3$ாத்$_3$ யோ ந்யத்ராத்மந: ஸர்வம வேத$_3$**' என்ற வேதவாக்யத்தையும், "**ந தத$_3$ஸ்தி விநா யத் ஸ்யாநமயா பூ$_4$தம் சராசரம்**" என்னும் கீதாவாக்யத்தையும், முற்கூறிய நியாயங்களையும் கொண்டு பார்க்கும்போது, "**நேஹ நாநா அஸ்தி**" என்று பரம்பொருளுக்கு பேதத்தை நிஷேதிக்கும் வாக்கியம், ப்ரஹ்மத்தை விட்டுப் பிரிந்த ஸ்வதந்திரமான உலகத்தையே பொய்யென்று கூறுகின்றதென்றும், மற்ற வாக்கியங்கள் ப்ரஹ்மபரதந்திரமான உலகம் ப்ரஹ்மத்தைப்போலவே மெய்யெனக் கூறுகின்றன எனறும் தெளிவாக விளங்கும்.

ஆக, இவ்வண்ணமாக விதி₄வாக்யங்களும், நிஷேத₄ வாக்கியங்களும், வெவ்வேறு விஷயங்களைப் பற்றியவையாய், விரோதத்தின் வாஸனையுமற்றவையாகையாலே நிஷேத₄ வாக்கியங்கள் விதிவாகயங்களைத தள்ளுகின்றன என்னும் வாதம் பொருத்தமற்றது என நிரூபிககப்பட்டது. இதையே,

"யத்₃ப்₃ரஹ்மணோ கு₃ணவிகார ஶரீரபே₄த₃
காமாதி₃கே₃ாசர விதி₄ப்ரதிஷேத₄வாச: |
அநயோந்யபி₄ந்ந விஷயா ந விரோத₄க₃ந்த₄
மர்ஹந்தி தந்ந வித₄ய: ப்ரதிஷேத₄ பா₃த்₄யா: ||"

[ப்ரஹ்மத்திற்கு குணம், விகாரம், சரீரம், பேதம், கர்மம் முதலானவற்றை விதிக்கும் வாக்யங்களும், அவற்றைத் தள்ளும் வாக்கியங்களும் வெவ்வேறு விஷயங்களைப் பற்றியவையாய், விரோதத்தின் நாற்றமும அற்றவையாகை யாலே குணம் முதலியவற்றை விதிக்குமவாகயங்கள், அவற்றை நிஷேதிக்கும் வாக்கியங்களால் தள்ளப்படு கின்றவையலல.] என்று நடாதூரம்மாள் என்னும் மஹா சார்யர் தமது தத்வ ஸாரத்தில் நிரூபித்தருளினர். மற்றும் பல பூர்வோத்தரமீமாம்ஸா நியாயங்களைக்கொண்டு விசிஷ டாத்வைத ஸித்தாந்தமே ஶ்ருதிஸ்ம்ருதியுக்திகளுக்குப் பொருந்தியது என்று ஸ்ரீபாஷ்யம் ஶ்ருதப்ரகாசிகை முத லானவற்றில் நிரூபிக்கப்பட்டிருப்பதை அந்த கிரந்தங்களிலே காணலாம். நாம் சாஸ்திரிகளுக்கு அனுப்பியிருக்கும் (நமது தமிழ் விவரணத்தோடு கூடிய) விஶிஷ்டாத்வைதவிஜய ப்ரத₂மப₄ாக₃ம் இரண்டாம் பரிச்சேத₃த்திலும் (பக்கம்141-210) ஸகு₃ணநிர்க்கு₃ண விசாரத்தை விரிவாகக் காணலாம்.

19. வைதிகர்கள் என்று யாரைக் கூறவேண்டும்?

வேதத்தைப் பரம ப்ரமாணமாக ஒப்புக்கொள்ளுகிற வர்கள் அனைவரையுமே வைதிகர்கள் எனக் கூறலாம. அவ்வேதத்தில் கூறப்படும் பரமதத்வ ஹித புருஷார்த்தங் களைச் சரியானபடி உணர்ந்து, பரமபுருஷார்த்தத்தைப் பெறுவதற்குப் பரமஹிதத்தைப் பற்றிநிற்பவர்களே வைதிகோத்தமர்கள் ஆவார்கள்.

20. வேதங்களுக்கும் மற்றைய க்ரந்தங்களுக்கும் அபிப்ராய வேறுபாடு காணுமிடங்களில் எவற்றைக் கொள்வது? எவற்றை விடுவது ?

*ஸ்வத: ப்ரமாணமான வேதத்திற்கும் வேதத்தை ஒட்டி யிருந்தால் மாத்திரமே ப்ரமாணமாகிற மற்ற நூல்களுக்கும் முரண்பாடு ஏற்பட்டால் வேதத்தையே கொள்ளவேண்டும்; மற்ற நூல்களை விடவேண்டியதுதான். ஐந்தாவது கேள்விக்கு நாம் எழுதியிருக்கும் பதிலின் கடைசியில் [பக்கம் 15] இதற்கு ப்ரமாணங்களைக் காட்டியிருக்கிறோம்.*

21. ஆழ்வார்கள் வாக்குகள் தான் ப்ரமாணங்களா? நாயன் மார்கள் வாக்குகளும் ப்ரமாணங்களா ?

*வேதத்திற்கு ஒரு சிறிதும் முரண்படாமலிருக்கையால் ஆழ்வார்களுடைய வாக்குகள் அனைத்தும் பரமப்ரமாண மாகின்றன. ஜீவனை சிவனுக்குப் பரத்துவம் கூறுவது. பரம்பொருளான நாராயணனை இழித்துரைப்பது முதலான அம்சங்களில் நாயனமார்களின் வாக்குகள் வேதத்தோடும், அதற்கு உபப்ரும்ஹணமான ஸாத்விக சாஸ்திரங்களோடும் முரண்படுவதால் அவ்வம்சங்களில் அவை அப்ரமாணமே யாகும்.*

x 22. வேதங்களின் வாச்யார்த்தத்தை மட்டும் எடுத்துக் கொள்ளவேண்டுமா? லக்ஷ்யார்த்தத்தை மட்டும் எடுத்துக்கொள்ள வேண்டுமா ? இரண்டையுமே எடுத்துக்கொள்ள வேண்டுமா ?

*வேதங்களின் வாச்யார்த்தத்தைக் கொள்வதில் முரண் பாடு இல்லாவிடில் அதையே கொள்ளவேண்டும்; முரண் பாடு ஏற்பட்டால் லக்ஷ்யார்த்தத்தைக் கொள்ளவேண்டும்.*

---

x இந்த 22 கேள்விகளையும் எழுதியவரின் விலாசம்:-

**ப்ரஹ்மஸ்ரீ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகள்.**
*(சென்னை மயிலை விவேகாநந்தா கல்லூரி வடமொழிப் பேராசிரியர்)*
1, யோகாம்பாள் தெரு, சென்னை-17.

# முகவுரையின் முடிவுரை

இவ்வண்ணமாக சாஸ்திரிகளின் 22 கேள்விகளுக்கும் தக்க ப்ரமாண யுகதிகளைக் காட்டி நடுநிலை நின்று ஸாத்விக ரீதியில் பதிலுரைககப்பட்டது. கடந்த இருபத்திரண்டு வருடங்களாக ஸுத₃ர்ஶநத₄ாரியான எம்பெருமான் 'ஸ்ரீவைஷ்ணவ ஸுத₃ர்ஶநம்' என்னும் திருநாமமுடைய நமது பத்திரிகையின்மூலம் இதுபோலவே பற்பல ப்ரதிபக்ஷ நிரஸனங்களைச் செய்தருளியுள்ளான். ஆழியானை அவன் கையிலுள்ள ஸுத₃ர்ஶனுழ்வானுடைய காரியமாகவே நாம் இவற்றை எண்ணியிருக்கிறேமேயொழிய, நமது காரியமாக என்றும் எண்ணியதில்லை; ஆகையால, "ஷண்மதஸ்த₂ாபந சர்ச்சை" என்னும இந்நூலின் கர்த்தாவை நிர்த்தேசிக்கும் போது, நமது பெயரையிட்டுக் குறிப்பிடாமல நமது புனைபெயராகவேகொண்டு ஸுதர்ஶநர்' எனறே குறிப பிடும்படி கேட்டுக்கொள்ளுகிறோம். இனி, நமது நூல்கள் அனைத்தையும் ஆராய்ந்து, நமது ஒன்பது கேள்விகளுக்கும தக்க ப்ரமாணஙகளைக்காட்டி நடுநிலைநின்று ஸாத்விக ரீதியில் பதிலுரைக்கவேண்டும் என்று சாஸ்திரிகளைக் கேட்டுக் கொள்கிறோம். மதசம்பந்தப்பட்ட சர்ச்சைகளுக்கெல்லாம் ஓர் எடுத்துக்காட்டாக இச் சர்ச்சை அமையவேண்டுமென் பது நமது ஆசை.

இந்தச் சர்ச்சை காமகோடி ப்ரதீ₃பத்திலும் வெளி யிடப்பட்டால், அத்வைதிகளும் உண்மையை அறிந்து கொள்ள உதவியாயிருககும் என்று நாம் ஸ்ரீ வேங்கடேச சர்மா அவர்களுக்கு எழுதினோம். ப்ரதீ₃பத்தில் வெளியிடச் செய்யத் தமக்கு சக்தியில்லை என்றும், அடுத்த வருஷம் சங்கர ஜயந்தி மலரில் சர்ச்சையின் சுருக்கத்தை வெளி யிடுவதாகவும், காமகோடிப் பெரியவாளின் பார்வைக்கு வைப்பதாகவும் அவர் எழுதியிருக்கிறார். ஏதாவதொரு பத்திரிகையில வெளிவந்தால் பலர் உண்மையறிய ஏதுவாகும் என்று மறுபடியும் உணர்த்தி நிற்கிறோம்.

**முகவுரை முற்றிற்று.**

# ★ ஷண்மத ஸ்தாபந சர்ச்சை ★

## [ 'ஸுதர்சனம்' ஆசிரியர் ]

## முன்னுரையாம் முதல் அத்தியாயம்

—O—

மாமுனிகள் அறுநூறுவது ஆண்டுவிழாக்களில் கலந்து கொள்வதற்காகத் திருமலை வரையில் பல திவ்யதேசங்களுக்கு யாத்திரைசெய்து 6—11—70 அன்று திரும்பியவுடன் ஸ்ரீவேங்கடேச சர்மாவின் ஐந்துபக்க முன்னுரையோடு கூடிய வரஹூர் சாஸ்திரியின பதிலுரை வந்திருப்பதைப் பார்த்தோம். அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்விகள் என்னும் கட்டுரையின கடைசியில், "எவராவது நம் கேள்விகளுக்கு நேர்மையுடன பதிலுரைக்க முன் வந்தால், பதிலகளை நம ஸுதர்சனத்திலேயே அச்சிட்டு ஆராய ஸித்தமாயிருக்கிறோம்" என்று எழுதினோம். ஷண்மத ஸ்தாபந சர்ச்சையின் முகவுரையின முடிவுரையிலும், "நமது நூல்கள் அனைத்தையும் ஆராய்ந்து நமது ஒன்பது கேள்விகளுக்கும் தக்க ப்ரமாணங்களைக்காட்டி நடுநிலை நின்று ஸாத்விகரீதியில் பதிலுரைக்க வேண்டும்" என்று சாஸ்திரிகளைக் கேட்டுக்கொண்டிருந்தோம். கேள்விகளுக்கு பதிலுரைக்கத் தொடங்கினால் ஷண்மத ஸ்தாபந சர்ச்சையில் தாம் படுதோல்வியடைய நேரிடும் என உணர்ந்த சாஸ்திரி, அதில் முதலில கைவைக்காமல், சுமார் 50 பக்கங் கொண்ட "ஸ்ரீசங்கரரும் ஷண்மதமும்" என்னும் கட்டுரையை எழுதியுள்ளார். அதில் ஷண்மத ஸ்தாபந சர்ச்சைக்கு சம்பந்தமில்லாத பல விஷயங்களையும், ஸ்ரீ வைஷ்ணவ பூர்வாசார்யர்களை வாய்க்கு வந்தபடி நிந்திக்கும் பல பக்கங்களையும் எழுதி நிரப்பியிருக்கிறார். "சங்கரர் ஸ்தாபித்தது அத்வைதமேயொழிய, சைவ மதமுமல்ல, வைஷ்ணவமதமுமலல. அத்வைதமதத்தை ஸ்தாபித்தபோதிலும், வியாவஹாரிகதசையில ஆதிசங்கரர் விஷ்ணுவையே ஸகு₃ணப்₃ரஹ்மமாகவும், விஷ்ணு ஸாயுஜ்யத்தையே அழிவற்ற பலனாகவும் கொண்டார் என்பது அவருடைய ப்ரஸ்தானத்ரயபாஷ்யங்களிலிருந்து விளங்குகிறது" என்று "அத்வைதிகளைக் குறித்து சில கேள்விகள்"

என்னும் கட்டுரையில் (பக்கம் 11ல்) நாம் மிகத் தெளிவாக எழுதியிருந்தும், நமது மற்ற கட்டுரைகளிலும், சாஸ்திரிக்கு அனுப்பியிருக்கும் நூல்களிலும், சங்கரரின் ப்ரஸ்தாநத்ரய பாஷ்யங்களிலிருந்து இவ்விஷயத்தை மிகத்தெளிவாகவிளக்கி யிருந்தும், நாம் சங்கரரை விசிஷ்டாத்வைதியென்றும் பாஞ்சராத்ரியென்றும் கூறுவதாகக் கொண்டு, அவர் அத்வைதியே என்று நிரூபிக்கப் பல பக்கங்களையிட்டு நிரப்பி யிருக்கிறார். இப்படிப் பத்ரபூரணம் செய்து பல பக்கங்களை நிரப்பிவிட்டு, கடைசியில் ஏழு பக்கங்களில் கேள்விகளுக்கு பதில் என்று தொடங்கி ஏதோ எழுதியுள்ளார். இதுவே உண்மையில் ஷண்மத ஸ்தாபன சர்ச்சைக்கு சம்பந்தப் பட்டது. நாம் கேட்டிருந்ததும், ஸுதர்சனத்தில் அச்சிட்டு ஆராய்வதாக ஒப்புக்கொண்டிருந்ததும் நம் கேள்விகளுக்கு எழுதப்படும் பதில்களையேயொழிய இவர் மனம்போனபடி எழுதும் கட்டுரைகளையல்ல. அப்படியிருக்க, இவையனைத் தையும் ஒருவரிகூடவிடாமல் அச்சிட்டு நாம் ஸுதர்சனத்தில் பதில் எழுதவேண்டும் என்று ஆங்கீரஸ வேங்கடேச சர்மா நமக்குக் கட்டளையிடுகிறார்.

இப்படி நமக்குக் கட்டளையிடும் இவர், நமது நூல்களை இவர்கள் பத்திரிகையில் வெளியிடவேண்டிய அவசியமில்லை யாம்! இதற்கு, ஓர் விசித்திரமான காரணம் கூறுகிறார் சர்மா !!—"இந்த விவாதம் பற்றிய கட்டுரைகள் அத்வைதி கள் நடத்தும் பத்திரிகைகளில் வெளிவரவேண்டும் என்ற வைஷ்ணவ ஸுதர்சனத்தின் விருப்பம் பொருத்தமானதாக நமக்குத் தோன்றவில்லை. ஏனெனில்: ஆதிசங்கர பகவத் பாதாசார்யர்கள் ஷண்மத ஸ்தாபகர் எனகிற விஷயத்தி லும், அவர் ஸ்தாபித்துள்ள நிருபாதிக ப்ரஹ்ம தத்துவத்தி லும் அத்வைதிகளுக்கு யாதொரு விதமான ஸந்தேஹமும் கிடையாது. எனவே இந்தச் சர்ச்சையின்மூலம் அவர்கள் அறியவேண்டியது யாதொன்றுமில்லை. வைஷ்ணவ ஸுதர்சனத்துக்கும், அதன் வாசகர்களுக்கும் இவ்விஷயத் தில் ஸம்சயம் ஏற்பட்டுள்ளபடியால் அவர்களே உண்மையை அறியவேண்டியவர்களாகிறார்கள். ஆகவே வைஷ்ணவ

ஸுதர்சனத்தில் மட்டுமே இவ்விஷயம் வெளிவருவது மிகப் பொருத்தம். மற்றும் இவ்விஷயத்தை முதலில் கிளப்பியதும் வைஷ்ணவ ஸுதர்சனமே" என்பது சர்மாவின் விசித்திர வாதம். ஷண்மத ஸ்த₂ாபந விஷயமான நமது நூல்களும், கேள்விகளும், அத்₃வைதிகள் சில காலமாகச் செய்துவரும் ஷண்மத ஸ்த₂ாபந ப்ரசாரத்தின் பொய்ம்மையை நிலைநாட்ட எழுந்தவையேயொழிய,ஸந்தே₃ஹத்தை விளக்கிக்கொள்ள எழுந்தவையன்று என்பது நமது நூல்களைப் படிக்கும் சிறுவனுக்கும் விளங்கும். ஆகையால், சர்மா கூறும காரணம் அடியோடு பொருத்தமற்றது. 'நம் பத்திரிகையில் வெளிவந்தால் ஷண்மதஸ்த₂ாபன ப்ரசாரத்தின் பொய்மையை நம்மவர்களும அறிந்து விடுவார்களே!' என்னும் ப₄யத்தாலேயே சர்மாவும் மற்ற அத்₃வைதிகளும் நமது கேள்விகளைத் தம் பத்திரிகையில் வெளியிட மறுக்கிறார்கள் என்பதே உண்மைக் காரணம். இவ்விஷயத்தை நாமே முதலில் கிளப்பினோம் என்பதும் பொய்வார்த்தை. லட்சக் கணக்கான வாசகர்கள் படிக்கும் விகடன் தீபாவளி மலரில், பாலதாசன் என்னும் புனைபெயர் பூண்ட அத்வைதி, ஒன்றுமறியாத பாமரர்களுககாக ஆதிசங்கரர் வைஷ்ணவ மதத்தை ஸ்தாபித்தார் என்று எழுதியதாலேயே இவ் விவாதம் கிளம்பிற்று. பாலதாசன் வைஷ்ணவத்தை இழிவு படுத்தி எழுதியிருக்கும் பகுதிகளையெல்லாம் நம் நூலில் அச்சிட்டிருப்பதைப் பார்த்தபின்பும் சர்மா நாமே இவ் விவாதத்தைக் கிளப்பினோம் என எழுதுவது பச்சைப் பசும் பொய்யாகும். மேலும், "அத்வைதமே சரியானது, விசிஷ்டாத்வைதம் தவறானது" என்று தக்க நிரூபணங்களைக் காட்டாமல் சாஸ்திரி செய்யும் துர்வாதங்களுக்கும், மற்றும் பல அத்வைதிகள் செய்யும் துர்வாதங்களுக்கும் நாம் சுமார் இரண்டாயிரம் பக்கங்களில் "விஷ்ணுசித்த விஜயம்" "விசிஷ்டாத்வைத விஜயம்" "சாதிமத ஆராய்ச்சி" முதலான நூல்களில் அசைக்க முடியாத நிரூபணங்களைக்காட்டி விரிவான பதில்களை அச்சிட்டு அவற்றை சாஸ்திரிக்கும் அனுப்பியிருக்கிறோம். அவற்றில் கண்டிக்கப்பட்டொழிந்த வாதங்களையே சாஸ்திரி தமது

'சங்கரரும் ஷண்மதமும்' என்னும் நூலில் திருப்பித் திருப்பி எழுதுகிறார். அறிவின் சிகரத்திலிருக்கும் ஸ்ரீராமாநுஜர் முதலான பூர்வாசார்யர்களை—அவர்களுடைய ஞானத்தில் ஏகதேசத்தையும் எட்டிப்பிடிக்க முடியாத இந்த சாஸ்திரி—அறிவிலிகள் என்று தூற்றுகிறார். இவருடைய வாதங்களை பஹுமுகமாக நாம் ஏற்கனவே கண்டித்திருக்கும் முற்கூறிய நமது நூல்களை 'ஒரு வரி கூட விடாமல்' அச்சிட்டு இவர்கள் பதில் உரைத்தால் யாமும் இவர்களுடைய நூல்களை 'ஒரு வரி கூட விடாமல்' அச்சிட்டு பதிலுரைக்கத் தடையில்லை.

அது செய்யாதவரையில், நாம் ப்ரதிஜ்ஞை செய்திருந்தபடி, நம்முடைய கேள்விகளுக்கு இவர் ஏழு பக்கங்களில் எழுதியிருக்கும் பதில்களையே நாம் அச்சிட்டு ஆராயக் கடமைப்பட்டிருக்கிறோம். இந்த பதில்களை ஆராயும்போது, "சங்கரரும் ஷண்மதமும்" என்னும் கட்டுரையில் ஷண்மத ஸ்தாபந சர்ச்சைக்கு சம்பந்தமுள்ள சில விஷயங்களை எழுதியிருப்பதையும் ஆங்காங்கு எடுத்து. அவற்றின் பொருத்தமின்மையையும், அவற்றால் 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபநம் செய்தார்' என்று நிரூபிக்கபபடவில்லை யென்பதையும் காட்டிச்செல்வோம். இனி, அடுத்து வரும் ஒவ்வோரத்தியாயத்தில் நமது கேள்விகள் ஒவ்வொன்றாக மிகப்பெரிய எழுத்திலும், அவற்றையொட்டி மிகச்சிறிய எழுத்தில் சர்மாவின் பதில்களும், அதையொட்டி நடுத்தரமான எழுத்தில் அந்த பதில்கள் பற்றிய நமது நடுநிலை நிற்கும் விமர்சமும் அச்சிடப்படுகின்றன. நமது ஒன்பது கேள்விகளின பதில்கள் பற்றிய விமர்சம் பத்தாவது அத்தியாயத்துடன் நிறைவுபெறும். அன்பர்கள் அனைத்தையும் நடுநிலைநின்று ஆராய்ந்து ஓர் முடிவுக்கு வருவார்களாக.

**ஷண்மத ஸ்தாபந சர்ச்சையில்**

**முன்னுரையாம் முதல் அத்தியாயம் நிறைவு பெற்றது.**

# இரண்டாம் அத்தியாயம்

# முதற்கேள்விக்கு பதிலின் விமர்சம்

## நமது முதற் கேள்வி

அத்வைத ஸித்தாந்தத்தின்படி அநாதிகாலமாக வ்யாவஹாரிகஸத்யமாயிருக்கும் இவ்வுலகைப் படைத்து அளித்து அழிப்பதான ஸகு₃ணப்₃ரஹ்மமொன்று வியவஹார நிலையில் ஒப்புக்கொள்ளப்படுகிறது. அந்தப்ரஹ்மம் எந்த தேவதை? ஆதிசங்கரருடைய ப்ரஸ்தானத்ரய ஸஹஸ்ரநாம பாஷ்யத்திலிருந்தும், ப்ராசீனரான வார்த்திக டீகாகாரர்களின் நூல்களிலிருந்தும் அந்த ப்ரஹ்மம் நாராயணனே என்று தேறுகிறதென்பதை மறுக்கமுடியுமா?

*நமது முதல் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்*

அநாதிகாலமாக இவ்வுலகைப் படைத்து, அளித்து, அழிப்பதென்ற தன்மையுள்ளதாக வ்யவஹார நிலையில் அத்வைதிகள் ஒப்புக்கொள்ளும் ஸகுணப் பிரும்மம் ஒன்றே. அதுவே படைக்கும் தன்மையில் பிரமன் என்றும் அளிக்கும் தன்மையில் நாராயணன் என்றும் அழிக்கும் தன்மையில் ருத்ரன் என்றும் கூறப்படும் என்பதே பலரும் ஒப்புக்கொண்டுள்ள உண்மையானதால் அந்த ப்ரும்மம் ***நாராயணனே*** என்று தேறுகிறதென்ற தங்கள் கருத்தை முழுமூச்சுடன் நாம் மறுக்கிறோம். அவ்யக்தம், அவ்யாக்ருதம், அஸத், ஸத், ஆத்மா, அக்ஷரம், ப்ரும்ஹம் என்பன போன்ற பெயர்களே அதற்குத் தனிப்பட்ட முறையில் உபநிஷதங்களில் கொடுக்கப்பட்டுள்ள பெயர்களாகும் நாராயண:, விஷ்ணு:, வாஸுதேவ: என்பன போன்ற பதங்களுக்கு நாங்கள் கொள்ளும் பொருள்களே வேறு. அதற்கும் ப்ரக்ருத விஷயத்திற்கும் ஸம்பந்தமில்லாததால் இங்கு அந்த சர்ச்சையில் இறங்கவில்லை.

## பதிலின் விமர்ஶம்

''நாராயண:'' ''விஷ்ணு:'' ''வாஸுதே₃வ:'' என்னும் *பதங்களுக்கு அப்பெயர்களையுடைய தே₃வதாவிஶேஷமான ஹரியே* **ஶ்ருதிஸ்ம்ருதிகளிலும்,** *நிகண்டுகளிலும், ஆஸ்திகலோகத்தாலும் பொருளாகக்கொள்ளப்பட்டிருக்கும்போது 'நாங்கள் கொள்ளும் பொருள்கள்வேறு' என்று சாஸ்திரி எழுதுவதிலிருந்து, இவர்கள்* **ஶ்ருதிஸ்ம்ருதி**

முதலான ப்ரமாணங்களுக்கு விருத்$_3$த$_4$மாகவும், உலகநடைக்கு மாறாகவுமே பொருள்கொள்ளும் விசித்திரமான ப்ரக்ருதிகள் என்பது இவர் வாக்காலேயே விளங்குகிறது. இப்படிப் பொருள் கொள்வதை ப்ராமாணிகர்கள் ஏற்கமாட்டார்கள். இவ்விஷயமே இவ்விவாதத்திற்கு அடிப்படையாயிருககும் போது. "அதற்கும் ப்ரக்ருத விஷயத்திற்கும் ஸம்பந்தமிலலாததால் இங்கு அந்த சர்ச்சையில் இறங்கவில்லை" என்று சாஸ்திரி எழுதுவது தம்மால் பதிலுரைக்க முடியாத முக்கிய விஷயங்களைத் தட்டிக்கழிக்கும அவரது மனப்பான்மையைக் காட்டுகிறது. நிற்க.

பிரமனுக்குப் படைக்கும் தன்மை என்றும். நாராயணனுக்கு அளிக்கும் தன்மை என்றும், ருத்ரனுக்கு அழிககும் தன்மை என்றும் எழுதுகிறார் சாஸ்திரி. இம் மூவருக்கும் அத்வைத ஸித்தாந்தத்தின்படி வ்யாவஹாரிக நிலையில் பே$_4$த$_3$ம் உண்டா இல்லையா என்பது நாம் நெடுங் காலமாக அத்வைதிகளைக் கேட்டுவரும் கேள்வி. இதற்கு இக்கால அத்வைதிகள் பதில் சொல்லுவதில்லை. ஆதிசங்கரர் தம் கீதாபாஷ்யம் (6-47; 7-23; 9-23, 25) முதலானவற்றில். ருத்ரன் முதலான மற்ற தேவதைகளை ஆஶ்ரயிப்பவர்களுக்கு அநந்த பலன் கிடையாதென்றும், நாராயணனை ஆஶ்ரயிப்பவர்களுக்கே அநந்த பலன் உண்டென்றும், கூறியிருப்பதால் வ்யாவஹாரிக நிலையில் ருத்ரன் ஆதித்யன் முதலானோரைக் காட்டிலும் நாராயணன் வேறுபட்டவன் சிறப்புற்றவன் என்பதே அவர் கருத்து எனத் தெளிவாக விளங்குகிறது. வ்யாவஹாரிக நிலையில் ராமக்ருஷ்ணாதிகளுக்குப்போலே ப்ரஹ்மவிஷ்ணுருத்ரர்களுக்கும் பே$_4$த$_3$ம் கிடையாது என்னும் பொருள்பட சாஸ்திரி எழுதுவது முற்கூறிய ஆதிசங்கர வாக்யங்களுக்கு முரண்பட்டதாகும். இவ்வாக்யங்களுக்கு என்ன கதி என்று கூறுவதே இக்கால அத்வைதிகள் செய்யவேண்டிய முக்கியமான கடமையாகும். அவசியமற்ற விஷயங்களையிட்டுப் பல பக்கங்களை நிரப்பியிருக்கும் சாஸ்திரி, "சங்கரரும் ஷண்மதமும்" என்னும் கட்டுரையில் மிக அவசியமான இவ்விஷயத்தைத் தொடவே

யில்லை. இவ்வாக்யங்களை அநுவதித்தாலே தங்களுடைய ஷண்மத ஸ்தாபநக் கற்பனையாம ஆகாயக்கோட்டை சரிந்து விழுந்து விடும் என்று பயப்படுகிறார்போலும்!

பிரமனுக்குப் படைக்கும் தன்மை என்று கூறும் சாஸ்திரி. "நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே" முதலான ஶ்ருதிகளிலும், பல்லாயிரக் கணக்கான ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிவாக்யங்களிலும். பிரமனையும் தன் உந்தித் தாமரையில் படைத்து. அவனை மற்ற பொருள்களைப் படைக்கும்படி கட்டளையிட்டவன் நாராயணனே என்று கூறியிருப்பதற்கு என்ன கதி சொல்லுகிறார்? உருத்திர னுக்கு அழிக்கும் தன்மை என்று கூறும் சாஸ்திரி. "ஏகோ ஹவை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேஶாந:" முதலான ஶ்ருதிகளிலும். பல்லாயிரக்கணக்கான ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிவாக்யங்களிலும். பிரமன் உருத்திரன் முதலான அனைவரையும் ப்ரளயகாலத்தில் அழித்தவன் நாராயணனே என்றும். அவனே மூவுலகுண்டுமிழ்ந்தவன் என்றும் கூறியிருப்பதற்கு என்னகதி சொலலுகிறார்? நாராயணனும் ஒரு தேவனே—படைத்தல். காத்தல், அழித்தல என்னும் முத்தொழில்களையும் செய்வதாகவும் ஸ்ருஷ்டிஸம்ஹாரத் தொழில்களை ஓரளவுக்கு ப்ரஹ்மருத்ரர்களுக்குள்ளிருந்து செய்வதாகவும் பல்லாயிரக்கணக்கான ஶ்ருதிஸ்ம்ருதி வாக் யங்கள் உத்கோஷித்திருப்பதற்கும் எனன கதி சொல்லு கிறார்? நிர்விஶேஷசிந்மாத்ர ப்ரஹ்மமே உலகைப்படைத் தளித்து அழிக்கும செயலை ஒவ்வொரு கல்பததிலும் செய் வதாக அவரால் கூறமுடியுமா? இந்த நிர்விஶேஷசிந்மாத்ர ப்ரஹ்மம் அநாதிகாலமாக மாயையினால் மறைககப்பட்டு, ஒரு ஸகுணப்ரஹ்மமாகவும். பல ஜீவர்களாகவும். உலக மாகவும் தோற்றமளிக்கிறது என்றும், அந்த ஒரு ஸகுண ப்ரஹ்மம் நாராயணனே என்றும். அவனே பிரமன உருத் திரன் முதலிய மற்ற எல்லா தேவதைகளையும் உலகையும் அநாதிகாலமாகப் படைத்து அளிதது அழிதது வருகிறான் என்றும் ப்ரஸ்தாநத்ரய ஸஹஸ்ரநாம பாஷ்யங்களில பல ப்ரமாணங்களைக்காட்டி ஆதிசங்கரர் நிரூபிததிருக்கும் வாக்

யங்களுக்கு என்ன கதி சொல்லுகிறார்? கீ$_3$தாபா$_4$ஷ்யத்தின் தொடக்கத்திலேயே "ஆதி$_3$கர்த்தா நாராயணாக்$_3$ய:" [நாராயணன் என்னும் பெயருடையவனே ஆதி$_3$காத்தா] என்று அவர் முழங்கியிருப்பது ஒன்றுபோதுமே அவர் நாராயணன் ஒருவனையே ஸகு$_3$ணப்$_3$ரஹ்மமாகக் கொண்டார் என்று காட்டுகைக்கு. இவையெல்லாம் அர்த்த$_2$வாத$_3$வாகயங்களே; அதாவது கட்டுக்கதைகளே என்னும் ஒரு பதிலையே சாஸ்திரி கூறியுள்ளார் என்பதை அடுத்த கேள்வியின் பதிலில் காண்போம். ஆக, ஶ்ருதிஸ்ம்ருதிகளில உள்ள பல்லாயிரக்கணக்கான வாக்யங்களும், ஆதிசங்கரரின் பல வாக்யங்களும் கட்டுக்கதைகளே என்பதே சாஸ்திரியின் ஸித்தாந்தமாக முடிந்தது. இவருடைய வைதி$_3$கத் தன்மையையும் ஆசார்ய ப$_4$க்தியையும் என்னென்போம்!

ஶ்ருதிஸ்ம்ருதி வாக்யங்களையும், ஆதிசங்கரரின் வாக்யங்களையும் கட்டுக்கதையாக்காமல் நிர்வஹிக்கக்கூடிய வழியை நமது பல நூல்களில் நிரூபித்திருப்பதை இங்கு சுருக்கமாகக் காட்டுவோம். ப்$_3$ரஹ்மம் ஒன்றே அதன் ஒவ்வொரு தன்மையையிட்டு, அஸத், அவ்யக்தம், அவ்யாக்ருதம், ஸத், ப்$_3$ரஹ்ம, ஆகாஶம் வாயு, அக்நி, அப்பு, ஆத்மா, இந்த்$_3$ரன், சிவன், ருத்$_3$ரன், ப்ரஜாபதி, ஹிரண்யக$_3$ர்ப்ப$_4$ன், விஷ்ணு ஹரி, அநந்தன், வாஸுதே$_3$வன், நாராயணன் முதலான ஆயிரக்கணக்கான பெயர்களால சாஸ்திரங்களில் குறிக்கப்பட்டிருக்கிறது என்பதையும், உண்மையில் எப்பொருளைக் குறிக்கும் எப்பதமும் அந்த ஒன்றான ப்$_3$ரஹ்மத்தின் திருநாமங்களே என்பதையும், அந்த ப்$_3$ரஹ்மம் தன்னால் படைக்கப்பட்ட ஆகாசம், வாயு, அக்னி, அப்பு, இந்திரன், உருத்திரன், பிரமன் முதலானவர்களுக்கு, அவற்றைப் படைக்கும்போதே, பாட்டன் பெயரைப் பேரனுக்கு வைப்பதுபோலே தன் பெயர்களில் சிலவற்றை வைத்தது என்பதையும் சாஸ்திரங்கள் தெளிவாக முழங்கியிருக்கின்றன தேவதைகளுக்கெல்லாம் மேலான தேவதையாக உபனிஷத்துக்களில் முழங்கப்படும் அந்த ப்$_3$ரஹ்மம் எந்த தேவதை என்று ஶ்ருதிஸ்ம்ருதிவாக்யங்களையும், சா$_2$க$_3$

பூர்வமீமாம்ஸாந்யாயம் முதலான பூர்வமீமாம்ஸாந்யாயங்களையும் கொண்டு ஆராயும்போது, இந்திரன், சிவன், உருத்திரன், ப்ரஜாபதி முதலான பெயர்களை நாராயணனிடம் ஸமந் வயப்படுத்துவதில் ப்ரமாண விரோத₄மில்லாமையாலும், நாராயண நாமத்தை சிவன் முதலான மற்ற தேவதைகளில் எவரிடமாவது ஸமந்வயப்படுத்தப்பார்த்தால் "பூர்வபதா₃த் ஸம்ஜ்ஞாயாமக₃:" என்று நாராயண நாமத்தை ஸம்ஜ்ஞா வாசகமாகக் குறிப்பிடும் பாணினி ஸூத்ரத்திற்கும், "ந ப்₃ரஹ்ம நேமாந:" முதலான ஶ்ருதிகளுக்கும், பல்லாயிரக்கணக்கான ஸகல வைதி₃க ஶிஷ்டபரிக்₃ருஹீத ஸாத்விக ஶாஸ்த்ரங்களுக்கும் விரோத₄ம் வருகையாலும் நாராயணனே ஶ்ருதிஸ்ம்ருதிகளில் ஆயிரக்கணக்கான பெயர் களால் குறிப்பிடப்படும் பரம்பொருள் என்பது எளிதில் விளங்கும். இந்த நாராயணனையே தம் அத்வைத ஸித்தாந்தத்துக்குச்சேர ஸகு₃ணப்₃ரஹ்மமாக ஆதிசங்கரர் கொண்டிருக்கிறார் என்பதும் எளிதில் விளங்கும். இத னாலேயே, "ஈஶாந:"என்பதற்குப் பலவிடங்களில் "ஈஶநஶீல:" என்று யௌகி₃கமாகவும், நாராயண நாமத்தை எடுக்கும் பலவிடங்களில், அது ஸம்ஜ்ஞாவாசகம் என்று விளங்கும்படி "நாராயணாக்₂ய:" என்றும் ஆதிசங்கரர் பா₄ஷ்யமிடுகிறார் என்பதும் நடுநிலையாளர்க்கு நனகு விளங்கும். இப்படி எந்த ப்ரமாண வாக்யத்தையும் கட்டுக்கதையாகக் கொள்ளாமல் நிர்வஹிக்கக்கூடிய வழியிருக்கும்போது பல்லாயிரக்கணக்கான வாக்யங்களை சாஸ்திரி கட்டுக்கதை யாக்கிக் கழிக்கப்பார்ப்பது சிறிதும் பொருந்தாது என்பது மிகத்தெளிவு. இதை மேலே விரிவாக விளக்குவோம்.

ஶாங்கர பா₄ஷ்ய வார்த்திகடீகாகாரர்களின் நூல்களி லிருந்து நாம் எடுத்துக்காட்டிய வாக்கியங்கள் நாராயண பாரம்யத்தை அசைக்க முடியாதபடி காட்டுகையால், "இவற்றைக்கொண்டு நாராயணனே ஸகு₃ணப்ரஹ்மம் என்று தேறினாலும், பரதத்வம் என்கிறதென்பது மறுக்கத்தக்கது" எனறு தம் கட்டுரையில் (பக்கம் 21ல்) எழுதுகிறார்

*சாஸ்திரி. 'நிர்கு₃ணப்₃ரஹ்மம் நாராயணன்' என்று எவரும் சொல்லவில்லை; 'ப்ராசீநாத்₃வைதிகளின் ஸகு₃ணப்₃ரஹ்மம் நாராயணனே' என்னும் நம் நிரூபணத்தை இசைந்து தீர வேண்டியது சாஸ்திரியின் தலைவிதியாயிற்று.*

முதல் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான
இரண்டாம் அத்தியாயம் நிறைவு பெற்றது.

## மூன்றும் அத்தியாயம்

# இரண்டாம் கேள்விக்கு பதிலின் விமர்ஶம்

### நமது இரண்டாவது கேள்வி

விஷ்ணு. சிவன். சக்தி. கணபதி. முருகன், ஸூர்யன் என்னும ஆறுமே அந்த ப்ரஹ்மம என்று கூறுவீர்களாகில், 'ஈஶதே தே₃வ ஏக:'' ''ஸ ஆத்மா அங்க₃ாந்யந்யா தே₃வதா:'' ''தமீஶ்வராணும் பரமம் மஹேஶ்வரம் தம் தே₃வதாநாம் பரமம் ச தை₃வதம்'' ''தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:'' ''நாராயணாத்₃ ப்₃ரஹ்மா ஜாயதே நாராயணாத்₃ ருத்₃ரோ ஜாயதே. நாராயணாதி₃ந்த்₃ரோ ஜாயதே'' ''ஏகோ ஹவை நாராயண ஆஸீந்ந ப்₃ரஹ்மா நேஶாந:'' முதலான ஶ்ருதி களில ஒருவனே உலகனைத்துக்கும் காரணம் என்றும். அவனிடமிருந்தே பிரமன் சிவன். இந்திரன், ஸூர்யன் முத லான எல்லா தேவதைகளும் உண்டாவதாகவும், அவனாலேயே ரக்ஷிக்கப்படுவதாகவும். அழிக்கப்படுவதாகவும் உபனிஷத் வாக்யங்கள் உத்கோஷிப்பது எப்படிப் பொருந்தும்? இவ் வாக்யங்களைப் பொருந்த விடுவதற்காக இந்த தேவதைகளில் ஒன்றை ஸகுண ப்ரஹ்மமாகவும். மற்றவற்றை அந்த ப்ரஹ்மத்திற்கடங்கிய தேவதைகளாகவும் ஒப்புக்கொள்ளு கிறேமெனில்: அந்த ஸகுண ப்ரஹ்மம் நாராயணனே என்பதை ஆதிசங்கரரின் ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களின்படி ஒப்புக் கொள்ளுகிறீர்களா?

  

*நமது இரண்டாம் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்*

" ஈசதே தேவ ஏக: " முதலான சில சுருதிகளில் கூறியிருப்பது நாராயணும்சத்தை புகழ்வதேயன்றி வேறில்லை. சிவன் முதலான மற்ற அம்சங்களைப் புகழும் " ஏகோ ஹ வா ருத்ரோ பபூவ ந த்விதீயாய தஸ்தே " என்பன போன்ற சுருதிகளும் உள்ளன. அவைகளும் அந்தந்த அம்சத்தை புகழும்போதும் இவ்வாறே தான் கூறுகின்றன. அவை பிரமாணமல்லவென்ருல் மற்றவையும் பிரமாணங்களாகா. ஆகவே பல அம்சங்களில் ஒரே ஸகுண பிரும்மமே அவ்வந்த அவ்வந்த தொழிலுக்கு ஏற்ற நாம ரூபங்களை ஏற்று எல்லா தொழில்களையும் நடத்தி வருவதால் அவைகளுள் அடக்கும் தேவதை என்றும், அடங்கிய தேவதையென்றும் எதையும் பொருந்த விடுவதற்கான பாகுபாட்டிற்கே சாஸ்திரங்களில் இடமில்லை. உண்மையில் " பீஷாஸ்மாத்வாத: பவதே " என்பதெல்லாம் அர்தவாதங்கள் என்று உணர்தல் அவசியம். ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களோ, ஸஹஸ்ரநாம பாஷ்யமோ இவ் விஷயத்தில் என்ன செய்யமுடியும். உபநிஷத்துகள் உண்மையில் நிர்குணமான அத்வைத தத்வத்தைதான் அவற்றின் தாத்பர்ய விஷயமாக உத்கோஷிக்கின்றனவேயன்றி வேறு எதையும் உத்கோஷிக்கவில்லையென்பதே அத்வைதிகளின் முடிவானதால் அதற்கு மாறுபட்ட தங்கள் உத்கோஷங்களுக்கெல்லாம் அவர்கள் அசைந்து கொடுப்பார்கள் என எண்ணுவது சரியாகாது. விஷ்ணு, சிவன், சக்தி, கணபதி, முருகன், சூர்யன் என்னும் அறுவருமே அந்த பரப்ரும்மம் என நாங்கள் கொள்ளவேயில்லை. அறுவரும் நிருபாதிகமான பரப்பிரும்மத்தின் ஔபாதிகமான அம்சங்கள் என்றே நாங்கள் கொள்கிருேம். எனவே நீங்கள் எங்களைப் பார்த்து இக்கேள்வி கேட்பது அஜாதபுத்ர நாமகரண ந்யாயத்தை தான் ஞாபகமூட்டுகிறது. ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களையும் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தையும் நாங்கள் ஒப்புக்கொள்கிருேம். ஆயினும், அவைகளுக்குத் தாங்கள் கூறும் அபத்தமான கருத்துக்களை ஒருபொழுதும் ஒப்புக்கொள்ளமாட்டோம். மேலும் பராசரபட்டர் கண்டித்திருப்பதாக தாங்களே கூறும் சங்கரரது ஸஹஸ்ரநாமபாஷ்யம் தங்களுக்கு இவ்விஷயத்தில் எப்படி பிரமாணமாகும் என்பதும் விளங்கவில்லை. ஆயினும் ராமானுஜர் முதலானவர்கள்கண்டித்திருக்கும் சங்கர பாஷ்யங்கள் தங்களுக்கு பிரமாணமாகும்பொழுது இது ஏன் ஆகக்கூடாது என்று ஒருவாறு சமாதானமடைகிருேம். நமது ஆராய்ச்சி நூலிலும் இவ்விஷயத்தை விளக்கியிருக்கிருேம்.

### பதிலின் விமர்ஶம்

சில வாக்யங்கள் நாராயணுேம்ஶத்தைப் புகழ்கின்றன; சில வாக்யங்கள் ருத்ராம்ஶத்தைப் புகழ்கின்றன சில வாக்யங்கள் இந்த்₃ராம்ஶத்தைப் புகழ்கின்றன, சில வாக்யங்கள் ஸௌர்யாம்ஶத்தைப் புகழ்கின்றன; சில வாக்யங்கள் ஆகாஶாம்ஶத்தைப் புகழ்கின்றன முதலான உபந்யாஸங்கள் ஒரு புறம் இருக்கட்டும். சாஸ்திரங்களிலும், உலகத்திலும் ப்ரஸித்தங்களான விஷ்ணு, பிரமன், சிவன், இந்திரன், ஸௌர்யன், ஆகாசம் முதலான தத்வங்களிடையே அத்வைத மதத்தில் ஏதாவது ஒரு வகையில் பே₄த₃ம் ஒப்புக்கொள்ளப் படுகிறதா இல்லையா என்பது நமது ஸாரமான கேள்வி. அத்வைதநூலகளில வ்யாவஹாரிகத₃ஶை எனப்படும் ப்ரத்யக்ஷலோக நடைமுறையில் இவற்றினிடையே கால்பனிகமான பே₄த₃ம் உண்டு என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த வ்யாவஹாரிகபே₄தநிலையில் அனைத்துலகையும் படைத்தளித்து அழிக்கும் ஒன்றுன ஸகு₃ண ப்₃ரஹ்மம் எந்த தே₃வதை என்று நமது முதல் கேள்வியிலேயே கேட்கப்பட்டுள்ளது. இக்கேள்வி மற்ற எல்லாக் கேள்விகளுக்கும் அடிப்படையானது. இக்கேள்விக்கு பதிலுரைக்கத் தொடங்கினுல், 'ஆதி₃ஶங்கரரின ப்ரஸ்த₂ாநத்ரய ஸஹஸ்ரநாமபா₄ஷ்யங்களிலிருந்தும், ப்ராசீநவார்த்திகடீகாகாரர்களின் நூல்களிலிருந்தும் நாராயணனே அந்த தேவதை எனத் தேறுகிறது'' என்னும் பதிலைத் தவிர வேறு எந்த பதிலையும் ப்ராமாணிகர்களான அத்வைதிகளால் அளிக்கமுடியாது. இக்கேள்விக்கு பதில் உரைககாமல், திருப்பித் திருப்பி நிர்விஶேஷசிந்மாத்ர ப்₃ரஹ்மத்தைப் பற்றிப் பேசுவதால் என்ன பயன்? ''**தம் தே₃வதாநாம் பரமம் ச தை₃வதம்**'' என்று கூறப்படும் தேவாதிதேவன் யார் என்று கேட்டால், நிர்விஶேஷசிந்மாத்ர ப்₃ரஹ்மத்தின் அம்ஶங்களே எல்லா தேவதைகளும் என்று கூறுவதா சரியான பதில்? நிர்விஶேஷசிந்மாத்ரத்திற்கு அம்ஶம் எப்படி இருக்கமுடியும்? ஸகு₃ணதத்வங்களிடையேயன்ருே அம்ஶாம்ஶிபா₄வம் கூறமுடியும். ஸகு₃ணதத்வங்களிடையே

அம்ஶி எது. அம்ஶங்கள் எவை என்னும் கேள்விக்கு எல்லாம் நிர்க்குணத்தின் அம்ஶங்கள் என்று கூறுவது சரியான பதிலாகுமா? "ஆம்ராந் ப்ருஷ்ட: கோவிதா₃ராந் ஆசஷ்டே" என்றதுபோலன்றே இருக்கிறது. ஆதிசங்கரரே தம் ப்ரஸ்தா₂நத்ரய ஸஹஸ்ரநாம பா₄ஷ்யங்களில் நாராயணன் ஒருவனே மற்ற எல்லா தேவதைகளுக்கும் ஆதி₃கர்த்தாவாய். மற்ற எல்லா தேவதைகளையும நிய மிப்பவனாய் எல்லா தேவதைகளையும் அழிப்பவனாயிருப்ப வன் என்று மிகத்தெளிவாக முழங்கியிருக்கும்போது, ஆறு தேவதைகள் துல்யமே என்றும், இவற்றுள் அடக்கும் தேவதை, அடங்கிய தேவதை என்ற பாகுபாடு கிடையாது என்றும் எழுதுவதற்கு சாஸ்திரிகளுக்கு சிறிதும் அதி₄காரம் இல்லை.

பல்லாயிரக்கணக்கான ஶ்ருதிஸ்ம்ருதிவாக்யங்கள் ஒரு தேவன் மற்ற அனைவரையும் நியமிப்பவன் என்றும், மற்ற தேவதைகள் அவனால் நியமிக்கப்படுபவர்கள் என்றும் முழங்கியிருக்கின்றன. இவையெல்லாம் அர்த்த₂வாத₃வாக் யங்கள் என்கிறார் சாஸ்திரி. "சங்கரரும் ஷண்மதமும்" என்னும் கட்டுரையில் (பக்கம் 27ல்) "கட்டுக்கதை யாகும்; அதாவது அர்த்த₂வாத₃ வாக்யங்களே" என்று விளக்கமும் கொடுத்திருக்கிறார். பல்லாயிரக்கணக்கான ஶ்ருதிஸ்ம்ருதிவாக்யங்களைக் கட்டுக்கதையாக்க இவருக்கு அதி₄காரம் ஏது? கட்டுக்கதையாக்காமல் நிர்வஹிக்கக் கூடிய வழியை முன்னமே காட்டினோம். "ப்ரஸ்தானத்ரய பா₄ஷ்யங்களோ ஸஹஸ்ரநாம பா₄ஷ்யமோ இவ்விஷயத்தில் என்ன செய்யமுடியும்?' என்று அவற்றின்மேலும் சீறி விழுவது இவருடைய ஆசார்ய ப₃க்தியைக் குன்றிலிட்ட விளக்காக்கிக் காட்டுகிறது!

தம் பரமாசார்யர்களுடைய நூல்களின் மேலேயே இவர் சீறி விழுவதற்கு முக்கிய காரணம் என்னவெனில், இவர்களுடைய ஷண்மத ஸ்தாபநக் கொள்கையைச் சிதறிப் போம்படி வெடிவைப்பவை அந்த கிரந்தங்களேயாயிருப் பதேயாகும். ஆதி₃ஶங்கரர் நிர்விஶேஷசிந்மாத்ரப்₃ரஹ்ம

வாதி₃யேயாயினும், வ்யாவாஹாரிகநிலேயில் பிரமன், சிவன் முதலான எல்லா தெய்வங்களேயும் படைத்து அளித்து அழிக்கும் ஸகு₃ணப்₃ரஹ்மம் நாராயணனே எனபதை ப்ரஸ்த₂ாநத்ரய ஸஹஸ்ரநாம ப₄ாஷ்யங்களில் இவர்கள் வாய்திறககமுடியாதபடி நூற்றுக்கணக்கானவிடங்களில நிலேநாட்டியிருக்கிறுர். "ஆதிசங்கரர் ஷண்மத ஸ்த₂ாபகரா" எனனும் நூலில (4—8 பக்கங்களில்) சில முககியமான இடங்களேக் காட்டியிருககிறேம. இவர்களுடைய ஆசார்ய த்₃ரோஹத்தை உறுதிப்படுத்துவதறகாக மேலும் பல விடங்களே இங்கு காட்டுவோம். ப்₃ரஹ்மவிஷ்ணுருதரர்கள் ஒருபடிப்பட்டவர்களே என்று இவர்கள் அடிககடி புலம்பு கிருர்களல்லவா? அதற்குப் பலவிடங்களில் வேட்டுவைத் துத் தகர்த்திருக்கிருர் ஆதிசங்கரர். கீதை (8—16)ல், "கிம் புந: த்வத்த: அநயத் ப்ராப்தா: புந: ஆவர்த்தநதே இதி? உச்யதே—ஆ ப₃ரஹமபு₄வநாத்—ப்₃ரஹ்மபு₄வநம் ப்ரஹ்ம லோக இத்யாத்த₂:. ஆ ப்₃ரஹ்மபு₄வநாத்—ஸஹ ப்₃ரஹ்ம லோகேந லோகா: ஸர்வே புநராவர்த்திந:— புநராவர்த்தந ஸ்வப₄ாவா: .. மாம் ஏகம் உபேதய து கௌந் தேய புநர்ஜந்ம புநருத்பத்தி: ந வித்₃யதே" [உன்னேக்காட்டி லும் வேறுபட்டவர்களே அடைந்தவர்கள் மறுபடியும் ஸம்ஸாரத்திற்குத் திருமபுகிருர்களோ? எனில். கூறு கிறேன்: ப்₃ரஹ்மபு₄வநம என்பது ப்₃ரஹ்மாவின் லோகத் தைக் குறிக்கும்; ப்₃ரஹ்மாவின் லோகம் உள்ளிட்ட எல்லா உலகங்களும் ஸம்ஸாரததில் மறுபடி உழலவைக்கக்கூடிய இயல்வை உடையவை. என்னே ஒருவனே அடைந்தால் தான் மறுபிறப்பு இல்லே] என்று கண்ணன் பிரமனுக்கும் தனக்கும் நெடுவாசியுண்டு என்று காட்டுவதாக ப₄ாஷ்ய மிடுகிருர். கீதை (11—37)ல் "ப்₃ரஹ்மண.—ஹிரண்யக₃ர்ப்ப₄ ஸ்யாபி ஆதி₃கர்த்தா — காரணம்" என்று பிரமனுக்கும் காரணமாயிருப்பவன் கண்ணன் என்று அர்ஜுனன் கூறு வதாக பாஷ்யமிடுகிருர். கீதை (4—6)ல் "பூ₄தாநாம் ஈஶ்வர:" என்றதற்கு, "ப்₃ரஹ்மாதி₃ஸ்தம்ப₃பர்யந்தாநாம் ஈஶநஶீல:" [பிரமன் முதல் புல் ஈருக ஜீவர்கள் அனேவரை யும் நியமிப்பதையே இயல்வாக உடையவன்.] என்றுபிரமனே

ஈஶிதவ்யர்களான ஜீவர்களில் முதல்வனாகவும், அவனையும் நியமிக்கும் இயல்வையுடையவனாகக் கண்ணனையும் குறிப்பிடுகிறார். [ஈஶநஶீலத்வம் நிர்க்கு₃ணப்₃ரஹ்மத்திற்குப் பொருந்தாது என்பது குறிக்கொள்ளத்தக்கது.] "பூ₄தக்ருத் பூ₄தப்₄ருத்"என்னும்நாமங்களின் பா₄ஷ்யத்தில, "ரஜோகு₃ணம் ஸமாஶ்ரித்ய விரிஞ்சரூபேண பூ₄தாநி கரோதி இதி பூ₄தக்ருத்| தமோகு₃ணமதி₄ஷ்டா₂ய ருத்₃ராத்மநா க்ருந்ததி ஹிநஸ்தீதி வா பூ₄தக்ருத்| ஸத்வகு₃ணமதி₄ஷ்டா₂ய பூ₄தாநி பி₃ப₄ர்த்தி பாதி த₄ாரயதி போஷயதி இதிவா பூ₄தப்₄ருத்" [ரஜோ கு₃ணத்தை அடைந்து பிரமனை உருவமாகக்கொண்டு பூதங்களைப் படைக்கிறானகையாலே பூ₄தக்ருத் எனப் படுகிறான். தமோகுணத்தை அதி₄ஷ்டி₂த்து உருத்திரனை உருவமாகக்கொண்டு (பூ₄தங்களை) அழிக்கிறானகையாலே பூ₄தக்ருத் எனப்படுவதாகவும் கொள்ளலாம். ஸத்வ கு₃ணத்தை அதி₄ஷ்டித்து நின்று பூ₄தங்களைக் காப்பாற்றுகிறான், தாங்குகிறான் போஷிக்கிறான் என்னும் காரணத்தால பூ₄தப்₄ருத் எனப்படுகிறான்.] என்று, ரஜோகுண முடைய பிரமனையும், தமோகுணமுடைய உருத்திரனையும் உருவமாகக்கொண்டு என்று எழுதியவர். 'ஸத்வகுண முடைய விஷ்ணுவை உருவமாகக்கொண்டு ரக்ஷிக்கிறான்' என்று எழுதாமல ஸத்வகு₃ணத்தை அதி₄ஷ்டி₂த்து ரக்ஷிக் கிறான்' என்று எழுதியதன் மூலம் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங் களை ப்₃ரஹ்மருத்₃ரர்களுக்குள்ளிருந்து விஷ்ணுவே செய் கிறான் என்றும், ஸ்தி₂தியைத் தானே நேரே செய்கிறான் என்றும் கூறியிருப்பதும், உயர்ந்ததான ஸத்வகு₃ணத்தை விஷ்ணுவுக்கும், அதைவிடத் தாழ்ந்ததான ரஜோகு₃ணத் தைப் பிரமனுக்கும், மிகத்தாழ்ந்ததாக கீ₃தாதி₃களில் எடுக்கப்படும் தமோகு₃ணத்தை உருத்திரனுக்கும் கூறி யிருப்பதும் ஆதிசங்கரர் இம்மூன்று மூர்த்திகளிடையே வ்யாவஹாரிக நிலையில் பே₄தத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார் என்பதையும், மிக உயர்ந்த ஸகு₃ணப்₃ரஹ்மஸ்த₂ானத்தை விஷ்ணுவுக்கும் ஜீவர்களில் ப்ரத₂மஸ்த₂ானத்தைப் பிரம னுக்கும், இரண்டாவது ஸ்தானத்தை உருத்திரனுக்கும் ஒப்புக்கொண்டிருக்கிறார் என்பதையும் மிகத்தெளிவாகக்

காட்டுகிறது. முண்டக₃ம் (2—4)ல் "ஸர்வபூ₄தாந்தராத்மா" என்னும் பத₃த்துக்கு உரையிடுகையில், "ஏஷதே₃வோ விஷ்ணுரநந்த: ப்ரத₂மஶரீரீ த்ரைலோக்யதே₃ஹோபாதி₄: ஸர்வேஷாம் பூ₄தாநாம் அந்தராத்மா" [விஷ்ணுவென்றும் அநந்தனென்றும் பிரஸித்தி பெற்ற இந்த தேவன் ஶரீர முடையவர்களில் முதல்வனாய், மூவுலகத்தையும் தேஹமாகக் கொண்டவனாய், எல்லா பூதங்களுக்கும் அந்தர்யாமியா யிருக்கிறான்.] என்று ஸகு₃ணதத்வங்களில் முதல் ஸ்தா₂ னத்தை தே₃வனான விஷ்ணுவுக்கே உறுதிப்படுத்தினார். இவ்வாக்யங்கள் நிர்க்கு₃ணப்₃ரஹ்மத்தைக் குறிக்கவே முடியாது என்பது எவர்க்கும் விளங்கும். தே₃வர்களில் முதல்வன் விஷ்ணுவே என முழங்கும் இத்தகைய வாக் யங்களை நாம் எடுத்துக்காட்டினாலும் தொடாமலே சென்று விடுவது சாஸ்திரியுடைய நடுநிலையின்மையைக் காட்டுகிறது. இத்தகையவிடங்களில ஆதிசங்கரரின் நிலைக்கும், இன்றுள்ள அத்வைதிகளின் நிலைக்கும் உள்ள வாசியைக் காட்டுவதே நாம் இச்சர்ச்சையில இறங்கியதின் முக்கிய நோக்கம். இன்றுள்ள அத்வைதிகள் மனம்போனபடியெல்லாம் கூறு கிறபடி, இம்மூன்று மூர்த்திகளிலும் மேம்பட்டதொரு பரமசிவனையோ, பராசக்தியையோ அலலது வேறொன் றையோ ஆதிசங்கரர் கனவிலும் கருதியவரல்லர் என்று ஸஹஸ்ரநாமத்திலுள்ள ஒவ்வொரு நாமபா₄ஷ்ய மும், ப்ரஸ்தா₂நத்ரயபா₄ஷ்யங்களும வெள்ளிடைமலையாகக் காட்டித் தருகின்றன. விஷ்ணுவே பரம்பொருள் மற்றவர்கள் ஜீவர்களே என்று கோஷிகக்கும் ஸ்ரீ விஷ்ணு புராணாதி₃ ஸாத்விகபுராண வசனங்களை அவர் எடுத்துக் காட்டுகிறாரேயொழியலிங்க₃ஶைவாதி₃தாமஸபுராணங்களில் இதற்கு நேர் விபரீதமாக எழுதியிருக்கும் வசனங்களைக் கையால் எழுதவும் கூசுகிறார். கீ₃தாநாமஸஹஸ்ரங்கள் வைஷ்ணவ ஶாஸ்திரங்களாகையாலே அவற்றில் ஶைவ புராணங்களை எடுக்க ப்ரஸகதியில்லை என்று இவர்கள் கூறக்கூடும்; தமக்கு அபி₄மதமாயின் உபநிஷத்₃ ப்₃ரஹ்ம ஸூத்ரபா₄ஷ்யங்களிலாவது அத்தகைய வசனம் ஒன்றை யாவது எடுத்திருக்கலாமே! அதுவும் இல்லை. இவற்றி

விருந்து விஷ்ணுவைத் தாழ்த்திப்பேசும் தாமஸ புராண வாக்யங்களை அறவே ஒதுக்கியவர் அவர் என விளங்குகிறது. அவருடைய நிலை இப்படியிருக்கும்போது, இக்காலத்து அத்வைதிகள் (குறிப்பாகக் காமகோடி ஶிஷ்யர்கள்) தாமஸ புராணங்களையும், ப்ராசிநர் எவராலும் தொடப்படாத தே₃வீப₄ாக₃வதம் என்னும் நூலையும் பரமப்ரமாணமாகப் பற்றி நிற்பதும், அவற்றில் கூறப்பட்ட ஶைவஶாக்தாதி₃ மதங்களைப் பின்பற்றுவதும், அம்மதங்களையொட்டிப் பிற் காலத்தில் எழுந்த பல துதிநூல்களை அவர் தலையில் சுமத்து வதும், அவர் கனவிலும் கருதாத ஶைவஶாக்தாதி₃மதங்களை அவர் ஸ்த₂ாபித்தார் என்று எழுதுவதுமாகத் தங்கள் பொழுதைப் போக்கிவருகிறார்கள். ப₄ாஷ்யப₄ாவஜ்ஞர் என்று விருதுவகிக்கும் சாஸ்திரி, ஆதி₃ஶங்கரரின் ப₄ாஷ்யங்களுக்கு மிகவும் முரண்பட்ட இச்செயல்களுக்கு சப்பைக்கட்டுக் கட்டுகிறார். ப்ரஸ்த₂ாநத்ரய ஸஹஸ்ரநாம ப₄ாஷ்யங்களின் மீது சீறி விழுகிறார்! அந்தோ பரிதாபம்!!

ஸகு₃ணப்₃ரஹ்மத்தை நாராயணன் என்று பலவிடங் களில் ஆதி₃ஶங்கரர் குறிப்பதை நாம் காட்டியதற்கு அவர் ஸகு₃ணப்₃ரஹ்மத்தைப் பரமேஶ்வரன் ஈஶ்வரன் முதலிய பதங்களாலும் கூறியிருக்கிறாரே என்று "சங்கரரும் ஷண் மதமும்" கையெழுத்துப்பிரதியில் (பக்கம்21, 22) கேட்கிறார் சாஸ்திரி. அப்பயதீ₃க்ஷிதர் வழிவந்த இவர்களைப்போலே ஆதி சங்கரர் ஈஶ்வரபரமேஶ்வராதி₃ ஶப்₃த₃ங்களை சிவபரமாகவே நினைத்தவரல்லரென்பதையும், தம் நூல்களில் பல விடங்களில் நாராயணபரமாகவே அவற்றைப் பிரயோகித்திருப்பதை யும், ப₄ாஷ்யமிட்டிருப்பதையும் காட்டுவோம் இனி.

ப்₃ருஹதா₃ரண்யகபாஷ்யத்தில் (3-7-3) "யஈத்₃ருஶோ₃ஶ்வரோ நாராயணாக்₂ய:" என்று நாராயணன் என்னும் பெயரை யுடையவனையே ஈஶ்வரனென்றதையும், அவ்விடத்தில் வார்த்திக டீகாகாரர்கள் (மற்ற தெய்வங்களைப்போலே) நாராயணன் புராணாக₃மங்களால் மாத்திரம் பரம்பொரு ளாகக் கூறப்படுபவனல்லன் என்றும், ஶ்ருதியினாலும்

பரமாத்மாவாக முழங்கப்பட்டவன் என்றும் உத்₃தே₄ஷித்திருப்பதையும் முன்னமே காட்டினேம். பொய் யெழுதுவதையே தம் குலத₄நமாகக் கொண்ட சாஸ்திரி 'நகேவலம் புராணுக₃மாப்₄யாமேவ ஸோऽதி₄கம்யதே. கிந்து ஶ்ருத்யக்ஷரைரபி'' என்னும் ஆநந்த₃கி₃ரிடீகையை நாம காட்டியிருப்பதையும் காண மனமிலலாமல. நாம் 'புளுகு' எழுதுவாகத் தம் கட்டுரையில (பக்கம் 21ல) கதைக்கிருர். தங்களுக்குக் கண்டே₂க₃டு₃வாயிருப்பதையெல்லாம் பொய்யென்று கூறி விட்டால சரியாகிவிடும் என நினைககிருர்போலும்! நிற்க. மாண்டூ₃க்யோபநிஷத்காரிகைகளில் முதல் காரிகைக்கு ப₄ாஷ்யமிடும்போது, ''ஈஶ்வரோ யோ நாராயணுக்₂ய:'' என்று, நாராயணனையே ஈஶ்வரனெனருர். ப்₃ரஹ்மஸூத்ர ப₄ாஷ்யத்தில பாஞ்சராத்ராதி₄கரணததில் நாராயணஶப்₃த₃த்தால் முதல் வாக்யத்தில பரமாத்மாவைக் குறிததுவிட்டு, ''ஶ்ருதிஸ்ம்ருத்யோரீஶ்வரப்ரணித₄ாநஸ்ய ப்ரஸித்₃த₄த்வாத்'' என்னும் அடுத்த வாக்யத்தில் அவனையே ஈஶ்வர பத₃த்தால் குறிக்கிருர். இவற்றையும், கீ₃தாப₄ாஷ்யததில (3—30)ல் ''மயி தே₃வே பரமேஶ்வரே ஸர்வஜ்ஞே ஸர்வாத்மநி வாஸுதே₃வே'' என்றும் (8—5)ல் 'பரமேஶ்வரம விஷ்ணும்'' என்றும், (4—35)ல்''மயி—வாஸுதே₃வே பரமேஶ்வரே'' என்றும், (7—14)ல் ''ஈஶ்வரஸ்ய விஷ்ணோ:'' என்றும், (7—15)ல் ''பரமேஶ்வரம் நாராயணம்'' என்றும், (11—3ல்) ''(ரூபம் ஐஶ்வரம்)—வைஷ்ணவம் ரூபம்'' என்றும், (12—20)ல் ''விஷ்ணோ: பரமேஶ்வரஸ்ய'' என்றும், (13—2)ல் ''ஈஶ்வரஸ்ய விஷ்ணோ:'' என்றும், (13—18)ல் ''மயி பரமேஶ்வரே ஸர்வஜ்ஞே பரம்கு₃ரௌ வாஸுதே₃வே'' என்றும், (13—27)ல் ''பரமஶ்சாஸௌ ஈஶ்வரஶ்ச ஈஶநஶீலஶ்ச இதி பரமேஶ்வர:'' என்றும், (14—26ல்) ''ஈஶ்வரம நாராயணம்'' என்றும், (15-16ல்)''ப₄க₃வத: ஈஶ்வரஸ்ய நாராயணுக்₂யஸ்ய'' என்றும், (15—17)ல் ''ஈஶ்வர: — ஸர்வஜ்ஞ: நாராயணுக்₂ய: ஈஶநஶீல:'' என்றும், (18—61)ல் ''ஈஶ்வர:— ஈஶநஶீல:' என்றும், ஸஹஸ்ரநாமப₄ாஷ்யத்தில ஈஶாந ஈஶ்வர பரமேஶ்வராதி₃நாமங்களை விளக்கும்போதும் ஈஶ்வர மஹேஶ்வர ஈஶாந பரமேஶ்வராதி₃ ஶப்₃த₃ங்களை வ்யுத்

பத்தியைக் காட்டிப் பலவிடங்களில் நாராயணபரமாகக் கொண்டிருப்பதையும், நாராயண ஶப்₃த₃த்தைக் குறிக்கும் போது அது ஸம்ஜ்ஞாவாசகம் என்பது தோற்ற "நாராயணாக்₂ய:" என்று குறிப்பதையும், "வாஸுதே₃வாக்₂யம் பரப்₃ரஹ்மாபி₄தே₄யபூ₄தம்" என்று முதல் அத்தியாயக் கடைசியிலும், (13—12)ல் "வாஸுதே₃வாக்₂யா" என்றும் வாஸுதே₃வஶப்₃த₃த்தையும் ஸம்ஜ்ஞாவாசகமாகக் குறிப்பதையும், இப்படித் தம் நூல்களில எங்குமே "ஈஶ்வராக்₂ய:" "பரமேஶ்வராக்₂ய:" "ஈஶாநாக்₂ய:" "ஶிவாக்₂ய:" "மஹேஶ்வராக்₂ய:" என்று பரம்பொருளைக் குறிப்பதில்லையென்பதையும், பா₄ஷ்யபா₄வஜ்ஞரான சாஸ்திரி கண்டுவைத்திருந்தும், காணாதவர் போல் நடிக்கவேண்டிய நிலைக்கு வந்துவிட்டாரந்தோ! இப்படியிருக்குமிவர் தம் கட்டுரையில் (பக்கம் 30ல) நாம் ப்ரஸ்தா₂நத்ரய ஸஹஸ்ரநாமபா₄ஷ்யங்களைப் படிக்காமலே எழுதுகிறோம் என்று குற்றம் சாட்டுவதுதான் விசித்திரமாயிருக்கிறது! முற்கூறிய வாக்யங்களைக் கண்டும் காணாததுபோல் நடிக்கவில்லை' என்று கூறுவாராகில், அவற்றைப் படிக்கவேயில்லை என்றே தேறுமாகையாலே, நம்மேல் ஏறிட்ட குற்றம் இவர் மேலேயே நிலைநிற்கும்.

உண்மையில், ஶாங்கரபா₄ஷ்யத்தைப் பாராமலே இவர் ஓர் உபநிஷத்வாக்யத்திற்குப் பொருள் விளக்கியிருப்பதைக் காட்டுகிறோம் காண்மின். தம் கட்டுரையில் (பக்கம் 21ல்) "ந தஸ்ய கார்யகரணம் ச வித்₃யதே—என்பது போன்ற வாக்கியங்களை ஆராயுமிடத்து, காரணத்தன்மையும் அற்றதல்லவோ பரதத்துவம் என நிர்ணயிக்கப்பட்டுள்ளது" என்று எழுதுகிறார் இவர். இவ்வசனம் ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தில் (6—8)ல் உள்ளது. உபநிஷத்தில் "ந தஸ்ய கார்யம் கரணம் ச வித்₃யதே" என்றே பாட₂ம் உள்ளது. "ஸ ப்₃ரஹ்மா ஸ ஶிவ: ஸேந்த்₃ர:" என்று அநாதி₃காலமாகவுள்ள பாடத்தைச் சில காலமாக இவர்கள் மாற்றி "ஸ ப்₃ரஹ்ம ஸ ஶிவ: ஸ ஹரி: ஸேந்த்₃ர:" என்று ஒரு பாடத்தைக் கற்பித்திருப்பதுபோல் இங்கும் "ந தஸ்ய கார்யகரணம்" என்று ஒரு பாட₂த்தைக் கற்பித்திருக்கிறார்

பரமாத்மாவாக முழங்கப்பட்டவன் என்றும் உத்$_3$தே$_4$ஷித்திருப்பதையும் முன்னமே காட்டினேம். பொய் யெழுதுவதையே தம் குலத$_4$ர்மமாகக் கொண்ட சாஸ்திரி 'ந கேவலம் புராணுக$_3$மாப்$_4$யாமேவ ஸோSதி$_4$கம்யதே. கிந்து ஶ்ருத்யக்ஷரைரபி'' எனனும் ஆநந்த$_3$கி$_3$ரிடீகையை நாம காட்டியிருப்பதையும் காண மனமிலலாமல. நாம் 'புளுகு' எழுதுவாகத் தம் கட்டுரையில (பக்கம் 21ல) கதைக்கிறூர். தங்களுக்குக் கண்டே$_2$க$_3$டு$_3$வாயிருப்பதையெல்லாம் பொய்யென்று கூறி விட்டால சரியாகிவிடும் என நினைககிறூர்போலும்! நிற்க. மாண்டூ$_3$க்யோபநிஷத்காரிகைகளில் முதல் காரிகைக்கு பா$_4$ஷ்யமிடும்போது. "ஈஶ்வரோ யோ நாராயணுக்$_2$ய:'' என்று. நாராயணனையே ஈஶ்வரனெனறூர். ப்$_3$ரஹ்மஸூத்ர பா$_4$ஷ்யத்தில பாஞ்சராத்ராதி$_4$கரணததில் நாராயணஶப்$_3$த$_3$த்தால் முதல் வாக்யத்தில பரமாத்மாவைக் குறிததுவிட்டு, "ஶ்ருதிஸ்ம்ருத்யோரீஶ்வரப்ரணித$_4$ா நஸ்ய ப்ரஸித்$_3$த$_4$த்வாத்'' என்னும் அடுத்த வாக்யத்தில் அவனையே ஈஶ்வர பத$_3$த்தால் குறிக்கிறூர். இவற்றையும், கீ$_3$தாபா$_4$ஷ்யததில (3—30)ல் "மயி தே$_3$வே பரமேஶ்வரே ஸர்வஜ்ஞே ஸர்வாத்மநி வாஸுதே$_3$வே'' என்றும் (8—5)ல் 'பரமேஶ்வரம விஷ்ணும்'' என்றும், (4—35)ல் "மயி—வாஸுதே$_3$வே பரமேஶ்வரே'' என்றும், (7—14)ல் "ஈஶ்வரஸ்ய விஷ்ணோ:'' என்றும், (7—15)ல் "பரமேஶ்வரம் நாராயணம்'' என்றும், (11—3ல்) "(ரூபம் ஐஶ்வரம்)—வைஷ்ணவம் ரூபம்'' என்றும், (12—20)ல் "விஷ்ணோ: பரமேஶ்வரஸ்ய'' என்றும், (13—2)ல் "ஈஶ்வரஸ்ய விஷ்ணோ:" என்றும், (13—18)ல் "மயி பரமேஶ்வரே ஸர்வஜ்ஞே பரம்கு$_3$ரௌ வாஸுதே$_3$வே'' என்றும், (13—27)ல் "பரமஶ்சாஸௌ ஈஶ்வரஶ்ச ஈஶநஶீலஶ்ச இதி பரமேஶ்வர:" என்றும், (14—26ல்) "ஈஶ்வரம நாராயணம்'' என்றும், (15-16ல்)"ப$_4$க$_3$வத: ஈஶ்வரஸ்ய நாராயணுக்$_2$யஸ்ய" என்றும், (15—17)ல் "ஈஶ்வர: — ஸர்வஜ்ஞ: நாராயணுக்$_2$ய: ஈஶநஶீல:'' என்றும், (18—61)ல் "ஈஶ்வர:— ஈஶநஶீல:' என்றும், ஸஹஸ்ரநாமபா$_4$ஷ்யத்தில ஈஶாந ஈஶ்வர பரமேஶ்வராதி$_3$நாமங்களை விளக்கும்போதும் ஈஶ்வர மஹேஶ்வர ஈஶாந பரமேஶ்வராதி$_3$ ஶப்$_3$த$_3$ங்களை வ்யுத்

பாதத்தில் எட்டு அக்ஷரங்களேயிருப்பதைக் காணலாம். முதல பாத₃த்தில் "ஸ இந்த்₃ர:" என்று படிக்கவேண்டியிருக்க, அப்படிப்படித்தால் ஓரக்ஷரம் அதி₄கமாகிவிடுமே என்று பயந்த வேதபுருஷன் "ஸோऽபி லோபே சேத் பாத₃பூரணம்"என்னும்அநுஶாஸநத்தையொட்டி 'ஸேந்த்₃ர:' என்று படிக்கிறுன். அப்படியிருக்க, இந்த மந்திரம் ப்₃ரஹ்மருத்₃ரேந்த்₃ரர்கள் மூவரையும் வாசியற நாராயணனின் விபூ₄தியென்று காட்டி விடுகிறதே என்னும் வயிற்றெரிச்சலாலே, சில மஹாநுப₄ாவர்கள் நூற்றெட்டு உபனிஷத்துக்கள் என்னும் சுவடியைக் கற்பிக்கும்போது, அதில் பல புதிய 'உபநிஷத்து'க்களைக் கற்பித்தும், பழைய பல உபனிஷத்துக்களின் பகுதிகளை மனம்போனபடி மாற்றியும், மறைத்தும் எழுதியதுபோலே*, இந்த மந்திரத்திலும் 'ஸ ஹரி:' என்னும் பதங்களைச் சேர்த்தார்கள். ஆயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்த யாமுநாசார்யர் என்னும் ஸ்ரீவைஷ்ணவாசார்யர் தம் ஸ்தோத்ரரத்னத்தில் "ப்₃ரஹ்மா ஶிவ: ஶதமக₂: பரம: ஸ்வராடி₃தி ஏதேऽபி யஸ்ய மஹிமார்ணவ விப்ருஷஸ்தே" என்று இந்த மந்திரத்தை அக்காலததிலிருந்தபடி அநுவாத₃ம் செய்து காட்டியிருக்கிறுர். இனி, வாய்க்குவந்தபடி எவரையும் தூ₃ஷிக்கும் துணிவுள்ள வரஹஸர்சாஸ்திரி யாமுநாசார்யரே இப்படிக் கல்பித்து எழுதினுர் என்றும் சொலலிவிடுவர்! இப்படிச் சொலல இடமில்லாதபடி விசிஷ்டாத்வைதிகளல்லாத இரண்டு வேத₃ப₄ாஷ்யகாரர்களும் 'ஸ ஹரி:' என்னும் பாட₂த்தை ஆதரிக்கவில்லை என்பதைக் காட்டி, சாஸ்திரியை வாயடைக்கச் செய்வோம். கி. பி. 1902ல் மைஸுர் அரசாங்க ஓரியண்டல் லைப்ரரி ஸீரீஸில அச்சிடப்பட்டிருக்கும் தைத்திரீயாரண்யக ப₄ட்டப₄ாஸ்கர ப₄ாஷ்யத்தில், 'ஸ ஹரி:' என்பதில்லாமலே மூலம் அச்சிடப்பட்டு "ஸ ப்₃ரஹ்மேதி த்₃விபத₃ா। ஸ ஏவ ப்₃ரஹ்மா—ஸ ஏவ ஸ்ரஷ்டா, ஸ ஏவ ஶிவ:—ருத்₃ர:, ஸ ஏவ இந்த்₃ர —தே₃வ

---

* விஷ்ணுசித்த விஜயத்தின் முதல் அத்தியாயக் கடைசியில் அநுப₃ந்த₄மாக உள்ள 'உபநிஷத்துக்கள் நூற்றெட்டா' எனனும் கட்டுரையில் இவ்விஷயம் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

ராஜ:'' என்று ப$_4$ாஷ்யமிடப்பட்டிருக்கிறது. கி. பி. 1898ல் பூநா ஆனந்த$_3$ாஶ்ரம முத்$_3$ரணலயத்தில அச்சிடப்பட்டிருக் கும்தைத்திரீயாரண்யக ஸாயண ப$_4$ாஷ்யத்திலும், 'ஸ ஹரி:' என்பதில்லாமலே மூலம் அச்சிடப்பட்டு ''ப்$_3$ரஹ்மா சதுர் முக$_2$:, ஶிவோ கௌ$_3$ரீபதி: இந்த்$_3$ர: ஸ்வர்க்க$_3$ாதி$_4$பதி:'' என்று ப$_4$ாஷ்யமிடப்பட்டிருககிறது. இதிலிருந்து வேத$_3$ ப$_4$ாஷ்யகாரர்கள் காலம் வரையில் ''ஸ ப்$_3$ரஹ்மா ஸ ஶிவ: ஸேந்த்$_3$ர:'' என்றிருந்த பாட$_2$ம் ஐந்நூறு வருஷங்களுக்குள் சாஸ்திரியின் முனேர்களால் (அதாவது விஷ்ணுபாரம் யத்தைப் பொருத அதவைதிகளால்) மாற்றப்பட்டுவிட்டது என்று தெளிவாக விளங்குகிறது. ''ஸ ஹரி: என்பது தங்கள் ஸித்தாந்தத்தையே குலேப்பதால்' என்று சாஸ்திரி எழுதி விட்டதால், 'ஸ ஹரி:' என்பது இல்லேயென்ருகிவிட்ட பின்பு நம் ஸித்$_3$த$_4$ாந்தமே வேத$_3$புருஷன் இசைந்தது என்று அவரே ஒப்புக்கொண்டதாகவுமாயிற்று. சாஸ்திரியின் கையைக்கொண்டே அவருக்கு விபரீதங்களே எழுதிவைக்கும் பரமபுருஷனின் லீலேயை என்னென்றியம்புவோம்! ஆக, ஶாங்கரப$_4$ாஷ்யங்களேயும், வேத$_3$ப$_4$ாஷ்யங்களேயும் பாராமல் தம இஷ்டப்படி வேத$_3$வாக்யங்களே மாற்றியெழுதி. வேதங் களுக்கு அவப் பொருள் உரைப்பவர் இவர்களேயொழிய நாமல்ல என்பதற்கு ஸ்த$_2$ாலீபுலாக ந்யாயத்தாலே (ஒரு பானே சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்னும் ரீதியில) இவர் வாய்திறக்கவொண்ணுத இரண்டிடங்களே எடுத்துக் காட்டினேம். இவரிடம் ப்ரமாணிகத்வம் சிறிதாவது-இருக்கு மாகில், இவ்விரண்டிடங்களில் வேத$_3$பாட$_2$த்தை மாற்றி யெழுதியதற்கும. தாம் ஆதரிக்கவேண்டிய ப$_4$ாஷ்யங்களுக்கு முரணுக அவப்பொருள் உரைத்ததற்கும் உலகறிய மன்னிப்புக் கேட்கவேண்டும. 'நீங்கள் என்ன சொன்னுலும் நாங்கள் அசைந்து கொடுக்கமாட்டோம்' என்று பொருள்பட எழுதுமிவரிடம் அத்தகைய ப்ராமாணிகத்வத்தை நாம் எதிர்பார்க்கமுடியாது.

''அறுவரும் நிருபாதிகமான பரப்பிரும்மத்தின் ஔபாதிகமான அம்சங்கள்'' என்றே கட்டுரையிலும் கேள்வி

பதிலிலும் திருப்பித்திருப்பி எழுதுகிறார். அத்வைத ஸித்₃தா₄ந்தத்தின்படி ஔபாதி₄கமான அம்'ஸங்களிடையே வ்யாவஹாரிக நிலையில் பே₄த₃ம் ஒப்புக்கொள்ளப்படுகிறதே. அப்படி இவ்வறுவரிடையேயும் பே₄த₃ம் உண்டா இல்லையா? என்பது நம் கேள்வி. இக்கேள்விக்கு இவ்வறுவரிடையேயும் பே₄த₃மில்லை, பே₄த₃முண்டென்று கூறும் வாக்யங்களெல்லாம் அர்த்த₂வாத₃ வாக்கியங்களே, கட்டுக்கதைகளே என்பது இவர் பதில். பல்லாயிரக் கணக்கான ஶ்ருதிஸ்ம்ருதி வாக்யங்களையும், ஆதிசங்கரவாக்யங்களையும் கட்டுக்கதையாக்க இவருக்கு அதி₄காரமில்லை என்பது நமது பதில். நடுநிலையாளர் நடுநிலைநின்று முடிவு காண்பார்களாக.

ஆறு கடவுளரும் ஏற்றத்தாழ்வு சிறிதுமற்ற ஸமமான ஸகு₃ணப்₃ரஹ்மங்கள் என்று தம் கட்டுரையிலும், கேள்வி பதிலிலும் அடிக்கடி எழுதுகிறார் சாஸ்திரி. "ஈஶோ தே₃வ ஏக:' முதலான ஶ்ருதிவாக்யங்களையும் தம்முடைய இந்த அப₃த்₃த₄க்கொள்கைக்காகக் கட்டுக்கதையாக்கத் துணிகிறார். உலகில் ப்₃ரஹ்மத்தை ஸகு₃ணமாக ஒப்புக்கொள்ளும எந்த மதத்தினரும் அப்பரம்பொருளை ஒன்றாக ஒப்புக்கொள்ளுகிறார்களேயொழிய இரண்டு பேராகக்கூட ஒப்புக்கொள்வதில்லை. 'ஒருவனே தேவன்' என்று சைவர்களும் கூறுகிறார்கள்; ப்ராசீநாத்₃வைதிகளும் வ்யாவஹாரிக நிலையில் இதை ஏற்றுக்கொண்டிருந்தனர். இருவர் ஸர்வேஶ்வரர்களாக இருந்தால் பரஸ்பரவிரோத₄ம் ஆஜ்ஞாப₄ங்க₃ம் முதலானவை ஏற்பட்டு உலகமே அராஜகமாகிவிடும் என்பது எவர்க்கும் விளங்கும். இதை ஶங்கரரே தெளிவுறக் காட்டி ஸகு₃ணப்₃ரஹ்மமான நாராயணனுக்கு ஸமமானவரோ மேற்பட்டவர்களோ வேறு எவரும் கிடையாது என்று நிலைநாட்டியிருக்கும் ஓரிடத்தைக்காட்டி சாஸ்திரியை வாயைக்கையை அசைக்கமுடியாதபடி செய்வோம். "ந த்வத்ஸமோऽஸ்தி அப்₄யதி₄க: குதோऽந்ய:" [கீ₃தை 11-43] [உனக்கு ஸமமானவர்களே கிடையாது; மேலானவன் வேறு ஒருவன் எப்படி இருக்கமுடியும்?] என்னும் கீ₃தாஶ்லோகத்துக்கு (அர்ஜுன வாக்யத்துக்கு)

பா₄ஷ்யமிடுகையில், "கஸ்மாத் கு₃ருதர: த்வம் இத்யாஹ— ந த்வதஸம:—த்வத்துல்ய: அஸ்தி। நஹி ஈஸ்வரத்₃வயம் ஸம்ப₄வதி₄; அநேகேஸ்வரதவே வ்யவஹாரா நுபபததே:। த்வத் ஸம ஏவ தாவத் அந்ய: ந ஸமப₄வதி. குத ஏவ அந்ய: அப்₄யதி₄க: ஸ்யாத் லோகத்ரயேऽபி ஸர்வஸ்மிந்? அப்ரதிம ப்ரப₄ாவ!—....நிரதிஶயப்ரப₄ாவ! இத்யாதத₂:" [நீ எதனுல் அனைவரைக்காட்டிலும் மேலானவன்? என்னும் கேள்விககு பதிலுரைக்கிருன மேலே—உனக்கு ஸமானமானவனே கிடையாது. இரண்டு ஈஸவரர்கள் இருக்கமுடியாதே! பல ஈஸ்வரர்கள் இருந்தால உலகவ்யவஹாரம் நடக்காதன்ரோ. உனக்கு ஸமானமானவனே வேருெருவன் கிடையாது: உனனைக்காட்டிலும் வேருெருவன் மேலானவனுக மூவுலகிலும் எப்படி இருக்கமுடியும்? அப்ரதி₄மப்ரப₄ாவ!— ........ஒப்பற்ற பெருமையை உடையவனே! என்று பொருள்.] என்று ஈஸ்வரர் இருவர்கூட இருக்கமுடியாது என்பதை மிகத் தெளிவாகக் கூறுகிருர் ஆதி₃ஶங்கரர்; 'கு₃ருதர:' (அனைவரி லும் மேலானவன்) என்னும் தரப்ப்ரத்யயமும், 'பல ஈஸ் வரர்களிருந்தால உலகவ்யவஹாரம் ஒட்டாது' என்று எழுதுவதும், "உனக்கு ஸமமானவனே வேருெருவன் இல் லாதபோது உன்னைக்காட்டிலும் வேருெருவன் மேலான வனுக மூவுலகிலும் எப்படி இருக்கமுடியும்?" என்று அழுததமாகக் கூறுவதும், 'ஒப்பற்ற பெருமையை உடைய வனே!' என்று கடைசிப் பதத்திற்குப் பொருள் எழுது வதும, இவ்விடத்தில் அர்ஜுனனும் ஆதி₃ஶங்கரரும் ஸகு₃ண ப்₃ரஹ்மத்தைப்பற்றிப் பேசுகிருர்களேயொழிய நிர்க்கு₃ண ப்₃ரஹ்மத்தைப்பற்றிப் பேசவில்லை என்பது சிறுவர்க்கும் விளங்கும். ஆக, ஸகு₃ணப்₃ரஹ்மம் ஒன்றுக்கு மேற்பட இருக்கமுடியாது என்பதும், அது நாராயணனையொழிய வேறு எந்த தேவதையுமலல என்பதும் ஆதிசங்கரரின் அசைக்கமுடியாத ஸித்₃த₄ாந்தமாகத் தேறிநின்றது. இப் படி ஓரிடமோ? ஆதி₃ஶங்கரரின் கீ₃தாநாமஸஹஸ்ரப₄ாஷ்யங் களில தொட்ட இடமெல்லாம் இப்படியல்லவோ இருக் கின்றது. மற்றும் இரண்டு இடம் காட்டுகிரோம காண்மின். கீதை (7—17ல) "ஏகப₄க்தி;" என்றவிடத்தை விவரிககை

யில், "ஏகப₄க்திஸ்ச—அந்யஸ்ய ப₄ஜநீயஸ்ய அத₃ர்ஸநாத்" [பக்தி செலுத்தத்தக்கவன் வேறு எவருமே காணப்படாமை யால் ஏகப₄க்தியாகவுமாகிறான்] என்று கண்ணனைத்தவிர வேறு எவரும் ப₄க்திசெலுத்தத்தக்கவரல்லர் என முழங்கு கிறார் ஆதி₃ஸங்கரர். "மயி சாநந்யயோகே₃ந ப₄க்திரவ்யபி₄ சாரிணீ" [கீதை 13—10] என்றவிடத்தில் அவ்யபி₄சார ப₄க்தியை விவரிக்கும்போதும், "மயி ச ஈஸ்வரே அநந்ய யோகே₃ந — அப்ருத₂க்ஸமாதி₄நா—'ந அந்யோ ப₄க₃வதோ வாஸுதே₃வாத் பர: அஸ்தி. அத: ஸ ஏவ ந: க₃தி:' இத் யேவம நிஸ்சிதா அவ்யபி₄சாரிணீ பு₃த்₃தி₄: அநந்யயோக₃:, தேந ப₄ஜநம் ப₄க்தி: ந வ்யபி₄சரணஸீலா அவ்யபி₄சாரிணீ| ஸா ச ஜ்ஞாநம்' [ஈஸ்வரனை என்னிடம், அநந்யயோக₃த் தோடு — அப்ருத₂க்ஸமாதி₄யோடு — 'ப₄க₃வானை வாஸு தே₃வனைக் காட்டிலும் வேறுபட்டவன் எவனும் அவனை விட மேலானவனல்லன்; ஆகையால் அவனே நமக்கு கதியாவான்' என்று உறுதிபூண்டிருக்கையாலே வ்யபி₄சார மற்ற அறிவு அநந்யயோக₃ம் எனப்படுகிறது. அத்துடன் ப₄ஜனம் செய்வதாகிற ப₄க்தி வேறு எவரிடமும் செல்லா திருக்கையையே இயல்வாக உடையதாகையாலே, அவ்யபி₄ சாரிணீ எனப்படுகிறது. அதுவும் ஜ்ஞாநரூபமானது.] என்று இதையே வலியுறுத்துகிறார் ஆதிசங்கரர். 'ந அந்ய: வாஸுதே₃வாத் அஸ்தி' [வாஸுதேவனைக் காட்டிலும் வேறானவன் இல்லை] என்று எழுதினால், இங்கு குறிப்பிடும் வாஸுதே₃வன் நிர்க்கு₃ணப்₃ரஹ்மமே என்று தம் சிஷ்யர்கள் கொண்டுவிடப் போகிறார்களே என்று பயந்து, 'ந அந்ய: வாஸுதே₃வாத் பர: அஸ்தி' [வாஸுதே₃வனைக் காட்டிலும் வேறுபட்டவன் எவனும் அவனைவிட மேலானவனல்லன்] என்று அந்யஸப்₃த₃த்தோடு பரஸப்₃த₃த்தையுமிட்டு, தாம் வாஸுதே₃வாதி₃ ஸப்₃த₃ங்களை ப₄க்தி செலுத்தத்தக்க ஸகு₃ணப்₃ரஹ்மவிஷயமாகவே பிரயோகிப்பது வழக்கம் என்று காட்டி, இவையெல்லாம் 'நிர்க்கு₃ணப்₃ரஹ்மத்தைக் குறிப்பவை' என்னும் சாஸ்திரியின் வாதத்தை அடியறுக் கிறார். 'அறுவரில் எவரிடம் வேண்டுமானாலும் ப₄க்தி

செலுத்தலாம்' என்னும் சாஸ்திரியின் வ்யபி₃சாரப₄க்தி வாதத்தையும் தவிடுபொடியாக்குகிறார். "ஸா ச ஜ்ஞாநம்" என்று ப₄க்தியும் ஜ்ஞாநரூபமானதே என்று காட்டுவதன் மூலம், தம் கட்டுரையில் (பக்கம் 29-30ல) ப₄க்தியை ஜ்ஞாநரூபமானது என்று கூறும் ஸ்ரீராமாநுஜரை அறிவிலி என்று தூற்றும் இவர்களுடைய அறிவின்மையையும் காட்டுகிறார். இவ்விடங்களுக்கு சாஸ்திரி என்ன பதில் கூறமுடியும்? "நீங்கள் எதைக்காட்டினாலும் நாங்கள் அசைய மாட்டோம். ஆதிசங்கரர் விஷ்ணு சிவன், சக்தி, விநாயகன், முருகன், ஸூர்யன் ஆகிய அறுவரையும் ஸகு₃ண ப்₃ரஹ்மமாக ஸ்தாபித்தார் என்றுதான் திருப்பித்திருப்பிக் கூறுவோம்" என்னும் பதிலைத்தான் சாஸ்திரி கூறமுடியும். இத்தகையவருடன் விவாத₃ம் செய்யும் விதி₄ வாய்த்ததே நமக்கு!

ஒருவருடைய தெய்வம் எது என்பதை அவருடைய வாக்குகளைக் கொண்டே நிர்ணயிக்கவேண்டும். ஆதிசங்கரர் தம் பா₄ஷ்யங்களில் த்₃ருஷ்டிவிதி₄க்கு உபமானமெழுதும் போது பலவிடங்களில், "யதா₂ ப்ரதிமாதௌ₃ விஷ்ண்வாதி₃பு₃த்₃தி₄:" "ஸாளக்₃ராமே விஷ்ணுத்₃ருஷ்டி:" என்று எழுதுகிறாரேயொழிய, "லிங்கே₃ ஶிவத்₃ருஷ்டி:" என்றாற்போலே வேறு தேவதையை த்₃ருஷ்டாந்தமாகவும் எடுப்பதில்லை. கீ₃தாபா₄ஷ்யம் (9-22) முதலானவிடங்களில் "பரம் தே₃வம் நாராயணம்' என்றும், பாஞ்சராத்ராதி₄கரணத்தில் "நாராயண: ப்ரஸித்₃த₄: பரமாத்மா ஸர்வாத்மா" என்றும், கீ₃தாபா₄ஷ்யம் (15—3) முதலானவிடங்களில் "வாஸுதே₃வாக்யம் பரப்₃ரஹ்மாபி₄தே₄யபூ₄தம்" என்றும் நாராயணனைப் பரமாத்மா, பரப்₃ரஹ்மம் என்று எழுதுவதுபோலே சிவன் முதலான எந்த தேவதையையும் எழுதுவதில்லை. இதற்கு நேர்மாறாக, ஆதி₃ஶங்கரரின் ப்ரஸ்தா₂நத்ரய பா₄ஷ்யங்களில, ருத்₃ரன், ஆதி₃த்யன், விநாயகன், மாத்ருகா₃ணம் முதலான ஶக்திகள் முதலிய மற்ற தே₃வதைகள் ஸகு₃ணப்₃ரஹ்மத்தால் படைக்கப்பட்டவர்களாகக் கூறப்பட்டிருப்பதையும்.

அவர்களை உபாஸிப்பவர்களுக்கு அழிவுள்ள பலனே கிடைக்கும் என்றும் ஸகு₃ணப்₃ரஹ்மமான கண்ணனை உபாஸிப்பவர்களுக்கே அழிவற்ற ப₂லன் கிடைக்கும் என்றும் கூறியிருப்பதையும் 'ஆதி₃ரங்கரர் ஷண்மதஸ்த₂ாபகரா?' என்னும் நம் கட்டுரையில் பக்கம் 4முதல் 8வரையில் காட்டினேம். இவற்றுக்கெல்லாம் சாஸ்திரி சரியானபடி பதில் கூருமல். 'நிர்க்கு₃ண ப்₃ரஹ்மமாவது தவிர மற்றவையெல்லாம் அழியும் ப₂லன்களே' என்பதே ஆதிசங்கரஸித்₃த₄ாந்தம்' என்று பொதுவாகக் கூறி மழுப்புகிருர். இவ்விடத்தில் ஒரு முக்கியமான விஷயத்தை நடுநிலையாளர் கவனிக்க வேண்டும். "மற்ற தே₃வதைகளை உபாஸிப்பவர்கள் மறுபடியும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வருவார்கள்; ஸகு₃ண ப்ரஹ்மமான நாராயணனை உபாஸிப்பவர்கள் அப்படித் திரும்பிவருவதில்லை; விஷ்ணுவின் பரமபதத்தில் ஸகு₃ண மோக்ஷத்தை நீண்டகாலம் அநுப₄வித்துவிட்டு, பிறகு விஷ்ணுவோடுகூட நிர்க்கு₃ணமுக்தியை அடைகிருர்கள். ஆகையால் விஷ்ணுவின் பரமபத₃ப்ராப்தி அழிவற்ற மோக்ஷப்ராப்தியேயாகும்" என்று சங்கரர் பலவிடங்களில் காட்டுகிருர். "அத்தகைய ஸகு₃ணமோக்ஷத்தை அருளும் பெருமையும், மற்ற எல்லாப் பலன்களையும் அளிக்கும் பெருமையும் விஷ்ணு ஒருவனுக்கே உண்டு; மற்றதே₃வதைகளுக்கு அழியும் பலன்களைக் கொடுக்கக்கூடிய சக்தியே உண்டு" எனறும் பலவிடங்களில் கே₄ாஷிக்கிருர். முன் காட்டிய இடங்கள் நிற்க, மேலும் பலவிடங்களைக் காட்டுகிருேம் இங்கு.

கீதை (4—12)ல் "ஸர்வப₂லப்ரத₃ாந ஸமர்த்தே₂ ச த்வயி ஸதி" என்றும், (கீதை 4—11ல்) "யே தத்ப₂லார்த்தி₂நோ முமுக்ஷவஶ்ச தாந் ஜ்ஞாநப்ரத₃ாநேந. யே ஜ்ஞாநிந: ஸந்யாஸிந: முமுக்ஷவஶ்ச தாந் மோக்ஷப்ரத₃ாநேந. தத₂ா ஆர்த்தாந் ஆர்த்திஹரணேந இத்யேவம் .....ப₄ஜாமி இத்யர்த்த₂:" என்றும் மோக்ஷமுள்ளிட்ட எல்லாப்பலன்களையும் அளிக்க வல்லவன் கண்ணனே என்று காட்டுகிருர். ப₂லப்ரத₃ாநம் நிர்க்கு₃ணப்₃ரஹ்மத்திஞல் செய்யமுடியாதாகையாலே, இங்கு

மோக்ஷபலப்ரதாதாவாகக் குறிக்கப்பட்டவனையே அவர் ஸகுணப்ப்ரஹ்மமாகக் கருதுகிறார் என்பது தெளிவு. கீதை (6—47) (7—23) (9—23, 25) ஆகியவற்றின் பாஷ்யத்தில் மற்ற தெய்வங்கள் இப்படி அநந்தபலனை அளிக்கமுடியாது, அற்பபலனையே அளிக்கமுடியும் என்று முழங்குகையாலே. அவற்றை அவர் ஸகுணப்ப்ரஹ்மமாகக் கருதவில்லை என்பதும் தெளிவு. அப்படியிருக்க ஆறு கடவுளரும் ஸமமானவரே என்று வாய் திறக்க வழியேது? நாராயணனைத் தவிர வேறு எந்த கடவுளையும் எடுத்து அவர் மோக்ஷமளிக்கவல்லவனாகத் தம் பாஷ்யங்களில் ஓரிடத்திற்கூட எழுதியதில்லையே!

ஆதிஶங்கரர் நிர்க்குணமோக்ஷம் ஸகுணமோக்ஷம் என இரண்டாக மோக்ஷத்தைப் பிரித்திருப்பதை மறைக்கப் பார்க்கிறார் சாஸ்திரி. கார்யாதிகரணபாஷ்யத்தில் ஸகுண ப்ரஹ்மத்தை அடைந்தவர்கள் அந்த ப்ரஹ்மத்தோடுகூட நிர்க்குணமுக்தியை அடைகிறார்கள் என்று கூறியிருக்கிறார். ஆகையால் ஸகுணப்ரஹ்மத்தின உலகை அடைவதும் புநராவ்ருத்தியற்றது; நிர்க்குணமோக்ஷதுல்யமே என்பது அவர் கருத்து. ப்ரஹ்மலோகம் தொடங்கி அதற்குக் கீழுள்ள எல்லா உலகங்களும் புநராவ்ருத்தி (திரும்பி வருதல்) உள்ளவை என அவர் முழங்கியிருக்கையாலே, ப்ரஹ்மா வின் உலகையும் பிரமனுக்குக் கீழுள்ள சிவன் முதலிய தெய்வங்களின் உலகையும் அவர் ஸகுணப்ரஹ்மலோக மாகக் கருதியிருக்கமுடியாதென்பது தெளிவு. பிரமனை யும் படைத்த விஷ்ணுவின் பரமபதத்தையே அவர் ஸகுணப்ப்ரஹ்மஸ்தாநமாகக் கருதியிருக்கிறார் என்பது அவருடைய பாஷ்யங்களில் பலவிடங்களில் தெளிவாகிறது. சிலவிடங்களைக் காட்டுவோம். கடோபநிஷத்தில் "தத் விஷ்ணோ: பரமம் பதம்" [3—9] என்னும் மந்திரத்தை விவரிக்கும்போது, தத் விஷ்ணோ:—வ்யாபநஶீலஸ்ய ப்ரஹ்மண: பரமாத்மநோ வாஸுதேவாக்யஸ்ய. பரமம—உத்க்ருஷ்டம், பதம்—ஸ்தாநம்" என்று பாஷ்யமிடுகிறார். இவ்விடத்தில் 'விஷ்ணோ:' என்பதற்கு 'வாஸுதேவன்

என்னும் பெயரையுடைய பரமாத்மாவுக்கு என்று பாஷ்ய மிடுகையாலும், பத₃ஶப்₃த₃த்திற்கு ஸ்வரூபம் என்று பொருளுரைக்காமல் 'ஸ்தா₂நம்' என்று பொருளுரைக்கை யாலும். அவர் ஸகு₃ணப்₃ரஹ்மலோகத்தை அடைவதையே இங்கு கருதுகிறார் என்பதும். அந்த ஸகு₃ணப்₃ரஹ்மம் வாஸுதேவனே என்பதே அவருடைய அசைக்கமுடியாத கருத்து என்பதும் தெளிவாக விளங்குகிறது. பரமபத₃ம்' 'பத₃ம்' 'ஶாஶ்வதஸ்தா₂நம்' என்று வருமிடங்களிலெல்லாம் அவர் 'விஷ்ணுவின் பரமபத₃ம்' என்று பாஷ்யமிடுகிறாரே யொழிய. சிவனின் பரமபத₃ம் என்றோ கைலாசம் என்றோ. மற்றொரு தேவதையின உலகம் என்றோ எங்குமே எழுது வதில்லை. சிலவிடங்களைப் பாருங்கள். "பத₃ம் க₃ச்ச₂ந்த்ய நாமயம்" [கீதை 2-51] என்றவிடத்தின் பாஷ்யததில், "பத₃ம பரமம் விஷ்ணோ: மோக்ஷாக்₂யம் க₃ச்ச₂ந்தி" என்று எழுதுகிறார். "ஸ்தா₂நம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்" [கீ₃தை 18-62] என்றவிடத்திற்கு உரையிடும்போது. "ஸ்தா₂நம் ச மம விஷ்ணோ: பரமம் பத₃ம் ப்ராப்ஸ்யஸி. ஶாஶ்வதம் நிதயம்" என்று எழுதுகிறார். "ஶாஶ்வதம் பத₃மவ்யயம்" [18—56] என்றவிடத்திற்கு உரையிடும்போது. "ஶாஶ்வதம் நித்யம் வைஷ்ணவம் பத₃ம் அவ்யயம்" என்று எழுது கிறார். விஷ்ணுவின் பரமபத₃த்தை மோக்ஷமென்றும் நித்யம் என்றும் இவ்விடங்களில் எழுதியிருப்பது குறிக் கொள்ளத்தக்கது. "தத: பத₃ம் தத் பரிமார்கி₃தவ்யம யஸ்மிந் க₃தா ந நிவர்ததந்தி பூ₄ய:" [கீதை15-4] என்றவிடத்திற்கு பாஷ்யமிடுமபோது. தத:-பஶ்சாத். யத் பத₃ம்—வைஷ்ண வம், தத்பரிமார்கி₃தவ்யம்; பரிமார்க₃ணம்—அந்வேஷணம்; ஜ்ஞாதவ்யமித்யர்த்த₂: யஸ்மிந்-பதே₃ க₃தா:—ப்ரவிஷ்டா:. ந நிவர்த்தந்தி—ந ஆவர்த்தந்தே பூ₄ய:—புந: ஸம்ஸாராய" என்று "விஷ்ணுவின பரமபத₃த்தில் நுழைந்தவர்கள் மறுபடி ஸம்ஸாரத்திற்குத் திரும்பமாட்டார்கள்' என மிகத்தெளி வாக முழங்குகிறார். 'நுழைவது' திரும்புவதில்லை' முதலா னவை ஸகு₃ணப்₃ரஹ்ம ப்ராப்திககு ஒட்டுமேயொழிய நிர்க் கு₃ணப்ராப்திக்கு ஒட்டாது என்பது குறிககொள்ளததக்கது. "ந தத்₃பா₄ஸயதே ஸூர்ய:" [கீதை15-6] என்றவிடத்தின்

பா₄ஷ்யத்தில், "யத் தா₄ம வைஷ்ணவம் பத₃ம் க₃த்வா—ப்ராபய ந நிவர்த்தந்தே. யசச ஸூர்யாதி₃: ந பா₄ஸயதே தத் தா₄ம பரமம் விஷ்ணோ: மம பத₃ம். யத் க₃த்வா ந நிவர்த்தந்தே இத்யுகதம்' என்று விஷ்ணுவின் பரமபதத்தை (இவ்வுலகத்தை ஒளிவிடச்செய்யும்) ஸூர்யன் முதலானோர் ஒளிவிடச் செய்யமுடியாது என்று எழுதுவதன்மூலம் அது ஒரு லோகவிஶேஷமே என்றும், அதை ஸூர்யன் முதலானோர் (ப்ராக்ருத லோகங்களைப்போல) ஒளிவிடச் செய்யக்கூட முடியாது என்றும் எழுதுகிறார் ஆதி₃ஶங்கரர். இப்படியிருக்கும்போது ஸூர்யனையும் விஷ்ணுவையும் ஒன்றாக்கும் சாஸ்திரியின் ப்ரதிபை₄யை என்னென்பது! ஸூர்யனைப் பரம்பொருளாககொண்ட ஒரு மதத்தை ஆதி₃ஶங்கரர் நினைத்துக்கூடப் பார்த்திருக்கமுடியாது என்பதற்கு இவ்விடம் ஒன்று போதும். ஆக, ஆதிஶங்கரர் விஷ்ணு ஒருவனைத் தவிர மற்ற எந்த தே₃வதையையும் ஸகு₃ணப்₃ரஹ்மமாகக் கருதியவரல்லாமையாலே, ஆதி₃ஶங்கரர் ஷண்மதஸ்தா₂பநம் செய்தார் என்னும் நவீநாத்₃வைதிகளின் வார்த்தை—மலடி மகன் ஆகாயத்தாமரையைச் சூடிக்கொண்டு முயற்கொம்பைப் பறிக்கச்சென்றான் என்னும் வார்த்தையைப்போலே பொருத்தமற்றது என்று முடிந்தது. ஆகையாலே 'அஜாதஶிஶு நாமகரணம' [பிறவாத பிள்ளைக்குப் பெயரிடுவது] என்று சாஸ்திரி எடுக்கும் ந்யாயம் ஷண்மதங்களைக் கனவிலும் கருதாத ஆதி₃ஶங்கரருக்கு ஷண்மதஸ்தா₂பகர் என்று பெயர்வைக்கும் இவர்களுக்கே மிகப்பொருந்தும் என்றும் தேறிற்று. [சாஸ்திரிக்கே மிகப்பொருத்தமான ந்யாயங்களை எம்பெருமான் அவர் கையைக்கொண்டே எழுதிவைத்திருக்கிறான் என்பதை மேலேயும் காட்டுவோம்.]

பராஶரப₄ட்டர் கண்டித்திருக்கும் ஶங்கரஸஹஸ்ரநாம பா₄ஷ்யமும், ராமாநுஜர் க₂ண்டித்திருக்கும் ஶங்கரபா₄ஷ்யங்களும் நமக்கு எப்படி ப்ரமாணமாகும் என்பது தனக்கு விளங்கவில்லை என்று எழுதுகிறார் சாஸ்திரி. ஸ்ரீபராசரப₄ட்டரும் ஸ்ரீராமாநுஜரும் ஶங்கரரின் மாயாவாத₃த்தையும், நிர்க்குணப்₃ரஹ்மவாதத்தையும் கண்டித்திருக்கின்ற

னரேயொழிய 'ஸகு₃ணப்₃ரஹ்மம் நாராயணனே' என்று ஶங்கரர் கூறியிருப்பதைக் கண்டிக்கவில்லை. ஆகையால். ஶாங்கரபா₄ஷ்யங்கள் வேத₃த்தை ஒட்டியிருக்கும் இவ்வம்ஶத்தில் ப்ரமாணமாகக் குறையில்லை. ஶாங்கரபா₄ஷ்யங்களை ஶததூ₃ஷணி முதலானவற்றில் பலபடியாகக் கண்டித்திருக்கும் வேதா₃ந்ததே₃ஶிகர், கீ₃தை (18—66) தாத்பர்யசந்த்₃ரிகையில், ஶங்கரர் முதலான நூற்றுக்கணக்கான கீ₃தாபா₄ஷ்யகாரர்கள் 'நாராயணனே பரதத்வம்' என்று கீ₃தாஸாரார்த₂மாக முழங்கியிருப்பது அனைவராலும் ஆசரிக்கத் தக்கது என்று தெளிவாக எழுதியிருக்கிறார். இககால அத்வைதிகள் இவ்வுண்மையை மறைக்க முயல்வதாலேயே நாம் இவ்விவாதத்தில் இறங்கினோம். "ஒருவரை ப்ரமாணமாக ஏற்றுக்கொண்டால் அவர் சொல்லுவது எல்லாமே ஏற்றுக்கொள்ளத்தக்கதா? அல்லது சிலவைதானா" என்னும் சாஸ்திரியின் பதினேழாவது கேள்விக்கு, 'எதிரி வெட்டிய குளத்திலும் சேற்றைத்தள்ளி நீரைக்கொள்ளலாம்' என்று ஸத்₃ருஷ்டாந்தமாக நாம் விரிவாக பதில் எழுதியிருந்தும் ஶாங்கரபா₄ஷ்யங்கள் நமக்கு எப்படி ப்ரமாணமாகமுடியும் என்பது தமக்கு விளங்கவில்லை என்று சாஸ்திரி எழுதுவது, அவர் நமது க்ருதிகளை சரியாகப் படிக்காமலே எழுதுகிறார் என்பதை எடுத்துககாட்டுகிறது. இன்னாருடைய வார்த்தை என்பதினால் மாத்திரம் எதுவும் ப்ரமாணமாகவோ அப்ரமாணமாகவோ ஆகிவிடாது என்பதையும். ஸம்ப்ரதியந்ந ப்ரமாணங்களை ஒட்டியிருப்பது யார் வார்த்தையாயிருந்தாலும் ப்ரமாணமாகும் என்பதையும் சாஸ்திரி உணர்வாராக. "யுக்தியுக்தம் வசோ க்₃ராஹ்யம் பா₃லாத₃பி ஶுகாத₃பி" என்று கேட்டதில்லையா?

ஆக, நாராயணன்ஒருவனே ஶங்கரரின் ஸகு₃ணப்₃ரஹ்மமாகையாலே அவர் ஷண்மதஸ்தா₂பநம் செய்திருக்க முடியாது என்று கல்வெட்டாகத் தேறிற்று.

**இரண்டாம் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான**

**மூன்றும் அத்தியாயம் நிறைவுபெற்றது.**

## நான்காம் அத்தியாயம்

# மூன்றும் கேள்விக்கு பதிலின் விமர்சம்

### நமது மூன்றும் கேள்வி

ஆதிசங்கரர் தாமியற்றிய துதிநூல்களில் முற்கூறிய ஆறு தேவதைகளையும் ஸகுணப்ரஹ்மமாகப் பாடியிருக்கையாலே, அவ்வாறுவரையும் ஸகுண ப்ரஹ்மமாகவே ஒப்புக்கொள்ளுகிறோம் என்பீர்களாகில், அத்துதி நூல்கள் ஆதிசங்கரருக்குப் பல நூற்றுண்டுகள் வரையில் எவராலும் கையாளப்படாததிலிருந்து அவை பிற்காலத்தில் இயற்றப்பெற்றவை என விளங்கவில்லையா ? அவற்றில் சில அவரியற்றியவையாகவே தேறினும், ஸ்துதிபரமான அவற்றைக்கொண்டு தத்துவத்தை நிச்சயிப்பதைக் காட்டிலும், தத்துவத்தை நிஷ்கர்ஷிக்கவென்றே ஏற்பட்ட ப்ரஸ்த₂ானத்ரய ப₄ாஷ்யத்திலிருந்தே தத்துவத்தை நிஷ்கர்ஷிப்பது நியாயமல்லவா ?

*நமது மூன்றும் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்*

விஷ்ணு முதலான ஆறு தெய்வங்களையும் ஸகுணxப்ரும்மமாக சங்கரர் பாடியுள்ள நூல்கள் பல நூற்றுண்டுகள் வரையில் எவராலும் கையாளப்படவில்லை. பிற்காலத்தில் இயற்றப்பெற்றவை என்ற இவ்விஷயம் தங்களுக்குத்தான் எப்படியோ அபூர்வமாக விளங்கியிருக்கிறதேயொழிய, எங்களுக்கு இன்னும் தக்க காரணங்களுடன் கொஞ்சமும் விளங்கவே இல்லை என்பதை தாராளமாக நாங்கள் 'ஒப்புக்கொள்கிறோம். அன்றியும் துதிபரமாக சங்கரர் இயற்றிய அந்நூல்களைக் கொண்டோ ப்ரஸ்தானத்ரய பாஷ்யங்களைமட்டும் கொண்டோ நாங்கள் யாதொரு தத்துவத்தையும் xநிஷ்கரிக்கவில்லை. அப்படி நிஷ்கர்ஷிப்பதும் நியாயமாகாது. சுருதிகள் கீதை xப்ரும்ம சூத்திரங்கள் இவற்றைக்கொண்டேதான் தத்துவத்தை நாங்கள் xநிஷ்கரிக்கிறோம். இதுவே நியாயமானதாகும். சங்கரரின் கொள்கையும் இதுவே என்பதையும் அவரது பாஷ்யங்களே கோஷிக்கின்றன. அவற்றை முழுமையும் படித்தால்தான் இது விளங்கும்.

---

x *'ப்ரும்மம்', 'நிஷ்கரிக்க' முதலானவை சாஸ்திரி எழுதியிருக்கும் அபப்₃த₃ங்கள். அச்சுப்பிழையல்ல.*

## பதிலின் விமர்ஶம்

''ஆதிசங்கரர் பேரில் உள்ள துதிநூல்கள் அவருக்குப் பிறகு பல நூற்றுண்டுகள் வரையில் எவராலும் கையாளப் படவில்லை'' என்பது ஹேது; 'அவை பிற்காலத்தில் இயற்றப் பெற்றவை' என்பது ஸாத்₄யம். முற்கூறிய ஹேதுவைக் கொண்டு இந்த ஸாத்₄யம் நம்மால் அநுமானப்ரமாணத்தால் ஸாதி₄க்கப்படுகிறது. ப₄ாஷ்யப₄ாவஜ்ஞரென்னும் விருதின் மூலம் தம்மை 'ஶாஸ்த்ரஜ்ஞராகப் பறைசசாற்றிக்கொள்ளும் சாஸ்திரி, இவ்வநுமானத்தைத் தகர்க்கவேண்டுமாகில் இந்த ஹேதுவுக்கு ஶாஸ்த்ரஜ்ஞர்கள் ஒப்புக்கொள்ளக்கூடிய தோ₃ஷம் எதையாவது கூறவேண்டும்; உதா₃ஹரணமாக; ஆதி₃ஶங்கரருடைய சிஷ்யப்ரஶிஷ்யர்களும், அவரைக்கண்டிக்கும் த்₃வைதவிஶிஷ்டாத்₃வைத ஆசார்யர்களும் அவர் காலத்திற்கு ஒரு சில நூற்றுண்டுகளுக்குள் ஏராளமான கிரந்தங்கள் எழுதி, அவற்றில் அவருடைய நூல்களிலிருந்து வாக்யங்களைக் காட்டியிருக்கிறார்கள்; அவர்களில் இன்னார் இன்னார், இன்ன இன்ன நூல்களில் ஆதிசங்கரர் சிவன், சக்தி, விநாயகன், முருகன், ஸூர்யன் ஆகியவர்களைப் பரம் பொருளாகப்பாடியிருக்கும் துதிநூல்களை எடுத்திருக்கிறார் கள் என்று சாஸ்திரி காட்டினால் நம்முடைய அநுமானம் தகர்க்கப்படும். இப்படி எவரும் அத்துதி நூல்களைப் பதினைந்தாம் நூற்றுண்டு முடிய எடுக்கவில்லையாகையாலே சாஸ்திரியால் அவற்றைக் காட்டமுடியவில்லை. இப்படி இவ் விஷயத்தில் தாம் படுதோல்வியடைந்துவிட்டதை மறைப்ப தற்காக, ''இவ்விஷயம் தங்களுக்குத்தான் எப்படியோ அபூர்வமாக விளங்கியிருக்கிறதேயொழிய எங்களுக்கு இன்னும் தக்க காரணங்களுடன் கொஞ்சமும் விளங்கவே இல்லை என்பதை தாராளமாக நாங்கள் ஒப்புக்கொள்ளு கிறோம்'' என்னும் ஶப்₃த₃ஜாலங்களையிட்டு மழுப்புகிறார். நமது முற்கூறிய அநுமானத்தைத் தகர்க்க இவரால் இயல வில்லையாகையால்,''இவ்விஷயத்தில் எம்முடைய தோல்வியை தாராளமாக ஒப்புக்கொள்ளுகிறோம்'' என்றே இந்த ஶப்₃த₃ ஜாலத்திற்குப் பொருளாகமுடியும்.

ஒருவர் பேரில் வழங்கும் ஒரு நூல் அவருக்குப் பல நூற்றாண்டுகள் வரையில் எவராலும் கையாளப்படவில்லையெனில் அது அவர் இயற்றியதல்ல, அவருக்குப் பிற்காலத்தில் எவராலோ இயற்றப்பெற்று அவர்பேரில் சுமத்தப்பட்டது—என்பது அற்ப அறிவு படைத்தவர்களுக்குக்கூட விளங்கும். சாஸ்திரிக்கு இது விளங்கவில்லை என்பதிலிருந்தே அபி$_4$நிவேஶ வஶீக்ருதமான நெஞ்சுடையவராயிருக்கிறார் அவர் என்பது தெளிவாக விளங்குகிறது. இத்தகைய அபி$_4$நிவேஶம் நடுநிலை நிற்கும் ஆராய்ச்சியாளர்களுக்கு இருக்கக்கூடாது. சில உதாரணங்கள் கொடுக்கிறோம். எங்களுடைய பூர்வாசார்யரான ஸ்ரீயாமுநாசார்யர் என்னும் திருநாமமுடைய ஆளவந்தாரின் நூல்களான ஸித்தித்ரயம், ஸ்தோத்ரரத்நம், கீதார்த்த$_2$ஸங்க்$_3$ரஹம் முதலானவற்றை அவருக்கு ஸமீபகாலத்திலிருந்த ஸ்ரீராமாநுஜர் முதலான பற்பல ஆசார்யர்கள் கையாண்டிருக்கிறார்கள்; ஸ்தோத்ரரத்னம், சது:ஶ்லோகீ என்னும் ஸ்தோத்ரங்களுக்குப் பதின்மூன்று பதினாலாம் நூற்றாண்டுகளிலிருந்த வ்யாக்$_2$யாந சக்ரவர்த்தியான பெரியவாச்சான் பிள்ளையும், ஸ்ரீவேதா$_3$ந்ததே$_3$ஶிகரும் வியாக்கியானமிட்டிருக்கிறார்கள். கீ$_3$தார்த்த$_2$ஸங்க்$_3$ரஹத்திற்கு ஸ்ரீவேதா$_3$ந்த தே$_3$ஶிகர் பா$_4$ஷ்யமிட்டிருக்கிறார். ஸ்ரீராமாநுஜருடைய ஸ்ரீபா$_4$ஷ்யம், கீ$_3$தாபா$_4$ஷ்யம், வேதா$_3$ர்த்த$_2$ஸங்க்$_3$ரஹம், க$_3$த்யத்ரயம் முதலான கிரந்தங்களை அவருக்கு மிக ஸமீப காலத்திலிருந்த பற்பல பூர்வாசார்யர்கள் தம் நூல்களில் கையாண்டிருக்கிறார்கள்; அவற்றுக்கு வ்யாக்$_2$யானங்கள் இட்டிருக்கிறார்கள். இப்படிக் கையாளப்படாத கிரந்தங்கள் எதையும் நாம் ஸ்ரீயாமுநாசார்யர், ஸ்ரீராமாநுஜர் முதலான ஆசார்யர்கள் எழுதியதாக ஒப்புக்கொள்வதில்லை. குலசேகராழ்வார் ஆழ்வார்கள் பதின்மரில் ஒருவர். அவர் அருளிய பெருமாள்திருமொழி என்னும் நூறு பாசுரங்கள் அடங்கிய தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$ம் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்கள் அனைவராலும் தம் நூல்களில் கையாளப்பட்டுள்ளது. பெரியவாச்சான்பிள்ளை இதற்கு வியாக்கியானமிட்டிருக்கிறார். முகுந்தமாலை என்னும் ஆஶ்சர்யமான வடமொழித் துதிநூல் 'குலஶேக$_2$ரர் இயற்றியது' என்னும் முத்$_3$ரை

யுடன் கூடியதாய் விளங்குகிறது. ஆராய்ச்சியற்ற பலர் இத்துதி குலசேகராழ்வார் இயற்றியது என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அச்சிட்டுமிருக்கிறார்கள். "இந்நூல் பதினைந்தாம் நூற்றாண்டில் பல நூல்களியற்றிய மணவாள மாமுனிகள் என்னும் பூர்வாசார்யரைத் தவிர முற்பட்ட பூர்வர்கள் எவராலும் கையாளப்படவில்லை, மாமுனிகளும் இதை குலசேக₂ராழ்வார் அருளியதாகக் குறிப்பிடவில்லை" என்னும் காரணத்தைக்கொண்டு, இது குலசேக₂ராழ்வார் அருளியதன்று. பதினைலாம் நூற்றாண்டில் வாழ்ந்த குலசேக₂ரர் என்னும் கேரள அரசரால் இயற்றப்பட்டது என்று ஆராய்ச்சிமிக்க அறிவாளிகள் நிர்ணயிக்கிறார்கள். 'மிகச்சிறந்த வடமொழித துதிநூல் ஒன்று ஆழ்வார் பெயரில் இருந்தால் ஆழ்வாருக்குச் சிறப்பு' என்னும் அபி₄நிவேசமிருப்பவர்கள் இவ்வாராய்ச்சியை ஒப்புக் கொள்ளமாட்டார்கள். இத்தகைய நடுநிலைநிற்கும் ஆராய்ச்சிகள் பலவற்றைச் செய்து பல விஷயங்களை நாம் நிலைநாட்டியிருக்கிறோம். ஐந்நூறு வருடங்களுக்கு முன் எவராலும் கையாளப்படாத உபநிஷத்துக்களும், தே₃வீப₄ாக₃வதம் போன்ற நூல்களும் நவீனகற்பனையென்று நிலைநாட்டியிருக்கிறோம். நஞ்சீயர் என்னும் ஸ்ரீ வைஷ்ணவ பூர்வாசார்யரின் பெயரில் அச்சிடப்பட்டிருக்கும் ஸ்ரீ ஸூக்த ப₄ாஷ்யமும், நடாதூரம்மாள் என்னும் வாத்ஸ்யவரத₃ாசார்யர் பெயரில் அச்சிடப்பட்டிருக்கும் ப்ரபந்நபாரிஜாதம் என்னும் நூலும், அவ்வாசார்யர்களுடைய மற்ற நூல்களைப்போலே ஸ்ரீ வேதா₃ந்ததே₃சிகர், மாமுனிகள் முதலானோரால் கையாளப்படாததால் நவீனகற்பனை என்று நிலைநாட்டியிருக்கிறோம். இதுபோலவே ஶங்கரமடங்களில் பீட₂ாதி₄பதிகளாயிருந்த ஒவ்வொருவரால் ஐந்நூறு வருடங்களுக்குள் 'ஶங்கரரால் இயற்றப்பட்டது' என்னும் முத்₃ரையுடன் இயற்றப்பட்டிருக்கும் துதிநூல்கள்—ஆதி₃ ஶங்கரரை ஷண்மத ஸ்த₂ாபகராக்கவேண்டும் என்னும் அபி₄நிவேசமுடைய தற்கால அத்₃வைதிகளால ஆதிசங்கரர் பெயரில் சுமத்தப்பட்டுவிட்டன என்று இவ்வாராய்ச்சியில் தக்க காரணங்களைக் காட்டி நிரூபிக்கிறோம். இவ்விஷயங்

களில் அபி₄நிவேஶம் கூடாது. இருட்டு கண்ணை மறைக்கும்; அபி₄நிவேஶம் கருத்தையே மறைக்கும். "அபி₄நிவேஶ வஶீக்ருதசேதஸாம் ப₃ஹுஶவிதா₃ம்பி ஸம்ப₄வதி ப்₄ரம:" [அபி₄நிவேஶத்தின் வசப்பட்ட நெஞ்சையுடைய அறிவாளி களுக்கும் மயக்கம் ஏற்படுகிறது.] என்று ஸ்ரீயாமுநா சார்யரும், "விவேகதி₄யமேகதோऽப்யபி₄நிவேஶலேஶோ ஹரேத்" [ஒரு விஷயத்தில அபி₄நிவேஶம சிறிது இருந் தாலும், பகுத்தறிவுள்ள அறிவாளியையும் அது மயக்கி விடும்] என்று ஸ்ரீவத்ஸாங்கமிஶ்ரரும் (ஆழ்வானும்) அருளிய ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்தி₄கக்தக்கவை. ஆக, ஶாஸ்திரியின் பதிலின் முற்பகுதி அபி₄மானத்தால எழுதப் பட்டது என்று நிருபிககபபட்டது.

அவருடைய பதிலின பிற்பகுதி நமது கேள்வியைப் புரிந்து கொள்ளாமலே எழுதப்பட்டது என நிரூபிப்போம் இனி. "ஆதிஶங்கரரின பெயரில் வழங்கும் ஶிவாதி₃பரமான துதிநூல்களில் சில அவர் இயற்றியவையே என்று தேறி னாலும், துதிபரமான அவற்றைக்கொண்டு அவருக்கு அபி₄மதமான ஸகு₃ணப்₃ரஹ்ம தத்துவத்தை நிஷ்கர்ஷிக்கக் கூடாது; ஒருவரைத் துதிப்பதற்காகவே எழுந்த நூல் களில் — அவர்களுக்கு உள்ளபெருமையோடு இல்லாத பெருமையையும் ஏறிட்டுச் சொல்லுவது வழக்கம். ஆகை யால, ஸகு₃ணம் நிர்க்கு₃ணம் என்று இருவகைப்பட்ட ப்₃ரஹ்ம தத்துவத்தை நிஷ்கர்ஷிக்கவென்றே ஏற்பட்ட அவருடைய பா₄ஷ்யங்களைக்கொண்டே அவருக்கு அபி₄மத மான ஸகு₃ணப்₃ரஹ்ம தத்துவத்தை முடிவுகட்ட வேண்டும்"—என்பது நமது கேள்வியின் தெளிவான கருத்து. இதைப் புரிந்து கொள்ளாமல் "அவருடைய துதிநூல்களைக் கொண்டோ, பா₄ஷ்யங்களைக் கொண்டோ நாங்கள் தத்துவத்தை நிஷ்கர்ஷிககவில்லை. ப்ரஸ்தா₂ந த்ரயுங்களைக் கொண்டே முடிவுகட்டுகிறோம்" என்று பொருள்பட எழுதுகிறார் ஶாஸ்திரி. ப்ரஸ்தா₂நத்ரயங்களைக் கொண்டு ஶங்கரருக்கு அபி₄மதமான ஸகு₃ணப்₃ரஹ்ம தத்துவத்தை நிஷ்கர்ஷிக்க முடியாது என்னும் சிறு விஷ

*யத்தைக்கூடப் புரிந்துகொள்ளாமல் பதில் எழுதும் இவருடைய அறிவுத் திறமையை என்னென்பது! ப்ரஸ்த₂ாந த்ரயங்களிலும் விளங்கும் ஸகு₃ணப்₃ரஹ்ம தத்துவம் நாராயணனே என்றன்றோ அவருடைய ப்ரஸ்த₂ாநத்ரய ப₄ாஷ்யங்கள் கோ₄ஷிக்கின்றன. இதை நாம எடுத்துக் காட்டியும் காண மனமில்லாமல், "அவற்றை முழுமையும் படித்தால்தான் இது விளங்கும்" என்று க₃ம்பீ₄ரமாக நமக்கு உபதே₃ஶிக்கும் இவருடைய நடுநிலைமையினை மையை நடுநிலையாளர்கள் நிஷ்கர்ஷிக்கவேண்டும். ஆக, மூன்றாவது கேள்விக்கு சாஸ்திரியின் பதில் சிறிதும் ஸாரமற்றது என்று முடிவுகட்டப்பட்டதாயிற்று.*

மூன்றும் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான
நான்காம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## ஐந்தாம் அத்தியாயம்

# நான்காம் கேள்விக்கு பதிலின் விமர்சம்

### நமது நான்காம் கேள்வி

**ஶங்கரவிஜயம் முதலான சரித்திர நூல்கள் ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்ததாக எழுதியிருப்பதால் ஆறு தேவதைகளையும் ஸகுணப்ரஹ்மமாகவே கொள்ளுகிறோம் என்பீர்களாகில், ஸ்ரீகண்டஸமாலோசனத்திலும், 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா' என்னும் நம் நூலிலும் நிரூபிக்கப் பட்டபடி ஶங்கரவிஜய நூல்களில் பல பொய்கள் பெய்யப் பெற்றிருக்கிறபடியால், அவை நம்பத்தகாதவை என விளங்கவில்லையா?**

*நமது நான்காம் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்*

இரண்டாம் கேள்வியின் பதிலிலேயே இக்கேள்விக்கும் பதிலிருப்பதால் தனியான பதில் தேவையில்லை. ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா என்னும் தங்கள் கேள்வி நூலிலே சங்கரவிஜயங்கள் எல்லாம் பொய்யெனத் தாங்கள் நிருபித்து விட்டாதாகக் கூறியிருப்பவையெல்லாமே பொய்கள் என "சங்கரரும் ஷண்மதமும்" என்ற நமது ஆராய்ச்சி நூலில் நாமும் நிருபித்திருப்பதால் தங்கள்

நூலும் நம்பத்தகாதென்பது விளங்கும். மேலும் சங்கர விஜயங்களையும் மற்ற நூல்களையும் பிரமாணங்களாகக்கொண்டு நாங்கள் சாதிக்கவேண்டிய விஷயமும் இல்லை. தங்கள் கற்பனையில் ஏதேதோ பல விஷயங்கள் யாருக்கும் தோன்ருத வகையில் தோன்றுகின்றன. அதனுலேயே தாங்கள் அமைதியற்று இருப்பதாய் தோன்றுகிறது. தங்களது புதுப்புது கற்பனைகள் எல்லாமே ஆகாஶமண்டப நிர்மாண ந்யாயத்தைத்தான் எங்களுக்கு ஞாபகப்படுத்துகின்றன. ஆனது பற்றியே ஸ்ரீகண்டஸமாலோசனத்தைப் பற்றியும் தற்சமயம் நாம் ஆலோசிக்கவில்லை.

## பதிலின் விமர்ஶம்

*இக்கேள்வி—ஶங்கரவிஜய நூல்கள் பல பொய்களைப் பறைசாற்றுகையாலே நம்பத்தகாதவை என்பது பற்றியது. நமது இரண்டாவது கேள்வியிலும், அதற்கு சாஸ்திரியின் பதிலிலும் ஶங்கரவிஜய ப்ரஸ்தாவமே இல்லை. அப்படியிருக்க, "இரண்டாம் கேள்வியின் பதிலிலேயே இக்கேள்விக்கும் பதிலிருப்பதால் தனியான பதில் தேவையில்லை" என்று ஸ்ரீமத்$_3$க$_3$ம்பீ$_4$ரமாக சாஸ்திரி எழுதுவது அப்பட்டமான பொய்யாயிருக்கிறது. பொய் எழுதுவதையே இயல்வாகக் கொண்ட சாஸ்திரி அக்குணத்தை நம்மேல் ஏறிடுவதைக் கண்டு அறிவாளிகள் மயங்கமாட்டார்கள். சங்கரவிஜய நூல்களில் எத்தனை பொய்கள் பெய்யப்பெற்றிருக்கின்றன என்று ஸ்ரீகண்ட$_2$ஸமாலோசனத்தில் அலசி அலசிக் காட்டப் பெற்றிருக்கிறது. அந்நூலைத் தொட்டாலே தங்களுடைய பற்பல அண்டப் புளுகுகளும், ஆகாஶமண்ட$_3$பநிர்மாணங்களும் பொதுஜனங்களுக்குத் தெளிவாகிவிடும் என்று பயந்தே, "ஸ்ரீகண்டஸமாலோசனத்தைப் பற்றித் தற்சமயம் ஆலோசிக்கவில்லை" என எழுதுகிருர். தம்முடைய ஆகாஶமண்ட$_3$பநிர்மாண சாதுர்யத்தை நம்மேல் ஏறிடுகிருர். புதுப்புது உபநிஷத்துக்களைக் கற்பித்தது, ஸ்வ பரமாசார்யரான ஆதிஶங்கரரின் பேரில் ஏராளமான துதி நூல்களைக் கற்பித்தது, (அவருடைய பா$_4$ஷ்யங்களுக்கு நேர்மாருக) அவர் ஷண்மத ஸ்தா$_2$பநம் செய்தார் என்று கற்பித்தது முதலான எண்ணிறந்த கற்பனைகளைச் செய்வதையே குலப்பண்பாகப் பெற்றிருக்கும் சாஸ்திரி அப்*

*பண்பை நம் மேல் ஏறிடுவது. "பஶ்யதி பரேஷு தோ₃ஷாந் அஸதோऽபி ஜந: ஸதோऽபி நைவ கு₃ணாந்। விபரீதமிதம் ஸ்வஸ்மிந் மஹிமா மோஹாஞ்ஜநஸ்யைஷ:॥" [ஒரு மனிதன் பிறரிடம் இல்லாத தோஷங்களை இருப்பதாகக் காண்கிறான்; இருக்கும் குணங்களைக் காண்பதேயில்லை. தன்னிடமோ வெனில், ஏராளமாக உள்ள தோஷங்களைக் காண்பதே யில்லை; தேடினாலும் காணமுடியாத குணங்களை இருப்ப தாக நினைக்கிறான். இது மோஹம் என்னும் மையை இவன் இட்டுக்கொண்டிருப்பதால் வந்த வினை.] என்னும் ஸுபா₄ ஷித்தை நினைவுபடுத்துகிறது. ஆக, நான்காவது கேள்விக்கு சாஸ்திரியின் பதில் மோஹாஞ்ஜந மயக்கத்தோடு எழுதப் பட்டது என நிரூபிக்கப்பட்டதாயிற்று.*

**நான்காம் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான ஐந்தாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.**

## ஆறாம் அத்தியாயம்

# ஐந்தாம் கேள்விக்கு பதிலின் விமர்சம்

### நமது ஐந்தாம் கேள்வி

**ஆறு தேவதைகளைப் பரமபொருளாகக் கொண்ட ஆறு மதங்களை ஒருவர் எப்படி ஸ்தாபிக்கமுடியும்? அதிலும் புருஷனாகிய சிவனுக்கு ஒரு மதத்தையும், மனைவியாகிய சக்திக்கு ஒரு மதத்தையும், இருபிள்ளைகளுக்கு இரு மதங்களை யும் எப்படி ஸ்தாபிக்க முடியும்? பரம்பொருளுக்கு அடங்கி நடக்கும் ஜீவன் என்று பல வேதவாக்யங்களில் கோஷிக்கப் படும் சூரியனைப் பரம்பொருளாகக் கொண்ட மதத்தை வைதிகர் ஒருவர் ஸ்தாபிக்கமுடியுமா?**

***நமது ஐந்தாம் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்***

ஒரே பரம்பொருளை ஆறு தேவதைகளாகக்கொண்ட ஆறு மதங்களை சங்கரர் ஒருவர் ஸ்தாபித்தாரேயன்றி தாங்கள் கூறி யிருக்கிறபடியல்ல. அன்றியும், ஒரே பரம்பொருள் அவரவர் ருசிக்கேற்றபடி நாமரூபங்களை வைத்து அவரவர்கள் வழிபடுகின்ற பற்பல மதங்களுள் சிலவையே இந்த ஆறு மதங்களும். இவை அநாதிகாலமாக நம் நாட்டில் இருந்துவரும்போது இவற்றை

எவரும் புதிதாக ஸ்தாபிக்கவேண்டிய அவசியமேயில்லை. "பிந்நருசிர்ஹி லோக:" என்றபடி இவ்வாறு செய்யப்படும் வழி பாடுகளையும் யாராலும் தடுக்க இயலாது. "யோ யோ யாம் யாம் தநும் ப₄க்த:" என்ற கீதாசார்யனின் வாக்கும் இதையேதான் உறுதிப்படுத்துகின்றது.x

இவற்றை ஸ்தாபனம் செய்வது என்பதும் அவ்வப்பொழுது காலப்போக்கில் இவற்றுள் ஏற்படும் குறைபாடுகளை (க்₃லாநி:) நீக்குவதேயாகும். பகவான் செய்யும் தர்ம ஸ்தாபனமும் இத் தகையதுதான். தர்ம ஸம்ஸ்தாபந பதமும் இக்காரணத்தி னுலேயேதான் போடப்பட்டுள்ளது. இத்தகைய பலவகையான வழிப்பாட்டுமுறையை மாற்றும் முயற்சியும் ஶ்வபுச்சநமந முயற்சியையே ஒக்கும் என்பது நமது அபிப்ராயம். ஷண்மதங்களை சங்கரர் ஸ்தாபித்தார் என்பதும் காலப்போக்கில் அவர் காலத்தில் அவற்றுள் ஏற்பட்ட பல குறைபாடுகளை விலக்கி அவரவர்களை அவரவரது கொள்கையில் முறைப்படி இருக்கச்செய்தார் என்பதே யாகும் என்பதையும் நமது ஆராய்ச்சி நூலில் விளக்கியிருக்கிருேம். அத்வைதக் கொள்கையில் ஊறிப்போன அவர் போன்றவர்களால் தான் அதையும் செய்பமுடியும் மற்றவர்களால், மேன்மேலும் அவற்றுள் குழப்பத்தையேதான் வளர்க்க முடியுமேயொழிய குறைபாடுகளை விலக்கி எல்லாவற்றையும் சமமாக நிலைநாட்ட முடியவே முடியாது. இந்த உண்மை புரியாத காரணத்திலுலேயே தான் இந்த ஒன்பது கேள்விகளும் எழுந்தன என்பதும் நம் எண்ணம். அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களையும், அரசியல் தலைவர் களையும் அவரவரது ஆசார்ய புருஷனையும் ஏனைய மானிடப் பிறவி களையும் தெய்வமாக கொண்டாடுபவர்களைவிட சிவன் முதலான வர்களைத் தெய்வமாகக் கொண்டாடுபவர் எவ்வளவோ மேலான வர்களே. அவர்களைக்கூட தெய்வமாகக் கொண்டாடலாம் என்பதே நம் அபிப்ராயம். மேலும் பரம்பொருளின் விபூதியான தால்தான் ஸ்ரீ சங்கரர் சூரியனையும் பகவான் என்று கூறி யிருக்கிருர். அது தங்களுக்குத் தெரியாதுபோலும்.

---

x இவ்விடத்தில் விஷ்ணு, சிவன், சக்தி, கணேசன், குமரன், சூர்யன் ஆகிய தெய்வங்களின் பக்தர்கள் அவர்களைத் துதிக்கும் ஶ்லோகங்களும், அத்வைதியின் ஶ்லோகமொன்றும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. ஆதிசங்கர ஷண்மத ஸ்தாபந விவாதத்திற்கு இவை சிறிதும் சம்பந்தமற்றவையாகையால் விடப்பட்டன.

— ஸாதுர்ஶநம் ஆசிரியர்.

## பதிலின் விமர்ஶம்

*ஆறு மதங்களை சங்கரர் ஸ்தாபித்தார் என்று திருப்பித் திருப்பி எழுதுகிறார் சாஸ்திரி. இதற்கு ப்ரமாணம் என்ன என்று நாம் கேட்கிறோம். ப்ரஸ்த₃ாநத்ரயஸஹஸ்ரநாம ப₄ாஷ்யங்கள் நாராயணன் ஒருவனையே ஸகு₃ணப்₃ரஹ்ம மாகக் கூறுகையாலும், சிவன் முதலான மற்ற தெய்வங்களை ஜீவர்களாகக் கூறுகையாலும், அவை தமக்கு ப்ரமாணமாக முடியாது என உணர்ந்து ''ப்ரஸ்த₂ான-த்ரய ப₄ாஷ்யங்களோ, ஸஹஸ்ரநாம ப₄ாஷ்யமோ இவ்விஷயத்தில என்ன செய்ய முடியும்?'' என்று இரண்டாவது கேள்வியின் பதிலிலேயே எழுதிவிட்டார். ''துதி நூல்களை ப்ராசீநர்கள் எவருமே எடுக்கவில்லையாகையாலே அவை ஆதிசங்கரக்ருதிகளல்ல; ஆகையால் அவற்றைக்கொண்டு ஶைவஶாக்தாதி₃மதங்களை அவர் ஸ்தாபித்தார் எனக் கூறமுடியாது'' என்று நாம் நிரூபித்ததை மறுக்கமாட்டாமையாலே. 'அந்நூல்களைக் கொண்டும் நாங்கள் யாதொரு தத்துவத்தையும் நிஷ்கர்ஷிக்க வில்லை' என்று மூன்றாம் கேள்வியின் பதிலில் எழுதிவிட்டார். ''சங்கரவிஜய நூல்களில ஏராளமான பொய்கள் பெய்யப் பெற்றிருப்பதால் அவற்றில் ஆதிசங்கரர் ஷண்மதஸ்த₂ாபநம் செய்தார் என எழுதியிருப்பது நம்பத்தக்கதல்ல' என்று நாம் நிரூபித்ததை மறுக்கமாட்டாமையாலே. ''சங்கர விஜயங்களையும், மற்ற நூல்களையும் பிரமாணங்களாகக் கொண்டு நாங்கள் சாதிக்கவேண்டிய விஷயமும் இல்லை'' என்று நான்காம் கேள்வியின் பதிலில் எழுதிவிட்டார். இப்படி ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்த₂ாபித்தார் என்ப தற்கு ப்ரமாணம் எதுவுமே இல்லை என்று தம் கையாலேயே எழுதிவிட்டார். தம் பதிலிலும், 'சங்கரரும் ஷண்மதமும்' என்னும் கட்டுரையிலும் 'ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபநம் செய்தார்' என்பதற்கு எந்த ப்ரமாணத்தையும் காட்ட வில்லை. ஆக, ''நாங்கள் சில காலமாக 'ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபநம் செய்தார்' என்று கட்டுப்பாடாகச் சொல்லிவருவதையும், பொது ஜனப் பத்திரிகைகளில் பிரசாரம் செய்வதையும், அதற்காக ஓர் மகாநாடே நடத்தி*

விட்டதையும் கொண்டு அனைவரும் இதை நம்பவேண்டும்'' என்று சாஸ்திரி கருதுகிறார் என்று தெளிவாகிறது. இவர்கள் கோ₃ஷ்டி₂களில அபி₄நிவேசத்தாலே இவர்கள் எதை வேண்டுமானாலும் சொல்லி ஆனந்தப்பட்டுக்கொள்ளலாம். ஆனால், தக்க பிரமாணங்களைக் காட்டினாலொழிய அவ் விஷயங்களை நடுநிலையாளர்கள் ஏற்கமாட்டார்கள் என்பதை இவர்கள் உணரவேண்டும்.

நம் நாட்டில் அவரவர் பக்குவத்திற்கேற்பப் பற்பல கடவுளர்களை ஜனங்கள் நீண்டகாலமாக வழிபட்டுவருகிறார்கள் என்பதை யாரும் மறுக்கவில்லை; இவ்வழிபாடுகளை மாற்ற யாரும் முயற்சிக்கவுமில்லை. அந்தப் பற்பல கடவுளர்களில் இவ்வறுவரை மாத்திரம் பொறுக்கி எடுதது அவர்களின் மதங்களைமாத்திரம் ஒருவர் ஸ்தாபிக்கவேண்டிய அவசியமென்ன? அப்படி அவர் ஸ்தாபித்தார் என்பதற்கு ப்ரமாணமென்ன? என்பதே நமது ஸாரமான கேள்விகள். இதற்கு சாஸ்திரியால் எந்த பதிலும் கூறப்படவில்லை; கூறவும் முடியாது. தமது இத்தோல்வியை மறைப்பதற்காக ஏதேதோ எழுதுகிறார். ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபநம் செய்தார் என்று சிறிதும் காட்டமாட்டாத ஶ்லோகங்களை எழுதிப் பக்கத்தை நிரப்புகிறார். இதெல்லாம் எதற்கு? **''ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபநம் செய்தார்''** என்று நாங்கள் கூறுவதற்கு ப்ரமாணங்கள் இவையே என்று மகுடமிட்டு ஒரு பக்கத்தில் எழுதிமுடிக்கலாமே. ஒரு ப்ரமாணம்கூட இவ்விஷயத்தில் இல்லாமையால், அதைச் செய்ய இயலாமல், சம்பந்தமில்லாமல் ஏதேதோ எழுதிப் பக்கத்தை நிரப்பி பதில் எழுதிவிட்டதாகப் பெயர் பண்ணப்பார்க்கிறார். நாம் மடிபிடித்துக் கேட்கும் கேள்விகளுக்கே இவருடைய பதில் இந்நிலையில் இருக்கும்போது, மனம்போனபடி எழுதியிருக்கும் ''சங்கரரும் ஷண்மதமும்'' என்னும் கட்டுரை எப்படியிருக்கும் என்பதை அன்பர்கள் ஊஹித்துக் கொள்ளலாம்.

ஆதிஶ₃ங்கர ஷண்மதஸ்தாபந ப்ரசாரத்திற்குச் சிறிதும் சம்பந்தமில்லாத பல விஷயங்களை எழுதிவிட்டு, கடைசியில்

*"பரம்பொருளின் விபூ₄தியானதால்தான் ஸ்ரீ சங்கரர் சூரியனையும் 'ப₄க₃வாந்' என்று கூறியிருக்கிறார். அது தங்களுக்குத் தெரியாதுபோலும்" என்று எழுதி ஐந்தாம் கேள்வியின் பதிலை முடிக்கிறார் சாஸ்திரி. சங்கரர் முதலான பலரும், இதிஹாஸபுராணங்களும் சூரியனை மாத்திரமல்லாமல் மற்றும் பல தேவதைகளையும் ரிஷிகளையுங்கூட 'ப₄க₃வாந்' என்று பலவிடங்களில் கூறியிருப்பது நமக்குத் தெரியும். ஆனால், இந்த ப₄க₃வச்ச₂ப்₃த₃ம் பரம்பொருளின் விபூ₄தி களான அவர்களிடமெல்லாம் ஔபசாரிகமேயொழிய முக்கியமானதல்ல, அவ்விபூ₄திகளையுடைய பரம்பொருளான நாராயணன் ஒருவனிடமே முக்கியமானது என்று ஸ்ரீபராசர ப₄க₃வான் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் முழங்கியிருப்பதும நமக்குத் தெரியும். சாஸ்திரிக்குத் தெரியாத அந்த ம்லோ கங்களைக் கீழே அச்சிட்டு அதற்குப் பொருளையும் தருகிறோம.*

**"ஏவமேஷ மஹாந் ஶப்₃தே₃ா ஸமத்ரேய ப₄க₃வாநிதி।**
**பரமப்₃ரஹ்மபூ₄தஸ்ய வாஸுதே₃வஸ்ய நாநயக₃:॥**
**தத்ர பூஜ்யபத₃ார்த்தே₂ாக்தி பரிபா₄ஷாஸமந்வித:।**
**ஶப்தே₃ாऽயம் நோபசாரேண அந்யத்ர ஹ்யுபசாரத:॥**
*[விஷ்ணுபுராணம் 6-5-76, 77]*

*[மைத்ரேயரே! இவ்வண்ணமாக ப₄க₃வான் என்னும் இப் பெரிய சொல், பரப்₃ரஹ்மமான வாஸுதே₃வனையே குறிக்கும்; வேறு எவரையும் குறிக்காது. பூஜ்யரைக் குறிக்கும் இயல்வுடைய இந்த ஶப்₃த₃ம் பரமபூஜ்யனை அவன் விஷயத்திலேயே முக்கியமாகப் பிரயோகிக்கப்படு கிறது; மற்றவர்கள் விஷயத்தில் ஔபசாரிகமாகவே (அமுக்கியமாகவே) பிரயோகிக்கப்படுகிறது.]*

*இனி, "* **பீ₄ஷோதே₃தி ஸூர்ய:** *" முதலான ஶ்ருதி வாக்யங்களையே கட்டுக்கதையாக்கிய சாஸ்திரி 'இதெல்லாம் கட்டுக்கதையே' என்றே கூறுவர்! இந்த ஶ்லோகங்களுக்கு முன்னும் பின்னுமுள்ள "ஐஶ்வர்யஸ்ய" "உத்பத்திம்" என்று தொடங்கும் ஶ்லோகங்களை ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்திலே ப₄க₃வச்ச₂ப்₃த₃ வ்யாக்₂யானத்தின்போது*

ஆதிசங்கரர்எடுத்திருககிறுரே அவரும்கட்டுக்கதையைத்தான் ஆதரித்தாரா எனறு கேட்டால் 'ஆமாம்' என்று சாஸ்திரி சொல்லியாகவேண்டும். 'ஆதி₃ஶங்கரர் ஷண்மத ஸ்த₂ாபநம செய்தார்' என்னும அப்பட்டமான பொய்யை ஸாதி₄ப்ப தற்காக, ஆயிரககணககான ஶ்ருதிஸ்ம்ருதிவாக்யங்களேயும், ஆதிஶங்கர வாக்யங்களேயும் கட்டுககதையாக்குவது அவசியந் தானு என்பதை நடுநிலேயாளர் சிந்திக்கவேண்டும.

ஆதி₃ஶங்கரர் ஷண்மத ஸ்த₂ாபநம செய்தார் என்பதற்கு ப்ரமாணம் என்ன? எனபது நம கேள்வி இதறகு ப்ர மாணம் காட்டமுடியாமையாலே, 'ஷணமதங்கள் அநாதி காலமாக நம நாட்டில உள்ளன. அவற்றில ஆதிசங்கரர் குறைகளே விலக்கினுர்; அவர்தான் இதைச் செய்யமுடியும்" முதலான சம்பந்தமில்லாத விஷயங்களே நிஷ்ப்ரமாணமாக எழுதி ஏட்டை நிரப்புகிறுர் என்பதை நடுநிலேயாளர்கள் குறிக்கொள்வார்களாக.

விஷ்ணுவைப் பரம்பொருளாகக் கொண்ட மதம் வைஷ்ணவமதம் என்று அநாதிகாலமாக வழங்குவதைக் காண்கிறேும். சிவனேப பரமபொருளாகக் கொண்ட மதம் சைவமதம் என்று நீண்டகாலமாக வழங்குவதையும் காண்கிறேும். இவையிரண்டுமதான் நமது நாட்டில் நெடுங் காலமாக வழங்கிவரும் மதங்கள். வெறும் வழிபாடுகளெல் லாம் மதங்களாகிவிடாது. சிவனுக்கு மனேவியாகிய சக்தி யும், பிள்ளேகளான கணபதியும், முருகனும் சிவனுக்கு அடங்கிநடக்கவேண்டியவர்கள். அவர்கள் அடங்காப்பிடாரி களாக நடந்துகொண்டாலும்,அறிவாளிகள் அந்நடத்தையை ஏற்கமாட்டார்கள். அறிவிலிகளே புருஷனுககுப் போட்டி யாக மனேவியையும், பிள்ளேகளேயும் பரமபொருளாகக் கொண்ட மதங்களே ஆதரிப்பார்கள். ஆதிசங்கரரை இத தகைய அறிவிலியாக்கவேண்டாம என்றுதான் நாம் கூதறு கிறேும். "இதோடு நிறகமாட்டோம். ஶ்ருதி முதலான ஸகல ஶாஸ்திரங்களிலும் பரம்பொருளுக்கு அடங்கிய ஜீவனுக முழங்கப்படும் ஸூர்யனேப் பரம்பொருளாகக் கொண்ட மதத்தையும் அவர் ஸ்தாபித்தார் எனறு கூறு

வோம்'' என்கிறார் சாஸ்திரி. இப்படிப் பிடிவாதம் பிடித்தால் நாம் என்ன செய்வது? வாதத்துக்கு மருந்து உண்டு; பிடிவாதத்துககு மருந்து ஏது?

ஆக, ஆதி₃ஶங்கரர் ஷண்மத ஸ்தா₂பநம் செய்தார் என்பதற்கு சாஸ்திரியால் எவ்விதமான ப்ரமாணமும காட்ட இயலாமையாலே, ஆதி₃ஶங்கர ஷண்மத ஸ்தா₂பந ப்ரசாரம் வெறும் ஆகாயக்கோட்டையே என்று முடிந்தது.

ஐந்தாம் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான
ஆறும் அததியாயம் நிறைவுபெற்றது.

## ஏழாம் அத்தியாயம்
# ஆறும் கேள்விக்கு பதிலின் விமர்சம்

### நமது ஆறும் கேள்வி

**சூரியனுக்கு ஒரு மதமென்றால், அவனுக்கும் தலைவனான இந்திரனுக்கும், எல்லா தேவதைகளையும் படைத்த பிரமனுக்கும் ஒரு மதத்தை ஸ்தாபிக்கவேண்டாமா? சூரியனைப் போலவே உலகிற்குதவும் வாயு முதலான மற்ற தேவதைகளும், இவர்கள் அனைவர்க்கும் தலைவனான இந்திரனும், அவனையும் படைத்த பிரமனும ஒவ்வொரு மதத்திற்குத் தலைவராயிருக்கமுடியாதபடி என்ன பாபத்தைச் செய்தார்கள்?**

*நமது ஆறும் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்*

சூரியனுக்கு ஒரு மதம் போன்று அவனுக்குத் தலைவனான இந்திரனுக்கும் ஒரு மதம் உண்டு. ஐந்தர மதம் என்னும் அம் மதமும் நாட்டு அரசர்களாலும் மக்களாலும் தழுவப்பட்டுள்ளன. * ப்ரும்ம மதம் அல்லது வாயு மதமும் ஹைரண்யகர்பர்களால் தழுவப்பட்டு வந்துள்ளது என்பதும் ஆராய்ச்சியாளருக்கு நன்கு விளங்கும் சாரீரகமீமாம்ஸா சாஸ்திரத்திலுள்ள பல அதிகரண விசாரங்களாலும் நாம் இதை உணரலாம். ஆகவே (சூரியனின் தலைவனான) இந்திரனும் (எல்லா தேவதைகளையும் படைத்த) பிரமனும் (சூரியனைப்போலவே உலகுக்கு உதவும்) வாயுவும் ஒரு பாபமும் செய்யவில்லை. இந்த உண்மையையெல்லாம் அறியாத நாமே பாபம் செய்துள்ளவர்களாவோம்.

---

* ப்₃ரஹ்மமதமும், வாயுமதமும் ஒன்றல்ல. —ஸாதூர்ஶனம ஆசிரியர்.

## பதிலின் விமர்ஶம்

நாம் இந்தக் கேள்வியை எதற்காகக் கேட்டிருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளாமல்—குறுக்கு விசாரணையின் போது தனக்கு பாதகமான விஷயத்தை உளரும் சாட்சியைப்போலே அசட்டுத்தனமாக பதிலுரைத்து மாட்டிக் கொண்டுவிட்டார் சாஸ்திரி.

வேதங்கள் நாலு என்கிறோம். அபௌருஷேயத்வம் முதலான பொது லக்ஷணங்கள் அவற்றுக்கு உள்ளன. புராணங்கள் பதினெட்டு என்கிறோம். "ஸர்க்கஶ்ச ப்ரதி ஸர்க்கஶ்ச" முதலான ப்ரமாணங்களில் சொல்லப்பட்ட பொது லக்ஷணங்கள் அவற்றுக்கு உண்டு. 'ஷண்மதங்கள்' என்று இவர்கள் கூறும் மதங்களுக்கோ, அம்மதங்களின் கடவுளருக்கோ இப்படிப் பொது லக்ஷணம் எதுவுமில்லை. ஆகையால் ஆறு மதங்கள், ஆறு கடவுளர்கள் என்பது இத்துடன் நிற்காது; பற்பல மதங்களையும், அவற்றுக்குத் தலைவராகப் பற்பல கடவுளர்களையும் ஒப்புக்கொள்ள வேண்டிவரும் என்பது நமது கேள்வியில் அடங்கியுள்ள ஆபத்தி. இது இஷ்டாபத்தியே, பற்பல மதங்களும் உண்டு; அவற்றுக்குத் தலைவரான கடவுளர்களும் உண்டு என்கிறார் சாஸ்திரி. ஆக ஆறுமதம் என்று இப்படி வரம்பு கட்டுவது பொருந்தாது என்று அவரே இசைந்துவிட்டமையால், ஷண்மதங்களை மாத்திரம் ஆதிசங்கரர் ஸ்தாபித்திருக்க முடியாது என்பது அவர் வாக்காலேயே தேறிற்று. படைத்தவனுக்கும், தலைவனுக்கும் ஓவ்வொரு மதத்தை ஸ்தாபிக்காமல், எவராவது படைக்கப்பட்டவனுக்கும், தாஸனுக்கும் ஓவ்வொரு மதத்தை ஸ்தாபிப்பாரா என்பதை சாஸ்திரி ஆலோசிக்கவேண்டும். அவர்களுக்கும் மதங்களை அவர் ஸ்தாபித்தார் என்று இசைந்தால் ஷண்மத ஸ்தாபகர் என்ற பெயர் தொலைந்தது. ஆக, 'ஆறுமதம்' என்று வரம்புகட்டுவது எவ்வகையிலும் பொருந்தாதாகையாலே, ஆதிசங்கரர் அந்த ஷண்மதங்களை ஸ்தாபித்திருக்க முடியாது என்று நிரூபிக்கப்பட்டதாயிற்று.

ஆறும் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான
ஏழாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## எட்டாம் அத்தியாயம்

# ஏழாம் கேள்விக்கு பதிலின் விமர்சம்

### நமது ஏழாம் கேள்வி

சாக்த சைவ வைஷ்ணவ மதங்களை ஆதிசங்கரர் தம் நூல்களாலே மலினமடையச் செய்தார் என்று வித்யாரண்யர் கோஷித்திருக்கும்போது ஆதிசங்கரரே அம்மதங்களை எப்படி ஸ்தாபிக்கமுடியும்?

*நமது ஏழாம் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்*

வித்யாரண்யரின் வாக்கிலும் பொய் பெய்ந்திருப்பதால் அவரது நூலும் பிரமாணமாகாது எனத் தங்களது ஆராய்ச்சி நூலில் எழுதியுள்ள தாங்கள் அதையே தங்கள் கேள்விக்கு ஆதாரமாகக் காட்டுவது வேடிக்கையாகவே உள்ளது. வித்யாரண்யரின் உள் நோக்கம் புரியாததால் எழுந்த இக்கேள்விக்கு பதில் தேவையில்லை. ஆயினும் இதற்கும் விரிவான பதிலை நமது ஆராய்ச்சி நூலில் காணலாம். அவரது அத்வைத நூல்களால் அத்வைத அறிவைப் பெற்றுநிற்கும் வித்யா நிலையில் அவ்வறிவினாற்றலால் சாக்த, சைவ, வைஷ்ணவ மதங்கள் தானாகவே மங்கி மலினமடைகின்றன என்பதே அவர் கருத்தேயொழிய ஆதிசங்கரர் தம் நூல்களாலே இவற்றை மலினமடையச் செய்தார் என்பதல்ல. ஆகவே அவர் கோஷத்தின் கருத்து இதுவேயன்றி தாங்கள் நினைப்பதல்ல என்பதை உணரவேண்டும். அவித்யாநிலையில் அவற்றை மலினமடையச் செய்ய அவராலும் முடியாது. அவர் செய்யவும் மாட்டார். செய்யவுமில்லை. விளங்கவேதான் செய்தார்.

### பதிலின் விமர்ஶம்

*வித்யாரண்யர் பெயரில் வழங்கும் சங்கரவிஜய நூல்களிலே பல பொய்கள் பெய்யப்பெற்றிருப்பதால் அவை வித்யாரண்யர் இயற்றியவையல்ல என்பது தெளிவு. ஆகையால், வித₃யாரண்யரின் உண்மையான வாக்கை திரு. உமாபதி ஜகதீஶ ஶர்மாவும். நாமும் ஆத₄ாரமாகக் காட்டுவதில் வேடிக்கை ஒன்றுமில்லை. இரண்டும் வித₃யாரண்யருடையதேயானாலும், ஆதி₃ஶங்கரருடைய நூல்களுக்கு ஒட்டாமலிருப்பதைத் தள்ளி, ஒட்டியிருப்பதைக் கொள்வதி*

லும் ஒரு வேடிக்கையுமில்லை. ஆதிசங்கரர் தம் ஶாரீரக மீமாம்ஸாபாஷ்யத்தில் கணாதமதம், பலவகைப்பட்ட பாஶுபதமதம், ஆர்ஹதமதம் பாஞ்சராத்ர (வைஷ்ணவ) மதத்தில் தாம் ஏறிட்ட சில தோஷங்கள் ஆகியவற்றைக் கண்டித்திருக்கிறார். அப்படியிருக்க, ஆதிசங்கரர் தம் நூல்களால் இவற்றை மலினமடையச் செய்தார்' என்று வித்யாரண்யருக்குக் கருத்தல்ல என்று எழுதும் சாஸ்திரி யின் ஶாங்கரபாஷ்யஜ்ஞானம் ஸந்தேஹிக்கத்தக்கதாயிருக் கிறது. கணாதமதம் ஆர்ஹதமதம் முதலான வேதபாஹ்ய மதங்கள் ஆதிஶங்கரருடைய நூல்களாலும், ஆழ்வார்கள், நாயன்மார்களுடைய நூல்களாலும், ஸ்ரீவைஷ்ணவாசார் யர்களுடைய நூல்களாலும் நம் நாட்டில் அடியோடு மலின மடைந்துவிட்டதைக் காண்கிறோம். வித்யாரண்யரின் ஶ்லோகப்படி போஷிப்பாரில்லாமையாலே ஶங்கரருடைய கிரந்தங்களாலே மலினமடைந்த பாஞ்சராத்ர (வைஷ்ணவ) மதம், நாதயாமுன யதிராஜமுனிகள் முதலான ஸ்ரீவைஷ் ணவசார்யர்களின் நூல்களாலே போஷணத்தைப் பெற்றன என்பதும் வரலாறு கண்ட உண்மை. ஆதிஶங்கரரின் நூல்களாலே அசிவமான சிவமதமும், துர்கதியடைந்த ஶாக்தமதமும் நாயன்மார்களின் பாடல்களாலும், பிற்காலத் தில் எழுந்த சைவசித்தாந்த சாத்திரங்களாலும், தேவீ பாகவதம் முதலான பிற்காலப் புராணங்களாலும் தூக்கி நிறுத்தப்பட்டு, அப்பயதீக்ஷிதர் காலத்திலிருந்து ஆதிசங்கர ஹ்ருதயவிருத்தமாகப் பெரும்பாலான அத்வைதிகளால் ஆதரிக்கப்படும் நிலையையும், ஶ்வபுச்சநமனம் (நாய் வாலை நிமிர்த்துதல்) என்று சாஸ்திரி கூறியபடி திருத்தவே முடியாத நிலையையும் அடைந்துவிட்டதையும் ப்ரத்யக்ஷ மாகக் காண்கிறோம். ஆதிஶங்கரருடைய உண்மையான நூல்களான பாஷ்யங்களில் விஷ்ணு ஒருவனையே அவர் ஸகுணப்ரஹ்மமாகக் கொண்டாடியிருக்கையாலும், ஶிவன், மாத்ருகணம், விநாயகன், ஸூர்யன் முதலான மற்ற தேவதைகளை ஜீவர்களாகவே கொண்டிருக்கையாலும், ஶைவஶாக்தாதிகளை அவர் ஸ்தாபநம் செய்திருக்க முடி யாது என்பதையும் காண்கிறோம். இப்படியிருக்கும்போது

*"வித்₃யாநிலையில் தாமாகவே அவை மலினமடைந்தன, அவித்₃யாநிலையில் அவர் அவற்றை ஸ்த₂ாபநம் செய்தார்" என்று சாஸ்திரி நிஷ்ப்ரமாணமாகக் கதைப்பது நகைக்கத் தக்கதாயிருககிறது.*

*ஆக, ஆதி₃ஶங்கரரின் உண்மை நூல்களான பா₄ஷ்யங் களில் கண்டிக்கப்பட்டிருக்கும் ஶைவாதி₃ மதங்களை அவர் ஸ்த₂ாபித்திருக்கவே முடியாது என்று நிரூபிககப்பட்ட தாயிற்று.*

ஏழாம் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான
எட்டாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## ஒன்பதாம் அத்தியாயம்

# எட்டாம் கேள்விக்கு பதிலின் விமர்சம்

### நமது எட்டாம் கேள்வி

**இவ்வாறுதெய்வங்களைக் காட்டிலும் மேலானதொன்றே ஸகுணப்ரஹ்மம் எனபீர்களாகில். அப்படியொன்றிருந்தால் ஆதிசங்கரர் அதைப் பரமபொருளாகக் கொண்ட மததை யன்றோ முதலில் ஸ்தாபித்திருக்கவேண்டும்? அதையன்றோ மோக்ஷதகை விருமபுகிறவர்கள் உபாஸிக்கவும், சரணமடைய வும் வேண்டும்? அதையன்றோ கோவில் கட்டிக் கும்பிட வேண்டுமே? அப்படிப்பட்ட தெய்வம் எது? ஆதிசங்கரர் தம் நூல்களில் எங்கெங்கு அதைப்பற்றிக் குறித்திருக்கிறார்?**

***நமது எட்டாம் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்***

நாங்கள் ஸகுணமான இவ்வாறு தெய்வங்களைக் காட்டிலும் ஏன்? எல்லாவற்றையும் காட்டிலுமே மேலானதொன்று நிர்க் குணப்ரும்மம்தான் என்போமேயொழிய ஸகுணப்பிரஹ்மம் எனவே மாட்டோம். ஆகவே எங்களிடம் அந்த பிரச்சனையே முற்ற யற்றதாகும். அதையே பரம்பொருளாகக் கொண்ட மதமே எம் அத்வைதமாகும். அதைத்தான் முதலில் ஸ்ரீ சங்கரரும் ஸ்தாபித்திருக்கின்றார். அதையேதான் மோக்ஷத்தையே விரும்பு கின்றவர்களும் கடவுளாலேயே கட்டப்பட்டுள்ள அவரவரது இருதய கோவிலில் அறியவேண்டும் என்றும் உபாஸிக்கக்கூடாது சரணமடையக் கூடாது என்றும் அந்த அறிவைப்பெற வேண்டு

மானால் அதற்கு அவற்றை உபாயமாக முன்னோடியாகக் கொள்ளலாம் என்றும் மிக மிகத் தெளிவாக அவரது பாஷ்யங்களில் பற்பல விடங்களில் ஆதாரபூர்வமாக எடுத்துக் காட்டியிருக்கிறார். ஆதிசங்கரர் தமது பாஷ்யங்களில் மட்டும் அல்ல மற்ற ஏனைய நூல்களிலும் அதாவது ஒவ்வொரு நூலிலும் இதைப் பற்றியே தான் குறித்திருக்கின்றார்.

## பதிலின் விமர்ஶம்

*ஆதிஶங்கரர் நிர்க்குணப்ரஹ்மத்தையே பாரமார்த்திக நிலையில உள்ளதாக ஸ்தாபிததார் என்பதையும், அது வாக்யார்த்த ஜ்ஞாநததாலேயே அடையத்தக்கதெனக் கூறினார் என்பதையும் யாரும் இல்லைசெய்யவில்லை. அதே நேரத்தில், வ்யாவஹாரிக நிலையில் அவர் பல ஸகுணதத்துவங்களைப் படைத்தளித்தழிக்கும் தலைவனாய். ஆதிகர்த்தாவாய். பரமாத்மாவென்றும். பரதத்துவமென்றும், பரஞ்சோதியென்றும். பரப்ரஹ்மமென்றும் வேதாந்தங்களில் முழங்கப்படுபவனான நாராயணனையே ஸகுணப்ரஹ்மமாக ஒப்புக்கொண்டார் என்பதும் ஸகுணமுக்தியைப் பெறுவதற்கு அவனையே உபாஸிக்கவேண்டும் என்றும், சரணமடையவேண்டும் என்றும் உபதேஶித்தார் என்பதும் மற்ற தெய்வங்களுக்கு இப்பெருமையிலலை என்று முழங்கியிருக்கிறார் என்பதும் வெள்ளிடை மலையாகவும் கையிலங்கு கனியாகவும் அவருடைய பாஷ்யங்களில் காணக்கிடக்கிறது. பலவிடங்களை இந்நூலில் எடுத்துக்காட்டினோம். இன்னும் காட்டவேண்டிய இடங்கள் நூற்றுக்கணக்கில உள்ளன. இவ்வுண்மையை மறந்து இக்கால அத்வைதிகள் பலர் மும்மூர்த்திகளுக்கும் மேலான பரமசிவனே ஸகுணப்ரஹ்மம் என்றும், அவனுக்கும் மேலான பராசக்தியே ஸகுணப்ரஹ்மம் என்றும். விநாயகனே ஸகுணப்ரஹ்மம் என்றும, முருகனே ஸகுணப்ரஹ்மம் என்றும் மனம்போனபடியெல்லாம் பேசியும். லட்சக்கணக்கானவர்கள் படிக்கும் பொதுஜனப் பத்திரிகைகளில் எழுதியும் வருகிறார்கள். அவர்களைக் குறித்துக் கேட்கப்பட்டது நமது இந்த எட்டாம் கேள்வி. இது எதையும் அறியாதவர்போலே சாஸ்திரி நடிப்பதும். திருப்பித் திருப்பி நிர்க்குணப்ரஹ்மம்*

*ஒன்றைத்தான் சங்கரர் ஸ்தாபித்தார் என்று எழுதுவதும், அதே மூச்சிலேயே ஆறு மதங்களை ஸ்தாபித்தார் என்று நிஷ்ப்ரமாணமாக எழுதுவதுமாகக் காலம் கழிப்பது விநோதமாயிருக்கிறது. இது—எந்தக் கேள்வியையும் தட்டிக் கழிக்கும் சாஸ்திரியின் மனப்பான்மையைக் காட்டுகிறது.*
**" அவற்றை ( ஆறு தெய்வங்களை அல்லது அவற்றின் உபாஸந மாரணாகதிகளை ) உபாயமாகக் கொள்ளலாம் என்று மிக மிகத் தெளிவாக சங்கரர் பாஷ்யங்களில் ஆதாரபூர்வகமாக எடுத்துக் காட்டியிருக்கிறார் " என்று எழுதும் சாஸ்திரி விஷ்ணு தவிர மற்ற தெய்வங்களுக்கு அல்லது அவற்றின் உபாஸந சரணாகதிகளுக்கு ஆதிசங்கரர் இப்பெருமையைத் தம் பாஷ்யங்களில் கூறியிருக்கும் ஓரிடத்தையாவது காட்ட முடியுமா ? முடியுமானால் மறுதபாலில் காட்டட்டும் சாஸ்திரி. முடியவில்லையெனில் அடுத்த ஸுதர்ஶனத்தில் அவரது தோல்வி பிரகடனப்படுத்தப்படும்.**

*ஆக இக்கால அத்வைதிகள் செய்யும் த்ரிமூர்த்யுத்தீர்ண ஸகுணப்ரஹ்மவாதம் ஆதிஶங்கர ஹ்ருதயவிருத்தம் என்று நிலைநாட்டப்பட்டதாயிற்று.*

எட்டாம் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான
ஒன்பதாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## பத்தாம் அத்தியாயம்

# ஒன்பதாம் கேள்விக்கு பதிலின் விமர்சம்

### நமது ஒன்பதாம கேள்வி

**ஐந்நூறு வருடத்திற்கு முற்பட்ட எந்த நூலிலும் காணபத்யம் முதலானவற்றை ஷண்மதங்களாகக் குறிப்பிடாததிலிருந்தே இந்த ஷண்மதக் கற்பனை நவீனமென விளங்கவில்லையா ?**

***நமது ஒன்பதாம் கேள்விக்கு சாஸ்திரியின் பதில்***

ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்ட பல நூல்களிலும் காணபத்யம் முதலான இவ்வாறுவிதமான கொள்கைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன என்பன போன்ற இன்னும் பல விஷயங்களையும் 'சங்கரரும் ஷண்மதமும்' என்ற நமது ஆராய்ச்சி நூலில் விரிவாக விளக்கியிருப்பதால் இங்கு விளக்காமல் விடுகிறோம்.

பொதுவாக ஸுதர்சனத்தில் அத்வைதிகளைக் குறித்து ஒன்பது கேள்விகளையும் அதில் கூறப்பட்டுள்ள வேறு பல விஷயங்களை யும் பார்க்கும்பொழுது அபித்திசித்ர ந்பாயந்தான் நமது ஞாபகத் திற்கு வருகின்றது. அதை எடுத்துக் காட்டவேதான் இதை எழுதி இருக்கின்றோம்.

## பதிலின் விமர்ஸம்

ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்ட எந்த நூலிலும் காணாபத்யம் முதலானவற்றை ஷண்மதங்களாகக் குறிப் பிடவில்லை என்கிறோம் நாம். அதற்கு பதில் கூறுவதா யிருந்தால் ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்ட இன்ன இன்ன நூலகளில் இவ்வாறுமதங்களும ஷண்மதங்களாகக் குறிக்கப்பட்டுள்ளன என்று காட்டவேண்டும். இப்படி ஒரு நூலில் கூட இல்லாமையாலே, தம்முடைய படு தோலவியை மறைப்பதற்காக, "ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்ட பல நூல்களிலும் காணாபத்யம முதலான இவ் வாறுவிதமான கொள்கைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன" என்று கூறி மழுப்புகிறார் சாஸ்திரி. ஐந்நூறு வருடங் களுக்கு முற்பட்ட நூல்களில் இவ்வாறுகொள்கைகள் மாத்திரமல்லாமல் ஆறாயிரம் கொள்கைகள் இருக்கின்றன. அவற்றில் இவ்வாறு மதங்களைப் பொறுக்கி எடுத்து 1100 வருடங்களுக்கு முற்பட்ட ஒருவர் ஸ்தாபித்திருந்தால் 'ஷண்மதங்கள்' என்று இவ்வாறுகொள்கைகளை ஒரு வகைப்படுத்தி வழங்கும்முறை அக்காலத்தில் ஏற்பட்டிருக் கும். ஆதிசங்கரர் காலத்திற்குப் பிறகு அறுநூறு வருடங் கள் வரையில் இவ்வாறையும் ஷண்மதங்கள் என ஒருவர் கூட ஒரு நூலில் கூட வழங்கியது கிடையாது. வழங்கி யிருப்பதாக சாஸ்திரி தம நூலிலும் காட்டவில்லை. இதி லிருந்தே ஆதிசங்கரரும் ஐந்நூறு வருடங்களுக்கு முற் பட்ட எந்த ப்ராசீநரும் இந்த ஷண்மதங்களை ஸ்தாபித் திருக்க முடியாது எனபது சிறு பிள்ளைகளும விளங்கும். இவ்வுண்மையை மறைப்பதற்காக சாஸ்திரி 'ஆறு கொள்கை களும நெடுங்காலமாக இருந்தன' என்றே திருபபித் திருப்பி எழுதிவருகிறார். ஆறு கொள்கைகள் இருந்தால மாத்திரம் அவற்றை ஆதிசங்கரர் ஸ்தாபித்தார் என்று ஆகிவிடுமோ?

ஸ்தாபித்தார் என்பதற்கன்றோ ப்ரமாணம் காட்டவேண்டும். அது காட்டமுடியாமையால் சாஸ்திரிக்குப் படுதோல்வியே என முடிந்தது.

இங்கு ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறோம் காண்மின். ஆழ்வார்கள் "ஆறு சமயம்" என்று பல பாசுரங்களில் எடுத்திருக்கிறார்கள். ஆழ்வார்களுக்குள் காலத்தால் முற்பட்ட முதலாழ்வார்களில் ஒருவரான பேயாழ்வாரின் சிடரான திருமழிசையாழ்வார். "அகைப்பில் மனிசரை ஆறு சமயம புகைத்தான்' [நான்முகன் திருவந்தாதி 38] என்று துஷ்டஜனங்களை ஆறுசமயங்களில் அகப்படுத்திவைககிறான ஸர்வேஸ்வரன் என்கிறார். இதிலிருந்து புறச்சமயங்களில் ஆறை 'ஆறு சமயங்கள்' என வழங்கும வழககு அக்காலத்தில் உள்ளது என விளங்குகிறது "விளம்பும ஆறு சமயமும்" [திருவாய்மொழி 4-10-9] "பிணக்கற அறுவகைச் சமயமும்" [திருவாய் 1-3-5] "உருவாகிய ஆறு சமயம்" [திருவாய்9-4-8] முதலானவிடங்களில் நம்மாழ்வாரும். "அறுவகைச் சமயமும அறிவரு நிலையினை" [திருவெழுகூற்றிருக்கை] என்று திருமங்கையாழ்வாரும் இப்புறச்சமயங்களை 'ஆறு சமயம்' என்று வழங்குகிறார்கள். இச்சமயங்கள் யாவை என்பதை "விளம்பும ஆறு சமயம" [திருவாய் 4-10-9] ஈடு வியாக்கியானத்தில "பா₃ஹ்ய ஸமயங்கள் ஆறும; அவையாவன.— 'ஶாக்யௌலூக்யாக்ஷபாத₃ க்ஷபண கபில பதஞ்ஜலி மதாநுஸாரிண:' என்று ப₄ாஷ்யகாரர் அருளிச்செய்தாரிறே' என்று பனிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த நம்பிள்ளை என்னும் மஹாசார்யர் (வியாக்கியான சகரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளைக்கும் ஆசார்யர்) ஸ்ரீப₄ாஷ்யகாரரின் வேதா₃ர்த்த₂ ஸங்க்₃ரஹ ஸ்ரீஸூக்தியை ப்ரமாணமாககாட்டி அருளிச்செய்கிறார். இவ்வாறு புறச்சமயங்களையும் ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீபாஷ்யம். வேதா₃ர்த்த₂ ஸங்க₃ரஹம் முதலான கிரந்தங்களில் நிரஸிப்பதைக் காண்கிறோம. இப்பெருமையையிட்டு "பார்த்தான் அறுசமயங்கள் பதைப்ப" [53] என்று ஸ்ரீ ராமாநுஜர் காலத்திலிருந்த அமுதனார் இராமாநுச நூற்றந்தாதியிலும்,

"அறுசமயச்செடியதனை அடியறுத்தான் வாழியே" [ஆர்த்தி ப்ரபந்தம் 31] என்று மாமுனிகளும் மற்றும் பல ஆசாரியர்களும ஷண்மத நிராஸகராக ஸ்ரீராமானுஜரைக் கொண்டாடுகிறார்கள். இப்படி க₃ாணாபத்யம் முதலான ஆறு மதங்கள் ஐந்நூறு வருடங்களுககு முற்பட்ட எவ ராலும் 'ஷண்மதங்கள்' என வழங்கப்பட்டதுமில்லை. அவற்றை ஆதிசங்கரர் தம் நூலகளில எங்கும் ஸ்தாபிக்கவு மில்லை. தம் வாழ்க்கையில அவற்றை ஸ்தாபித்தார் என்று பண்டைச் சான்றோர் எவரும எழுதியதுமில்லை. ஆகையால், நவீனர்கள் "ஷண்மத ஸ்த₂ாபனாசார்யர்" என்று ஆதி சங்கரருக்குப் பட்டம் சூட்டுவது சிறிதும் ஆகாரமற்ற கற்பனையே என்பதும். "அபி₄த்திசித்ரந்யாயம்" (சுவ ரில்லாமல சித்திரமெழுதுவது என்னும் ந்யாயம்) இதற்கே பொருந்தும் என்பதும் கல்வெட்டாகத் தேறிற்று.

இந்த ஷண்மதக் ஸ்தாபனக் கற்பனை எதற்காக எக் காலத்தில் ஏற்பட்டது என்பதைச் சுருக்கமாக விளக்கு வோம். ஆதிசங்கரர் காலத்திலும் அவர் காலத்திறகுப் பல நூற்றாண்டுகள் வரையிலும் அத்வைதிகள் வ்யாவ ஹாரிகத₃சையில் விஷ்ணுவையே ஸகு₃ணப்₃ரஹ்மமாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் என்பது ஆதிசங்கரரின் நூல் களிலிருந்தும், அவருக்கு ஸமீபகாலத்தில் வாழ்ந்த வார்த்திக டீகாகாரர்களின் நூல்களிலிருந்தும். ஸ்ரீ த₄ரருடைய ஸ்ரீவிஷ்ணுபுராண ஸ்ரீப₄ாக₃வத வ்யாக்₂யானங்களிலிருந்தும் மற்றும் பல ப்ராசீநாத்₃வைதிகளின் நூலகளிலிருந்தும் மிகத் தெளிவாக விளங்குகிறது. ஸ்ரீராமானுஜாசார்யர் பதினோராம் நூற்றாண்டிலும், ஸ்ரீமத்₄வாசார்யர் பனிரண் டாம் நூற்றாண்டிலும் அவதரித்து ஆதிசங்கரரின் அத் வைத ஸித்தாந்தத்தை ப₃ஹுமுக₂மாகத் தகர்த்தெறிந்தனர். ஸ்ரீ பராசரபட்டர் ஸ்ரீ வேதா₃ந்த தே₃ஶிகர் முதலான ஸ்ரீ வைஷ்ணவாசார்யர்களும். மத்₄வமதஸ்த₂ாபகர்கள் பல ரும் 12. 13. 14. 15வது நூற்றாண்டுகளில் தோன்றி நூற் றுக்கணக்கான நூல்களை எழுதியும், ஆயிரக்கணக்கான வாதப் போர்களைப் புரிந்தும் அத்வைதமதத்தைத் தலையெடுக்க

முடியாதபடி செய்தார்கள். சைவநாயன்மார்கள் முதலான சைவர்களால் ஆதரிக்கப்பட்ட சைவமதத்தையும் பலவாறு கண்டித்தனர். நவீனர்கள் கூறுகிறபடி ஆதிசங்கரர் ஷண்மத ஸ்த₂ாபநம் செய்திருந்தால் இவ்வைஷ்ணவாசார்யர்கள் அந்த ஆறு மதங்களில் சாக்தம், காணாபத்யம், கௌமாரம், சௌரம் எனும் மதங்களையும் எடுத்து அவற்றைச் சி₂ந்நபி₄ந்நமாக்கியிருப்பார்கள். அத்வைதிகளின மாயாவாத மதத்தையும், சைவநாயன்மார்கள் பின்பற்றிய ஶைவமதத்தையும் தவிர—கா₃ணாபத்யம், கௌமாரம், சாக்தம், சௌரம் என்னும் மதங்கள் அறிவாளிகளான வைதிகர்களில் எவராலும் அக்காலத்தில் கைக்கொள்ளப்படாமையாலே அவற்றை முற்கூறிய ஸ்ரீவைஷ்ணவமதாசார்யர்கள் எடுத்துக்கழிக்கக்கூட இல்லை. இதிலிருந்தே 'ஆதிஶங்கரர் ஷண்மதஸ்தாபகர்' எனக்கூறுவது எவ்வளவு பெரிய பொய் என விளங்கும். இந்நிலை அப்பயதீ₃க்ஷிதர்காலம் வரையில் நிலவியது. அப்பயதீக்ஷிதர் ஶைவமதத்தை நிலைநிறுத்த சிவதத்வவிவேகம், சிவார்க்கமணிதீ₃பிகை முதலான நூலகளை எழுதி, அவர் காலத்திலிருந்த வைஷ்ணவாசார்யர்களிடம் தக்கபதிலைப்பெற்று ஓய்ந்துபோனார். இவரும் ஶாக்தம், கா₃ணாபத்யம், கௌமாரம், சௌரம் என்னும் மதங்களை நிலைநிறுத்தமுயலவில்லை. அத்வைதத்தை முறியடித்த வைஷ்ணவாசார்யர்களைப் பழிவாங்குவதற்காக அப்பய தீக்ஷிதரும், அவர் வழிவந்தவர்களும் பற்பல கற்பனைகளைச் செய்தார்கள். அவற்றில் ஷண்மத ஸ்த₂ாபந கற்பனையும் ஒன்றாகும். இக்கற்பனையை எழுதுகிறவர்கள், ஆதிசங்கர ப₄ாஷ்யவிருத்₃த₄மாக, "சிவசக்தியே மோக்ஷமளிக்க வல்லவள்" என்றும், "ஒன்றுமறியாத பாமரர்களுக்காக ஆதி சங்கரர் வைஷ்ணவத்தை ஸ்தாபித்தார்" என்றும் எழுதுவதிலிருந்து இக்கற்பனை வைஷ்ணவர்களைப் பழி வாங்குவதற்காகவே சமீபகாலத்தில் நவீநாத்வைதிகளால் கிளப்பப்பட்டது என விளங்குகிறது.

"'சங்கரரும் ஷண்மதமும்' என்னும் நூலில் விளக்கியிருக்கிறோம்" என்று அடிக்கடி எழுதுகிறார் சாஸ்திரி.

அந்நூல் விதண்டா வாதங்களும், அபத்தவாதங்களும் நிறைந்தது என்பதை இந்நூலில் பலவிடங்களில் எடுத்து விளக்கியிருக்கிறோம். கேள்விகளுக்குத் தக்க பதிலை எழுத முடியாமையாலே 'அந்நூலில் விளக்கியிருக்கிறோம்' என்று எழுதுவதின்மூலம் பாமரர்களை மயக்கப் பார்க்கிறார். திலகாஷ்ட மஹிஷபந்தனத்தைக் காட்டிச் சிலரை பய முறுத்திய தெனாலிராமன் கதை நமக்கு நினைவுக்கு வருகிறது. தமது நூலை சாஸ்திரி தாமே அச்சிட்டு அதன் லக்ஷணத்தை உலகுக்குக் காட்டுவாராக. "ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார்" என்பதற்கு ஒரு ப்ரமாணங்கூட அதில் இல்லை என்பதை அப்போது உலகம் உணரும்.

ஆக, நமது ஒன்பது கேள்விகளுக்கும் சாஸ்திரி எழுதிய பதில்களிலிருந்து 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகர்' எனும் கொள்கையை அவரால் ஒரு சிறிதும் நிலைநாட்ட முடியவில்லை என விளங்குகிறது. உண்மையில், அவரைக் குறைசொல்லிப் பயனில்லை. ஆகாசத் தாமரையையும், மலடி மகனையும், முயற்கொம்பையும் யாரால்தான் நிலைநாட்ட முடியும்? இவற்றைப்போலே 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார்' என்பதும் பொருந்தமாட்டாத கற்பனை என்பதை நாம் பற்பல ப்ரமாணங்களைக் காட்டி நிரூபித்தபின்பும், 'நீங்கள் எதைக் காட்டினாலும் நாங்கள் அசையமாட்டோம்' என்று எழுதும் சாஸ்திரியின் பிடிவாதத்தைத்தான் நாம் குறைசொல்ல வேண்டியிருக்கிறது. இப்பிடிவாதம் அகலாறொழிய சாஸ்திரிக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் உண்மை விளங்காது.

ஒன்பதாம் கேள்விக்கு பதிலின் விமர்ஶமான
பத்தாம் அத்தியாயம் நிறைவுபெற்றது.

## முடிவுரை

இனி, நமது கேள்விகளின் முடிவுரையையும், சாஸ்திரியின் முடிவுரையையும் கொடுத்து, அதை விமர்சிக்கும் நமது முடிவுரையோடு நமது நூலை நிறைவுபடுத்துவோம்.

## நமது கேள்விகளின் முடிவுரை

இப்பிரசுரத்தை நாம் எல்லாப் பத்திரிகைகளுக்கும், அத்வைத சமூகத்தைச் சேர்ந்த அறிஞர்கள் பலருக்கும் அனுப்புகிறோம். எவராவது நம்கேள்விகளுக்கு நேர்மையுடன் பதிலிறுக்க முன் வந்தால், பதில்களை நம் ஸுதர்சனத்திலேயே அச்சிட்டு ஆராய ஸித்தமாயிருக்கிறோம. பதிலுரைக்கத் துணிவிலலாமல் 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரே' 'சிவாநந்த லஹரி பாடினார்' 'ஸௌந்தர்யலஹரி பாடினார்' என்று திருபபித் திருபபி யெழுதிவந்தால் அப்ரமாணிகர்களின் அபத்தப்பிதற்றலாக அதைக் கருதிக் காற்கடைக் கொளவோம்.

## *சாஸ்திரியின் முடிவுரை*

இங்ஙனம் "ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா" என்ற வைஷ்ணவ சுதர்சனத்தின் ஆராய்ச்சி நூலுக்கு "சங்கரரும் ஷண்மதமும்" என்ற நமது பதில் ஆராய்ச்சி நூலும் "அத்வைதிகளைக் குறித்து சில கேள்விகள்" என்ற தலைப்பில் கொடுக்கப்பட்ட ஒன்பது கேள்விகளுக்கு நமது பதில்களும் ஒருவாறு முடிவடைகின்றது. உண்மையில் இந்த ஒன்பது கேள்விகளுக்கும் விளக்கமான பதில்களும் நம்முடைய நூலிலேயே கிடைத்துவிடும் என்றாலும் தனியாக கேள்விகள் கேட்கப்பட்டதால் அந்த முறையிலும் பதில்கள் சுருக்கமாக இங்கு எடுத்துக் காட்டப்பட்டன. மற்றும் சிவானந்தலஹரி, சௌந்தர்யலஹரி ஆகியவற்றை சங்கரர் பாடினார் என்பதில் எங்களுக்கு சிறிதும் ஐயமில்லை. அதை உறுதியாக நாங்கள் நம்புகிறோம். எனினும் வைஷ்ணவ சுதர்சனத்தின் விருப்பப்படியே இந்த நமது ஆராய்ச்சி நூலில் ஒரு பகுதியிலும் "சிவானந்தலஹரி பாடினார்" "சௌந்தர்யலஹரி பாடினார்" என்று ஓரிடத்திலும் நாம் எழுதவில்லையாகையால் அதையே திருப்பித் திருப்பி எழுதவேண்டிய அவசியமும் இல்லை.

ஆகவே வைஷ்ணவ சுதர்சனம் எமது பதில்களை காற்கடைக் கொள்ளவேண்டிய நிர்பந்தமும் இல்லை. மற்றும் சிரஸில் வஹிக்க வேண்டும் என்றே விரும்புகிறோம்.

## நமது முடிவுரை

*விவாதக் கட்டுரைகளோ நூல்களோ எழுதி ப்ரதிபக்ஷிகளை பதிலுரைக்கச்சொன்னால், அவர்கள் தங்கள் மனம்போனபடியெலலாம் எழுதி பதிலுரைத்ததாகப் பெயர்பண்ணிவிடுகிறார்கள் என்னும் அநுபவத்தாலேயே, நாம் இவ்வொன்பது கேள்விகளை அத்வைதிகளைக் குறித்துக்கேட்டு, அவற்றுக்கு*

பதில் உரைத்தால் அந்த பதில்களை ஸுதர்சனத்தில் அச்சிட்டு ஆராய்வதாக இசைந்தோம். சாஸ்திரி நம்மைக் குறித்து 22 கேள்விகளை அனுப்பினர். ப்ரமாண நிஷ்கர்ஷம் செய்துகொள்ள உதவும் அக்கேள்விகளையும் அவற்றுக்குக் காய்தல் உவத்தலில்லாத பதிலகளையும் உடனே நமது ஸுதர்சனத்தில அச்சிட்டு சாஸ்திரிக்கும் அனுப்பி. இதே முறையில் சாஸ்திரி நமது ஒன்பது கேள்விகளுக்கும் ப்ரமாணயுக்திகளைக் காட்டி பதிலுரைக்கவேண்டும் என வேண்டினோம். அம்முறையைப் பின்பற்றினல 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகர்' என்னும் தம் கொள்கைககு ஒரு ப்ரமாணங்கூடக் காட்டமுடியாது என உணர்ந்த சாஸ்திரி, நம்மைப் பொய்யர் என்றும், வஞ்சகர் எனறும் வேதத்தையே மாற்றுகிறவர் என்றும் வாய்ககு வந்தபடியெல்லாம் திட்டும் 'சங்கரரும் ஷண்மதமும்' என்னும் சுவடியை எழுதிவிட்டு கேள்விகளுக்கு—மேலே அச்சிட்ட வகையில் ஏதோ பதில் எழுதி. பதில் எழுதிவிட்டதாகப் பெயர் பண்ணுகிருர். நம்மைத் திட்டியதோடு திருப்தியடையாமல் உலகம் போற்றும் உத்தமர்களான நமது பூர்வாசார்யர்களான ஸ்ரீராமாநுஜர் முதலானுரையும் தம் சுவடியில் மனம்போனபடி தூற்றுகிருர். தாம் தூற்றியது போதாதென்று, தமிழ்நாட்டில இதுவரையில் எவரும கேட்டறியாத 'ராமராயர்' என்பவர் நமது ஆசார்யர்களைக கண்டபடி தூற்றும் பிதற்றல்களில் பல பககங்களை எழுதித் தம் சுவடியில ஒட்டியுள்ளார். அன்பர்களே! "ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா அலலவா" என்னும ஆராய்ச்சிககு இவையெல்லாம் கடுகளவாவது சம்பந்தபபட்டவையா என்பதைச் சிந்தியுங்கள். தங்களுடைய ஷண்மத ஸ்தாபன ப்ரசாரத்தின் பொய்ம்மை வெளியாகிவிட்டதே! எனனும் கடுப்பால பிறந்தவையன்றே இவை. கடுங்கடுப்பாலும், கோதிப்பாலும் கண்டபடி எழுதிவிட்டு. அவற்றை நம் ஸுதர்சனத்திலேயே அச்சிடவேண்டும என்று கட்டளையிடுவது இவர்களுடைய மதவெறியையன்றே காட்டுகிறது.

"சிவானந்தலஹரி, ஸௌந்தர்யலஹரி ஆகியவற்றை சங்கரர் பாடினர் என்பதில் எங்களுக்குச் சிறிதும் ஐயமில்லை, அதை உறுதியாக நாங்கள் நம்புகிறோம்' என்று எழுதுகிருர் சாஸ்திரி. நடுநிலைமை என்பது சிறிதாவது உள்ள

வர் இப்படி எழுதுவாரா? இந்த சிவாநந்தலஹரியும், சௌந்தர்யலஹரியும் முதன்முதலில் எந்த நூற்றுண்டில் நூல எழுதுபவர்களால் கையாளப்படுகின்றன என்பதை ஆராயவேண்டாமா? ஒரு கல்லூரியின் வடமொழிப் பேராசிரியராயிருப்பவர் இதை ஆராயாமல் பிடிவாதம் பிடிக்கலாமா? இப்படி ஒன்று இரண்டா? புதிது புதிதாக வல்லவோ துதிநூல்கள் கற்பிக்கப்பட்டு ஆதிசங்கரர் தலையில் சுமத்தப்படுகின்றன. ஆதிசங்கர பக்தர்களாகத் தங்களைப் பறைசாற்றிக்கொள்ளுகிற சர்மா, சாஸ்திரி முதலானவர்களல்லவோ இதைச் செய்கிறார்கள். எத்தனை நாளைக்கு உலகை ஏமாற்ற முடியும்? ஆதிசங்கரர் நூல் எழுதிய அன்று தொடங்கி இன்றளவும் ஆயிரக்கணக்கான சான்றோர்களால் கையாளப்பட்ட ப₄ாஷ்யங்களுக்கு நேர் முரணாக இத்துதிநூல்கள் இருக்கின்றனவே என்பதைக் கூட ஆராயவேண்டாமா? பாஷ்யம் படிக்காத பாலாதாசன், கோபாலன் போன்றவர்கள் இவ்விஷயத்தை அறியவில்லை யென்றாலும் நாம் மன்னிக்கலாம். 'ப₄ாஷ்யப₄ாவஜ்ஞர்' என்னும விருதை வகிக்கும் வரஹூர் சாஸ்திரி இப்படித் தம் கண்ணுக்கும் நெஞ்சுக்கும் இரும்புத்திரையிட்டுக் கொண்டு, உண்மையைக் காணமனமில்லாமல், "நாங்கள் உறுதியாக நம்புகிறோம்" "எங்களுக்குச் சிறிதும் ஐய மில்லை" "நீங்கள் எதைக் காட்டினாலும் நாங்கள் அசைய மாட்டோம்" என்று எழுதுவதை எப்படி மன்னிப்பது? இப்படிப் பிடிவாதம பிடிப்பவர் விவாதத்தில இறங்கி யிருக்கவே வேண்டாமே! காறகடைக் கொள்ளவும் தகுதி யற்ற இத்தகைய சுவடியை நாம் சிரஸாவஹிக்கவேண்டு மென்று சாஸ்திரி பேராசைப்படுவதுதான் பேராச்சரியமா யிருக்கிறது. நிற்க.

இப்படிப் பிடிவாதமுடையவரோடு நாம் விவாதத்தை வளர்தத விரும்பவில்லை. பாலாதாசன் 'ஒனறுமறியாத பாமரர்களுக்காக ஆதிசங்கரர் வைஷ்ணவத்தை ஸ்தாபித் தார். அம்மதம் தததுவத்தை அடிபபடையாகக் கொண்ட தன்று' என்று லட்சக்கனக்கான வாசகர்கள் படிக்கும் 'விகடன்' தீபாவளி மலரில் வைஷ்ணவத்தையும், வைஷ்ண வர்களையும் இழிவுபடுதத முயன்றதாலேயே நாம் இவ் விவாதத்தில் இறங்கினோம். லட்சக்கணக்கான வாசகர்கள்

படிக்கும் தினமணியில் கோபாலன் என்பவர் 'மோக்ஷமளிக்க சிவசக்திகக்கு அதிகாரமுண்டேயொழிய விஷ்ணுவுக்கு அதிகாரமில்லை' என்று பொருள்பட ஸகல சாஸ்திரங்களுக்கும். ஆதிசங்கர பாஷ்யங்களுக்கும் முரணாக எழுதியதாலேயே அத்வைதிகளைக் குறித்து ஒன்பது கேள்விகளைக் கேட்டோம். 'ஆறு மதங்களும் சமம்' என்றெழுதும் இந்த சாஸ்திரி வைஷ்ணவத்தைத் தாழ்த்திப் பேசிய பாலாகாசனையும், கோபாலனையும் கண்டித்துத் தம் சுவடியில் ஒரு வார்த்தை கூட எழுதாதது இவரது பக்ஷபாதத்தைக் காட்டுகிறது. இந்த சாஸ்திரி எழுதியிருக்கும் பதிலிலிருந்து இவருக்கு ஒரு கேள்வியே போதும் என விளங்குகிறது. அதாவது:—

## ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்தார் என்பதற்கு ப்ரமாணம் என்ன?

ஆதிசங்கரரின் பாஷ்யங்களிலிருந்தோ, துதிநூல்களிலிருந்தோ, சங்கரவிஜயம் முதலான பிற்கால நூல்களிலிருந்தோ 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகர்' என்பதைத் தாம் ஸாதிக்கவில்லையென்பதைத் தாமே இசைந்து விட்டாரிவர். தம் சுவடியிலும், நம் கேள்விகளுக்கு பதிலிலும் ஆதிசங்கரர் தாம் கூறும் ஷண்மதங்களை ஸ்தாபனம் செய்தார் என்பதற்கு இவர் வேறு ஒரு ப்ரமாணங்கூடக் காட்டவில்லை. இந்த நமது ஷண்மத ஸ்தாபன சர்ச்சை எனும் நூல் இவருக்கு 1970 டிசம்பர் முடிவுக்குள் கிடைக்கும்படி அனுப்பப்படுகிறது. சம்பந்தமில்லாத விஷயங்களை வளர்க்காமல், இவ்வொரு கேள்விக்கு ஓரிரு பக்கங்களில் பதில் எழுதி 15—1—71க்குள் இவர் அனுப்பட்டும். இவர்மாத்திரமல்ல; 'ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபனம் செய்தார்' என்று கூறும் எவர்வேண்டுமானாலும் எழுதியனுப்பலாம். இதற்காகவே காஞ்சி காமகோடி மடத்திற்கும் இது அனுப்பப்படுகிறது. எவர் பதில் அனுப்பினாலும், ஜனவரி கடைசியில் வெளிவரும் ஸுதர்சனத்தில் அவற்றை அப்படியே அச்சிட்டு ஆராய்ந்து இவ்விவாதத்தை முடிப்போம். எவரும் அனுப்பவில்லையாகில், 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபனம் செய்தார் என்பது அப்பட்டமான பொய்' என முடிவு கட்டப்பட்டு விவாதம் நிறைவுபடுத்தப்படும்.

## [25-1-71ல் ஸுதர்சனம் 278ல் எழுதப்படுவது]
## (முடிவுரையின் தொடர்ச்சி)

அன்பர்களே! நமது ஷண்மதஸ்தாபந சர்ச்சையின் பத்து அத்தியாயங்களும் (62 பக்கங்கள்) கொண்ட ஸுதர்சனம் 277 வரஹூர்சாஸ்திரிக்கும், மேலமாம்பலம் சர்மாவுக்கும் காஞ்சி காமகோடி மடத்திற்கும் 28—12—70 அன்று அனுப்பப்பட்டது. இன்றளவும் நமது கேள்விக்கு எவரிடமிருந்தும் யாதொரு பதிலும் இல்லை. 29—12—70 அன்று (நமது ஸுதர்சனம் இவர்களுக்குக் கிடைத்திருக்கக் கூடிய தினத்தன்று) சர்மாவின் 25—12—70 தேதியிட்ட கடிதமொன்று நமக்குக்கிடைத்தது. இவர்களுடைய நூல் கிடைத்தபின் 12—11—70 அன்று நாம் எழுதிய கடிதத்தில் 1970 டிசம்பர் கடைசியில் வெளிவரும் ஸுதர்சனத்தில் நமது கேள்விகளுக்கு சாஸ்திரியின் பதில்கள் அச்சிட்டு ஆராயப்படும் என்று எழுதியிருந்தோம். நம்மைத் திட்டுவதில உள்ள ருசியாலே நாம் இட்ட கெடு முடியும்வரைகூடக் காத்திருக்க இயலாமல், நமது பதில் வராது என்று இவர்களாக முடிவுகட்டிக்கொண்டு 25—12—70 கடிதததில் நம்மை "ஜ்ஞாநலவ து₃ர்வித₃க்₃த₄:" [அறைகுறைப்படிப்பாலே கர்வம் கொண்டவன்] என்றும், "மூர்க்க₂ன்" என்றும் சாஸ்திரி திட்டியதை சர்மா எழுதுகிறார். அந்தோ! பரிதாபம்!! இவர்களுடைய து₃ர்வாத₃ங்களைச் சி₂ந்நபி₄ந்நமாக்கும் ஸுதர்சனம் அவதரித்துவிட்டது என்பதையும் அறியாமல் வசவுபுராணத்திலே இறங்கிவிட்ட இவர்களுடைய நிலையை என்னென்போம்!

ஸுதர்சனம் 271ல் சாஸ்திரியின் 22 கேள்விகளுக்கு பதில் உரைக்கும்போது, நாம் சாஸ்திரியையோ, அவருடைய பரமாசார்யர்களான ஆதிசங்கரர் முதலான ப்ராசீநாத்₃வைதிகளையோ குறித்து யாதொரு நிந்தையையும் செய்யாமல், சம்பந்தமில்லாத விஷயங்களை எழுதாமல், விதண்டாவாதங்களில் இறங்காமல் ப்ரமாணயுக்திகளைக்காட்டிக் கேள்வி

களுக்கு பதில்களைமாத்திரம் 40 பக்கம் அச்சிட்டு, 'நமது ஒன்பது கேள்விகளுக்கும் தக்க ப்ரமாணங்களைக் காட்டி நடுநிலை நின்று ஸாத்விகரீதியில் பதிலுரைக்கவேண்டும்' என்று சாஸ்திரியைக் கேட்டிருந்தோம் (ஷண்மதஸ்தாபந சர்ச்சை பக்கம் 40 காண்க). இவ்வழியைப் பின்பற்றினால் தாம் படுதோல்வியடைய நேரிடும் என்றுணர்ந்த சாஸ்திரி, கேள்விகளுக்கு பதில் எழுதுவதில் முதலில் கைவைக்காமல், நம்மையும், ஸ்ரீராமாநுஜர் முதலான நமது பூர்வாசார்யர் களையும் கண்டபடி வைதும், ஷண்மத ஸ்தாபந சர்ச்சைக்கு சம்பந்தமில்லாத அத்வைத விசிஷ்டாத்வைதச் சண்டை களைக் கிளரியும், 'ஆதிசங்கரர் பாஞ்சராத்ரி, விசிஷ்டாத்₃ வைதி' என நாம் எழுதியிருப்பதாகப் பொய்யாகக்கூறி, இவற்றுக்கு பதில் எழுதத்தொடங்கி விதண்டாவாதங் களையும் வசவுகளையும் வளர்த்தும் சுமார் 50 பக்கங்களை எழுதிவிட்டு, கேள்விகளுக்கு பதில்கள் என்று தொடங்கி ஆறேழு பக்கங்கள் எழுதி அனுப்பினர். ஆக, இப்படி வசவு புராணத்தைத் தொடங்கிவைத்து விவாதத்தை ஸாத்விகப்பாதையிலிருந்து நழுவிச் செல்லும்படி செய்த துடன் திருப்தியடையாமல், நமது பதிலையும் பாராமல் நம்மைத்திட்டும் பணியில் சாஸ்திரியும் சர்மாவும் இறங்கி விட்டது, "**அஶக்தாஸ் தத்பத₃ம் க₃ந்தும் ததோ நிந்த₃ாம் ப்ரகுர்வதே**" [ஸாத்விகவழியில் வாதம் செய்ய இயலாதவர் கள் நிந்தை வழியிலே வாதம் செய்வதில் இழிகின்றார்கள்.] என்னும் ரீதியிலே இவர்களுடைய வாதத்தில் வலுவில்லை என்பதைக் காட்டுகிறது. இவர்கள் இம்மாதிரியாக நம்மை யும் நமது பூர்வாசார்யர்களையுங் குறித்துப் பல நிந்த₃ா பரிஹாஸங்களைப் பொழிந்ததாலேயே நாம் அவை இவர் களுக்கே மிகப்பொருந்தும் என்று ஷண்மதஸ்த₂ாபந சர்ச்சையில் நிருபிக்கநேரிட்டது. நிற்க.

இவர்களுடைய ஆதி₃ஶங்கர ஷண்மதஸ்த₂ாபநப்ரசாரத் தைத் தீயினில் தூசாக்கும் நமது ஸுதர்சனம் உலகெங்கும் பரவியபின் இவர்களுடைய வசவுபுராணக் கடிதத்தைப் பெற்ற நாம், அதைப்பெற்ற 29—12—70 அன்றே அதை எழுதிய சர்மாவுக்கு பதில் எழுதினோம். அதில்,

"தைரியமிருந்தால், நேர்மையிருந்தால், திறமையிருந்தால், நடுநிலைமையிருந்தால், மநஸ்ஸாக்ஷியிருந்தால், ஹ்ருதயகமலவாஸி யான பரமாத்மாவிடம் பயமிருந்தால், நேற்று யான் அனுப்பிய ஸுதர்ஶனத்தில் 100வது பக்கத்தில் கொட்டையெழுத்துக்களில் அச்சிடப்பெற்றிருக்கும் ஒரே கேள்விக்கு, ஓரிரு பக்கங்களில் (வசவு புராணங்களைக் கலக்காமல்) சாஸ்திரியோ நீரோ 15-1-71க் குள் பதில் எழுதி அனுப்புங்கள். அப்படி அனுப்பினால் அவை அடுத்த மாத ஸுதர்ஶனத்தில் அச்சிட்டு ஆராயப்பெற்று விவாதம் முடிக்கப்படும். இல்லையேல், உங்களுடைய படுதோல்வி பறை சாற்றப்படும்" என எழுதினோம்.

*இவ்வளவு தெளிவாக நாம் பலமுறை* "**நாவலோ நாவல்**" *'அறையோ அறை' என்று நாவலிட்டு அறைகூவியபின்பும்,* "**ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபநம் செய்தார்**" *என்பதற்கு ஒரு ப்ரமாணங்கூட இல்லாமையால் எதுவும் எழுத இயலாமல், சர்மா தமது 11—1—71 கடிதத்தில் மறுபடியும் வசவு புராணங்களையே இட்டு நிரப்பியுள்ளார். அத்துடன்*

"ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபித்தார் என்பதற்கு ப்ரமாணம் என்ன என்று கேட்டிருக்கிறீர். ஆதிசங்கரர் ஷண் மதங்களை ஸ்தாபிக்கவில்லை என்பதற்கு உமது ப்ரமாணம் என்ன? என்று உம்மை நாம் திருப்பிக்கேட்கின்றோம். உமது கேள்விக்கு எமது இந்தக் கேள்வியே விடையாகும்." என்றும், "உம்முடைய ஒரே கேள்விக்கு பதிலான நமது 'ஸ்ரீசங்கரரும் ஷண்மதமும்' என்ற நூலைப் பிரசுரிக்கவும். அதைப் பிரசுரிக்காதவரை மேற் கொண்டு உமக்கு எந்தவிதமான பதிலும் எழுதப்படமாட்டாது என்பதை அறியவும். அதனை நீர் பிரசுரிக்கவில்லையென்றால் நாமே பிரசுரித்து அதில் உமது துர்வாதங்கள் கண்டிக்கப்பட்டிருக்கின் றன என்பதை உலகம் உணரும்படி செய்ய சித்தமாயிருக்கிறோம்" என்றும் எழுதினார்.

*இக்கடிதத்தைப் பெற்ற அன்றே நாம் எழுதிய பதிலின் ஸாரமான பகுதிகளாவன:—*

"உங்கள் சுவடியில் சம்பந்தமில்லாத விஷயங்களும் திட்டு களும் உள்ளனவே தவிர ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபநம் செய்தார் என்பதற்கு ஒரு ப்ரமாணங்கூட இல்லையே! இருந்தால் அதையெடுத்து இப்போதும் ஓரிருபக்கங்களில் எழுதியிருக்கலாமே! இல்லாமையால் "ஆதிசங்கரர் ஷண்மதங்களை ஸ்தாபிக்கவில்லை

என்பதற்கு உமது ப்ரமாணம் என்ன?" என்று பதில் கேள்வி கேட்கிறீர். ஆதிசங்கரர் தமது உண்மை நூல்களான பா4ஷ்யங்களில் நாராயணன் ஒருவனையே ஜகத்3காரணனாய், தே3வாதி3தே3வனாய், மோக்ஷப்ரத3னாய் ஸகலகல்யாணகு3ணபூர்ணனாய் ப்3ரஹ்மமாகவும், சிவன் முதலானோரை இப்பெருமைகள் சிறிதுமற்ற ஜீவர்களாகவும் நூற்றுக் கணக்கானவிடங்களில் முழங்கியிருப்பதை ஆகரத்துடன் யான் எடுத்துக்காட்டியிருக்கிறேனே! அவர் ஷண்மதங்களை ஸ்தாபித்திருக்கமுடியாது என்பதற்கு இவற்றைவிட வேறு என்ன ப்ரமாணம் வேண்டும்? தமோகு3ண மிகுதியினால் இதைக் காணமாட்டாத குருடராகிவிட்டீரே! அந்தோ பரிதாபம்!! திலகாஷ்டம2 மஹிஷபந்த4னச்சுவடியை நீர் அச்சிட்டு உங்கள் மௌர்க்2யத்தை உலகில் பரப்பிக்கொள்வதைப்பற்றி எனக்கு யாதொரு ஆக்ஷேபமுமில்லை. அப்படி அச்சிடும்போது இதற்கு மூலமான எமது நூல்களும். இதற்கு யான் எழுதியிருக்கும் பதிலான ஷண்மதஸ்த2ாபநசர்ச்சை என்னும் நூலும் எவர் கேட்டாலும் இலவசமாக அனுப்பப்படும் என்று தைரியமிருந்தால் வெளியிட்டுவிடவும். உமது சுவடியையும், 'ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா' என்னும் நூலிலிருந்து தொடங்கி, ஷண்மத ஸ்தாபந சர்ச்சை முடிய சுமார் 150 பக்கமுள்ள எனது பதிலுரைகளையும் பார்த்து நடுநிலையாளர்கள் அவசியம் ஒரு முடிவுக்கு வருவார்கள். உங்கள் சுவடியில் ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபநம் செய்தார் என்பதற்கு ஏதாவது ஒரு ப்ரமாணமாவது கூறப்பட்டிருந்தால் அதை அப்படியே எழுதி அனுப்பியிருக்கலாமே. அப்படி ஒரு ப்ரமாணங்கூட அதில் இல்லாமையால் உம்மால் இதைச் செய்ய முடியவில்லை. இப்போதும் மறுதபாலில் முடிந்தால் எழுதி அனுப்பும். இல்லாவிடில் அடுத்த ஸுத3ர்சனத்தில் ஷண்மதஸ்தாபந ப்ரசாரத்தின் பொய்ம்மை குன்றிலிட்ட விளக்காக்கப்படும். இனியாவது, வசவுபுராண விதண்டாவாதக் கடிதங்களில் இறங்காமல், சரக்கிருந்தால் விஷயத்தை எடுத்து எழுதும். உமது சுவடி அச்சானபின் அதை இலவசமாக எவர்க்கும் அளிக்கும் துணிவிருந்தால் என் பத்திரிகையில் அப்படியே விளம்பரம் வெளியிடுகிறேன். நீரும் முற்கூறியபடி வெளியிடும்"

*நமது பலவிதமான அறைகூவல்களடங்கிய இக்கடிதத்தைப் பெற்றபின் 15—1—71ல் எழுதிய கடிதத்தில் சர்மா அவ்வறை கூவல்களில் எதையும் ஏற்றுக்கொள்ளாமல் வசவுமாரிகளையே பொழிகிறார். 'இருவருடைய வெளியீடு*

களிலும் பரஸ்பரம் மற்றவர்களுடைய வெளியீடு இலவச மாகக் கிடைக்கும் என்று வெளியிட்டுக்கொள்ளலாம்' என்னும் நமது அறைகூவலைக்கூட இவர் ஏற்கத் தயங்கு வதிலிருந்து, நமது வெளியீடு அத்வைத சமூகத்தில் பரவி விட்டால் ஷண்மத ஸ்தாபந ப்ரசாரத்தின் பொய்ம்மையைத் தங்களவர்களிலும் பலர் உணர்ந்து விடுவார்கள் என்று பயப்படுகிருர் என்று விளங்குகிறது. இந்த பயம் இவருக்கு இல்லையாகில், மறுதபாலில் நமது அறைகூவலை ஏற்றுக் கொண்டு, தம் நூலை அச்சிடும்போது, அதன் கடைசியில், "இந்நூலுக்கு மூலமான 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா- அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்விகள்' என்னும் நூலும் இதற்கு பதிலாக எழுதப்பட்ட ஷண்மத ஸ்தாபந சர்ச்சை என்னும் நூலும் (மொத்தம் 150 பக்கம் உள்ளவை) "ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமிஅய்யங்கார், அட்வகேட், 'ஸுதர்சனம்' ஆசிரியர், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17" என்னும் விலாசத்தில்இலவசமாகக் கிடைக்கும். தபாலில் பெற விரும்பு கிறவர்கள் தபால் வகைக் கூலிக்காக 50பை. அனுப்பினுல் மறுதபாலில்அனுப்பப்படும்"என்று வெளியிடட்டும்.இவ்வாறு அறிவித்து, தம் நூலை அச்சிட்டு இவர் நமக்கு அனுப்பி, அதை இலவசமாக விநியோகிக்க ஸித்தமாயிருப்பதாக நமக்கு அறிவித்தால் நாமும் நமது பத்திரிகையில் அவ் விஷயத்தை வெளியிடுவோம். அத்வைதிகளிலும், விசிஷ்டாத்வைதிகளிலும் இருதரப்பு நூல்களும் பரவி நடுநிலையாளர்கள் வாதப்ரதிவாதங்கள் இரண்டையும் பூர்ண மாகப் படித்து எது நேர்மையானது எது நேர்மை தவறியது என்பதை முடிவுகட்டுவார்கள்.

ஆனுல், தனக்கொரு நியாயமும் பிறர்க்கொரு நியாய மும் பேசுவதையே இயல்வாகக்கொண்ட சர்மா விடமோ சாஸ்திரியிடமோ நாம் இந்த நேர்மையை எதிர்பார்க்கவில்லை. நம்முடைய நூல்களை இவர்கள் அச்சிட மாட்டார்களாம்! இவர்களுடைய வசவுபுராணங்களை மாத்திரம் நாம் அச்சிடவேண்டுமாம்!! இவர்களுடைய பத்திரிகை எதிலும் இரண்டு பக்கமுள்ள நமது கேள்வி

களைக் கூட அச்சிடமாட்டார்களாம். நாம் மாத்திரம் நம்மையும் நமது பூர்வாசார்யர்களையும் கண்டபடி வையும் இவருடைய 50 பககங்கொண்ட திட்டுச்சுவடியை அச்சிட வேண்டுமாம். நமது பத்திரிகையின் சந்தாதாரர்களின் பட்டியலை இவர்களுக்கு அனுப்பவேண்டுமாம். இவர்களது பத்திரிகையொன்றின் சந்தாதாரர்களின் பட்டியலை நமக்கு அனுப்பமாட்டார்களாம். இப்படியெல்லாம் பக்ஷபாத மாகப் பேசும் சர்மாவோ சாஸ்திரியோ தம் நூலை அச்சிடும் போது நமது நூல் இலவசமாகக் கிடைக்கும் என்று அச்சிடுவார்கள் என நாம் எதிர்பார்க்கவில்லை. அதனாலேயே இவ்விவாதத்திற்கே அடிப்படையான "ஆதிசங்கரர் ஷண் மத ஸ்தாபநம் செய்தார் என்பதற்கு ப்ரமாணமென்ன?" என்னும் ஓரே கேள்வியைக் கேட்டு சக்தியிருந்தால் அதற்கு ஓரிரு பக்கங்களில் பதில் எழுதுங்கள் என்று பலமுறை அறைகூவல் விடுத்தோம். இவ்வறைகூவலை அத்வைத பண்டிதர்கள் பலரும் அறியவேண்டும் என்பதற்காக, இது சம்பந்தப்பட்ட நமது வெளியீடுகள் அனைத்தையும் காஞ்சீ சங்கரமடத்திற்கும் அனுப்பினோம். இவ்வொரு கேள்விக்குச் சுருக்கமாக பதிலளிக்கக்கூட எவர்க்குமே இயலவில்லை. 'ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகரா?' என்னும் நமது நூல் எவரைக்குறித்து எழுதப்பட்டதோ அந்த பாலாதாசன் இன்றளவும் வாய்மூடி மௌனியாக நிற்கிறார். "அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்விகள்" என்ற நமது நூல் எவரைக்குறித்து எழுதப்பட்டதோ அந்த கோபாலன் வாயே திறக்கவில்லை. இந்நூல்களைப்பெற்ற நூற்றுக்கணக் கான அத்வைத பண்டிதர்கள் பலரும் பல வருடங்களாக பதில் சொல்ல இயலாதவர்களாயிருக்கின்றனர். இந்த அவமானத்தைப் பொறுக்கமாட்டாத சர்மாவும் சாஸ்திரி யும் ஏதோ ஒன்றை எழுதி. பதில் எழுதியதாகப் பெயர் பண்ணிவிடப் பார்த்தார்கள். "ஆதிசங்கரர் ஷண்மத **ஸ்தாபநம் செய்தார் என்பதற்கு ப்ரமாணம் என்ன**" என்னும் நமது கேள்விக்கு பதிலிறுக்க இயலாமல் நிற்பதிலிருந்து இவர்களுடைய சாயமும் வெளுத்துவிட்டது! அந்தோ பரிதாபம்!!

நமது நாட்டில் நெடுங்காலமாகவே மதத்துறையில் பொய்களும், கற்பனைகளும். வஞ்சனைகளும், அப்ராமாணிகத்வமும் தலைவிரித்தாடத் தொடங்கிவிட்டன. ஐந்நூறு வருடங்களுக்குள் இவை மிகவும் வளர்ந்துவிட்டன. உபனிஷத்துக்களையே மாற்றுவது. மறைப்பது, புதிய உபனிஷத்துக்களைக் கற்பிப்பது என்னுமளவுக்கு வந்துவிட்டது. பல பல கற்பனைகள் தோன்றிவிட்டன. கடந்த இருபத்துமூன்று வருடங்களாக நமது ஸு தர்சனத்தில் நூற்றுக்கணக்கான ஆராய்ச்சிகள்செய்து, நடுநிலையாளர்கள் தலைகுலுக்கி வரவேற்கும்படியாக நாம் இத்தகைய விஷயங்களில் உண்மையை நிலைநாட்டிவருகின்றோம். முற்கூறிய பொய்களிலும். கற்பனைகளிலும் அபிநிவேசமுடையவர்கள் மாத்ஸர்யத்தால் நம்மை இகழ்வதால் நமக்கு என்ன குறை?

**"கற்றோர்கள் தாம் உகப்பர் கல்விதன்னில் ஆசையுள்ளோர்**
**பெற்றோம் என உகந்து பின்பு கற்பர்—மற்றோர்கள்**
**மாச்சரியத்தால் இகழில் வந்ததென் நெஞ்சே இகழ்கை**
**ஆச்சரியமோதான் அவர்க்கு."**

என்னும் மாமுனிகளின் திருவாக்கை அநுஸந்தித்து நிற்கிறோம்.

குறிப்பாக—விவாதங்கள் ஏற்படும்போது, சம்பந்தமில்லாத விதண்டாவாதங்களை எழுதி 'பதில் எழுதிவிட்டோம்' என்று பெயர்பண்ணிவிடும் போக்கு பண்டிதர்களிடையே வளர்ந்துவிட்டது. இப்போக்கைத் தவிர்ப்பதற்காகவே, நீதி மன்றங்களில் சம்பந்தமில்லாத விஷயங்களைத் தவிர்த்து விசாரணையிலுள்ள விஷயத்தில் உண்மையை வரவழைப்பதற்காகக் கேள்விகளைக்கேட்டு, கேள்விகளுக்கு நேரான பதில்களைப்பெற்று உண்மையைக் கண்டறிவதுபோலே. அத்வைதிகளைக் குறித்து நாம் ஒன்பது கேள்விகளைக் கேட்டு அவற்றிற்கு நேர்மையுடன் பதில் உரைத்தால் பதில்களை ஸு தர்சனத்திலேயே அச்சிட்டு ஆராய ஸித்தமாயிருக்கிறோம் என்று அறிவித்தோம். நீதிமன்றத்தில் சாட்சிகள் பேசும் சம்பந்தமில்லாத பேச்சு

களை விலக்கிவிட்டு கேள்விகளுக்கு பதிலை மாத்திரம் பதிவு செய்து ஆராய்வதுபோலே, சாஸ்திரி எழுதிய விதண்டா வாதச் சுவடியில் விதண்டாவாதங்களை விலக்கிவிட்டு சம்பந்தமுள்ள விஷயங்களையும். நமது கேள்விகளுக்கு சாஸ்திரி எழுதிய பதில்களையும் அச்சிட்டு ஆராய்ந்து நடுநிலையாளர்களின் தீர்ப்புக்கு விட்டோம். நடுநிலையாளர் பலர் சாஸ்திரியின் பதில்கள் ஆதிசங்கரர் ஷண்மத ஸ்தாபகர் என்பதை ஒரு சிறிதும் நிலைநாட்டவில்லையென்றும், 100-ம் பக்கத்தில் கேட்டிருக்கும் ஓரே கேள்விகளு அவர் எந்த விடையையும் எழுதமுடியாது என்றும் எழுதியுள்ளனர். (அது உண்மையாகவும் ஆகிவிட்டது.) உதாரணத்திற்கு ஒரு மஹனீயரின் அபிப்ராயத்தை மாத்திரம் இங்கு கொடுக்கிறோம். ஸ்ரீகாஞ்சீ மஹாவித்வான் ஸ்ரீ உ.வே. ப்ரதிவாதி ப₄யங்கரம் அண்ணங்கராசார்யஸ்வாமி நமது பாரததேசத்தின் ஒப்புயறவற்ற வித்₃வங்மணிகளில் ஒருவராவார். நமதுநாட்டு ராஷ்ட்ரபதி அளித்த விருது இவரைத்தேடிவந்து அடைந்து பெருமைபெற்றது. நமது வேத சாஸ்திரங்களிலும், த்ரிமதஸ்த₂க்₃ரந்த₂ங்களிலும் இவரைப் போன்ற ஆழ்ந்த அறிவுபெற்றவர் இன்னொருவர் நம் நாட்டில் இல்லையென்றே சொல்லலாம். இவ்வளவுக்கும் மேலே காஞ்சீ காமகோடி பீடா₂தி₄பதிகளின் பெருமதிப்புக்குப் பாத்திரமானவர் இவர். அத்₃வைதிகள் நடத்திய ஷண்மதஸ்தா₂பந மகாநாட்டுக்குப் பேச்சாளராக அழைக்கப்பட்டு. அந்த மேடையிலேயே "ஆதிசங்கரர் ஷண்மதஸ்தா₂பநம் செய்தார்—என்பதற்கு அவருடைய நூல்களில் எந்த ப்ரமாணமுமில்லையே; அவருடைய பா₄ஷ்யங்கள் அவரை வைஷ்ணவராகவன்றோ காட்டுகின்றன" என்று விளக்கிவிட்டுவந்தவர். அந்த மேடையிலும். அதற்குப்பிறகும் எவரும் இவ்விளக்கத்தை மறுக்க இயலவில்லை. இத்தகைய தகுதிகள் பெற்றிருக்கும் ஸ்வாமிக்கு நமது ஷண்மதஸ்தா₂பந சர்ச்சையை அனுப்பி. அவருடைய கருத்தைக் கேட்டிருந்தோம். ஸுதர்சனத்தைப் பெற்றவுடன், "இன்று கிடைத்த சர்ச்சையை வாசித்தேன். சரியான விடை எங்ஙனே வரும்?" என்று

*எழுதினர். தமது பத்திரிகையான ஸ்ரீராமாநுஜனிலும் (நிர் 269) பின்வருமாறு விமர்ஶித்திருக்கிறார்.*

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன ஸமீக்ஷா

30—12—70ல் இதை நாமெழுதிக்கொண்டிருக்குந் தருணத்தில் ஸ்ரீமதுபயவே புத்தூர் அட்வகேட் ஸ்வாமியின் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையின் 277 லக்கமுள்ள ஸஞ்சிகை கிடைத்ததனால் அதில் மிக விரிவாக வெளிவந்துள்ள ஷண்மத ஸ்தாபன சர்ச்சை யென்னும் வியாஸம் அறுபது பக்கம் கொண்டதாய்ப் பத்ராதிப ஸ்வாமியால் எழுதப்பட்டு வெளிவந்ததை ஓரே மூச்சில் வாசித்து முடித்தோம். இவ்விஷயம் ஒரு பெரிய வாதப்போராக நிகழ்ந்து வருகிறது. ப்ரஹ்மஸ்ரீ. வரஹூர் சாஸ்திரிகளுக்கும் அட்வகேட் ஸ்வாமிக்கும் லிகித மூலமான வாத சர்ச்சை நடந்துவருகிறது. வினக்கள் கொடுத்து விடைபெறும வகையையும, பெற்ற விடைகளின்மேல் ருஜுவான வழியில் மேன மேலும் வினக்கள் தொடுக்கு மழகையுங்கண்டு உள்ளம் பூரித்தோம். வாத சர்ச்சையில் இறங்கும் பண்டிதர்கள் அந்த வழியைப் பின்செல்வது நன்று.

*இப்படி நடுநிலையாளர்கள் உள்ளம் பூரித்துப் பாராட்டும்படியுள்ள நமது நூலை அத்வைத ஸமூஹத்திலுள்ளவர்களும் வாசித்துப் பார்த்தால் ஷண்மதஸ்தாபந ப்ரசாரத்தின் பொய்ம்மையை உணர்ந்துவிடுவார்களே என்னும் பயத்தாலேயே. 150 பக்கமுள்ள நமது நூலை இலவசமாக விநியோகிக்க நாம் ஸித்தமாயிருந்தும், 'அது இலவசமாகக் கிடைக்கும்' என்று தம் நூலில் வெளியிடவும் சர்மா தயங்குகிறார் என்பது தெளிவு.*

*இது அத்வைதவிசிஷ்டாத்வைத சர்ச்சையன்று; ஆதிசங்கரரின் கடவுட் கொள்கையைப் பற்றிய சர்ச்சையிது. அறிவாளிகள் அனைவரும்—குறிப்பாக. ஆதிசங்கரரைப் போற்றும் அத்வைதிகள்—நடுநிலைநின்று ஆராயவேண்டிய விஷயமிது. ஆதிசங்கரருடைய பாஷ்யங்களுக்கு முரண்க அத்வைத சமூகத்தில் பரப்பப்படும் ஆதிசங்கர ஷண்மத ஸ்தாபந ப்ரசாரம் தவறானது என்று நிரூபிக்கும் நமது நூல்களை அத்வைத ஸமூஹத்திலுள்ள அறிவாளிகள் படித்துப்பார்க்கவேண்டும். இதற்கு வாய்ப்பு ஏற்படு வதற்காகவே யாம் அத்வைதிகளின் பத்திரிகையொன்றில*

இவ்விஷயம் வெளிவரவேண்டும் என விரும்பினோம். காமகோடி ப்ரதீ₃ப நிர்வாகிகளும், சர்மாவும் இதற்கு வாய்ப்பளிக்க மறுத்துவிட்டார்கள். நமது நூலை இலவசமாக வினியோகிக்க முன்வந்துள்ளோம். அதையும் தம் நூலில் அறிவிக்க சர்மா தயங்குவது அவருடைய வாதத்திலும், சாஸ்திரியின வாதத்திலும் அவர்களுக்கே நம்பிக்கையில்லை என்று காட்டுகிறது.

நமக்கு அத்வைதிகளில் சில நண்பர்கள் உண்டு. அவர்கள் "'நானே ப்ரஹ்மம்' 'உலகம் பொய்' என்னும் அத்வைதக்கொள்கைகள் நடைமுறையில் பின்பற்ற முடியாதவை; ஸகு₃ணப்₃ரஹ்மோபாஸநமே நடைமுறையில் பின்பற்றத்தக்கது; ஆதிசங்கரர் தம் பா₄ஷ்யங்களில் நாராயணனையே ஸகு₃ணப்₃ரஹ்மமாகக் கொண்டுள்ளார் என்பது மறுக்கமுடியாத உண்மையாகும்" என்று மனப்பூர்வமாக ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால், ஷண்மதஸ்தாபந ப்ரசாரம் போன்ற பொய்யான ப்ரசாரங்களால் இந்த மறுக்க முடியாத உண்மை அத்₃வைத சமூகத்தினரிடமிருந்து மறைக்கப்பட்டுள்ளது. அதனால் அவர்கள் கண்ட கண்ட தெய்வங்களையெல்லாம் கும்பிடுகிறவர்களாகவும் ஆதிசங்கரரால் பரமாத்மாவாகப் போற்றப்பெற்ற நாராயணனை துவேஷிப்பவர்களாகவும் மாறிவருகிறார்கள். சிலர் சக்தி உபாஸகர்களாகமாறி, நடுராத்ரியில் நிர்வாணஸ்த்ரீ பூஜை செய்வது முதலான அதிநிஹீநமான காரியங்களைச் செய்பவர்களாகவும், பிறரையும் இத்தகைய காரியங்களைச்செய்யத் தூண்டுகிறவர்களாகவும் ஆகிவருகின்றனர். 'இந்நிலைக்கு ஒரு முடிவு ஏற்படவேண்டும்; ஆதிசங்கரரின உள்ளக் கருத்தை அத்வைதிகளில் அறிவாளிகளெல்லாம் உள்ளபடி அறியவேண்டும்' என்னும் நல்லெண்ணத்தாலேயே நாம்நமது நூலை இலவசமாக அத்வைதிகளிடம் விநியோகிக்க முனைவருகிறோம். இவ்வாய்ப்பை அவர்களுக்கு அளிக்கமாட்டோம் என்று பிடிவாதம் பிடித்தால் நாம் என்செய்வது?

இந்த விவாதம் 'விகடன்' பத்திரிகையால் தொடங்கி வைக்கப்பட்டது. உண்மையில் நமக்கு எந்தப் பத்திரிகை

யின் மீதும் விரோதபூர்வம் கிடையாது. நமது நாட்டுப் பத்திரிகைகள் நல்ல காரியங்கள் செய்தால் அதைப் பாராட்டுவதும் உண்டு; தவருன காரியங்கள் செய்தால், "நகுதற்பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண் மேற் சென்று இடித்தற்பொருட்டு" என்னும் குறளைப்பின்பற்றி நட்புற வோடு இடித்துரைப்பதும உண்டு. அந்த முறையிலேயே விகடன் தீபாவளி மலரில் வைஷ்ணவம் பற்றி பாலாதாசன் எழுதிய கட்டுரையை மறுத்து எழுதிஞேம். நமது மறுப்பின் ந்யாயத்தை உணர்ந்து விகடன் பத்திரிகை வாளாவிருந்துவிட்டது. இப்படி வாளாவிருந்தால் போதாது என்று திருவுள்ளம்பற்றிய எம்பெருமான், திருச்சி மாவட்ட பலருக்காகத் திருச்சியில் சுற்றுப்பிரயாணம் செய்துவந்த விகடன் ஆசிரியர் குழுவை நம்மை பேட்டி காணச்செய்து. 10—1—71 விகடனில் நம்முடைய பெருமை களை வெளியிடும்படி செய்தருளினன். விகடனல் தொடங்கப் பெற்ற விவாதத்தில் ஸுதர்சனத்தால் வெற்றிக்கொடி நாட்டப்படும் சமயத்தில் இக்கட்டுரை விகடனிலேயே வெளிவரும்படி நேர்ந்திருப்பது பரமாத்மஸங்கல்பத்தா லொழிய வேறென்றால் ஆகுமோ? அக்கட்டுரையைக் கீழே தருகிறோம் காண்மின்.

## சோழநாட்டில் சோழியர்

"சோழியன் குடுமி சும்மா ஆடுமா? என்று ஒரு பழமொழி உண்டே! அது என்ன?" என்று கேட்கிறோம் திருச்சியில் வாழும் சோழியப் பிரமுகரான திரு எஸ். கிருஷ்ணசாமி அய்யங்காரை. (அவர் 'ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனம்' என்ற பத்திரிகையின் ஆசிரியர்.)

"ஆமாம்" என்று புன்னகையுடன் விளக்குகிருர் திரு. அய்யங்கார். ரசமான விஷயம் சொல்கிருர். "விஷ்ணுகுப்தன் என்கிற சாணக்கியனைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே!— நந்தர்களால் குடுமி பற்றி இழுக்கப்பட்டு, அவமானப்பட்டு, "இந்த நந்தர்களைப் பூண்டோடு ஒழித்தே தீருவேன்" என்று சபதம் செய்து அதை நிறைவேற்றவும் செய்தானே! அந்தச் சாணக்கியன் எங்கள் சமூகத்தைச் சேர்ந்தவன். சோழியர்கள்

எடுத்த காரியத்தைச் சாதித்தே தீருவார்கள் என்கிற பொதுவான அர்த்தத்தில்தான் அந்தப் பழமொழி பிறந்தது!''

அரசியலில் சாணக்கியன் பரம்பரை போனாலும், பக்தியில் ஆழ்வார்களின் பரம்பரையைச் சேர்ந்தவர்களாம் இவர்கள். ஆழ்வார்களில் அந்தணர்களான பெரியாழ்வார், மதுரகவியாழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார், ஸ்ரீஆண்டாள் என்கிற நால்வர்இவர்கள் சமூகத்தைச் சேர்ந்தவர்கள். ஆச்சாரியர்களும் பலர் இவர்களில் உண்டாம். நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திற்கு வியாக்கியானம் அருளிய பெரியவாச்சான்பிள்ளை இவர்கள் மூதாதையாம்.

''சோழ தேசத்தில்தான் ஆதி பூர்வசிக ஸ்ரீ வைஷ்ணவ குடும்பங்கள் 3700 இருந்தன. அங்கிருந்துதான் ஸ்ரீவில்லிப்புத்தூர், திருக்கோட்டியூர், ஆழ்வார்திருநகரி, தென்திருப்பேரை, மாறு மதுரை, பெருங்கருணை முதலான இடங்களுக்குச் சென்றார்கள். ஆதிவாசம் சோழ தேசமாதலால், 'சோழியர்' என்று அழைக்கப்பட்டார்கள்'' என்கிறார் தம் இனத்தைப்பற்றி. ''உங்களுக்குச் சமாசாரம் தெரியுமா? பெரியவாச்சான்பிள்ளை ராமாயணத்தின் சாரம் முழுவதையுமே திரட்டிக் கொடுத்து விட்டார். இனி அதில் மிச்சம் ஒன்றுமில்லை என்பதற்கடையாளமாக 'சோழியன் சுவைத்த சக்கை-ராமாயணம்' என்று ஒரு வழக்குக் கூட உண்டு!'' என்கிறார் திரு. அய்யங்கார்.

பாரதீய பூர்வசிக ஸ்ரீ வைஷ்ணவ சபாவிற்கு இப்போது திரு. அய்யங்கார்தான் தலைவர். அது தவிர வேறு நாலு மத சம்பந்தமான ஸ்தாபனங்களுக்குத் துணைத்தலைவராக இருக்கிறார். புத்தூர் அக்கிரகாரத்தில் அவர் வீட்டு வாசலில் 'எம். ஏ. பி. எல். அட்வகேட்' என்கிற பெயர்ப் பலகையும் தொங்குகிறது. அவரைப் பார்க்கும்போது, கல்வியும் நம் தெய்வ ஆசாரமும் வேறு வேறு அல்ல; இந்த இரண்டுமே ஓர் நிழலடியில் சக வாழ்வு நடத்த முடியும் என்ற எண்ணம் தான் தோன்றுகிறது.

*நம்மைக் கண்டபடி இகழும் சர்மாவும், சாஸ்திரியும் விகடன் நம்மைப்பற்றி எழுதியிருப்பதைக்கண்டு தெளிவு பெறுவார்களாக. உண்மையில், சர்மாவும், சாஸ்திரியுங்கூட நம்மோடு சில மணிநேரம் பழகினார்களானால 'விகடன் எழுதியது பொருந்தும், பொருந்தும்'' என்று ஆமோதிப்*

பார்கள் என்பதில் ஐயமில்லை. பழகாத தோஷமேயொழிய வேறில்லை.

நமக்கு அத்வைதிகளிடமோ, சைவர்களிடமோ எவ்வித விரோதபாவமும் கிடையாது. அவர்களை நமது நெருங்கின ஸஹோதரர்களாக பாவித்துவருகிறோம் நாம். அவரவர்கள் அவரவர் மதத்தைப் பின்பற்றிக்கொண்டு, பொதுமேடைகளிலும், பொதுஜனப் பத்திரிகைகளிலும் பிற மதங்களை இகழாமல் ஆத்திகர் அனைவரும் ஒற்றுமையோடு நாத்திக ப்ரசாரத்தை முறியடித்துக்கொண்டு வாழ்வதுதான் ஆத்திகம் வளரும் வழி என்பதை உபதேசிப்பதோடல்லாமல் நடைமுறையிலும் நடத்திக்காட்டுகிறோம் நாம். நமது ஆத்திக ஸஹோதரர்களால் இந்த சகிப்புத்தன்மைக் கொள்கை மீறப்படும் போதே,—வைணவம் இகழப்படும் போதுதான்— நாம் அதைத் தாக்கி எழுதி அஞ்சாமல் உண்மையை நிலைநாட்டி வருகிறோம். விகடன் தீபாவளி மலரில் வைணவம் இகழப்பட்டதால்தான் இவ்விவாதத்திலும் தலையிட்டோம். சமீபத்தில் இந்து தேவாலயப் பாதுகாப்பு மாநாட்டில் அத்வைதிகளோடும், சைவர்களோடும் ஒருங்கேநின்று நாம் ஆத்திகத்தைப் பாதுகாக்க அரசோடும் போராடி வருவதை ஆத்திகவுலகம் அறியும். இத்தகைய நம்மைக்குறித்து வீணான சொல்லம்புகளை வீசுவதால் யாது பயன்? நிற்க.

ஆதிசங்கரர் காலம் வரையில் நமது பாரத நாட்டில் நாராயணனே ப்ரஹ்மருத்ராதி தேவர்களையுள்ளிட்ட ஸகலலோகத்தையும் படைத்தளித்தழிக்கும் முழுமுதலான பரம்பொருள் என்னும் உண்மை வைதிகர்கள் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு வந்தது. நாயன்மார்கள் காலத்திலிருந்தே இதற்கு ஆட்சேபம் தோன்றியது. அப்பயதீக்ஷிதர் காலத்திலிருந்தே வைஷ்ணவர்களைப் பெரும்பான்மையினராகக் கொண்டிருந்த அத்வைதஸமூஹம் ஸாக்தர்களும், சைவர்களும் நிறைந்ததொரு ஸமூஹமாக மாறத்தொடங்கி, ஷண்மத ஸ்தாபந ப்ரசாரம் முதலான பல பொய்ப் பிரசாரங்களால் இன்று திருத்தவே முடியாத

நிலையை அடைந்து விட்டது. இதைத் திருத்துவது நமது நோக்கமல்ல.

அறிவில் கீழ்நிலையிலுள்ளவர்கள் ஆரம்பப்பாடசாலையிலும், அதற்கும் மேல்நிலையிலுள்ளவர்கள் உயர்நிலைப் பள்ளியிலும், அதற்கும் மேல் நிலையிலுள்ளவர்கள் கல்லூரிகளிலும்தான் படிக்கவேண்டும். அதுபோலவே இவ்வுலகப் பலன்களையே விரும்பி ஆடுகோழிகளை பலிகொடுக்கும் மன நிலையிலிருப்பவர்கள் சாக்தர்களாகவும், அதற்கும் மேல் நிலையையடைந்து பரமாத்ம ஜ்ஞானத்தைப்பெற விரும்புகிறவர்கள் சைவர்களாகவும், பரமாத்ம ஜ்ஞானத்தைப்பெற்று அவனை அடைய விரும்புகிறவர்கள் வைஷ்ணவர்களாகவும்தான் இருக்கவேண்டும். இதில் எவ்விதக் குழப்பமும் கூடாது. ஆரம்பப் பாடசாலையிலிருக்கும் பையனை உயர்நிலைப் பள்ளியிலோ, கல்லூரியிலோ சேர்க்க முடியாது. கல்லூரியிலிருப்பவனை ஆரம்பப் பாடசாலைக்கு வரும்படி நிர்ப்பந்திப்பதும் நியாயமன்று. இவ்வுண்மையை இந்நூல் தெளிவாக நம் நாட்டின் அறிவாளிகளுக்கு உணர்த்தும். இதற்காகவே அத்வைத சமூகத்திலுள்ள அறிவாளிகளுக்கு (உயர்நிலைப்பள்ளியிலிருந்து தேறி, கல்லூரியை அடையத் தகுதிபெற்றவர்களுக்கு) நமது இந்நூலைப் படிக்க வாய்ப்பளிக்கும்படி கேட்கிறோம் நாம்.

சர்மாவும், சாஸ்திரியும் இவ்வாய்ப்பை அளிக்க மறுத்தார்களானால் வைஷ்ணவர்கள் செய்யவேண்டிய கடமை ஒன்று உளது. தங்களுக்குத் தெரிந்த அத்வைத பண்டிதர்களுக்கும், அத்வைத ஸமூஹத்திலுள்ள நிஷ்பக்ஷபாதிகளான அறிவாளிகளுக்கும் நம்மிடமிருந்து இந்நூலை இலவசமாகப் பெற்று அளிக்கவேண்டும். ஆதிசங்கரர் நாராயணன் ஒருவனையே ஸகல தேவர்களையும், ஸகல லோகங்களையும் படைத்தளித்தழிக்கும் முழுமுதல்வனாக நிலைநாட்டியுள்ளார் என்பதை அவர்களை உணரவைக்கவேண்டும். இதைச் செய்தால்தான் நமது தமிழ்நாட்டு அத்வைதிகளிடையே இன்று பரவிவரும் விஷ்ணுத்₃வேஷம் குறைவடைந்து நமது நாட்டிற்கு விமோசனம் ஏற்படும்.

ஆக, ஆதிசங்கர ஷண்மத ஸ்தாபந ப்ரசாரம் அப்பட்டமான பொய்யென்று கையிற்கனியாகவும், வெள்ளிடைமலையாகவும் காட்டித்தரும் இந்நூலினால், இந்துமதம் என வழங்கப்படும் நமது மதத்தின் உண்மை ஸ்வரூபம் விளக்கப்பட்டதாயிற்று. ஆதிசங்கராசார்யரைப் பின்பற்றி வேதாந்தக்கொள்கையில் அத்வைதிகளாயிருப்பவர்களும், கடவுட்கொள்கையில் விஷ்ணு பாரம்யத்தை ஏற்றுக் கொண்டவர்களாயிருப்பதுதான் ஆதிசங்கர பக்தர்கள் என்று பெருமை கொள்ளுகிறவர்களுக்குப் பொருந்தும் என்று அசைக்க முடியாதபடி நிலைநாட்டப்பட்டதாயிற்று.

இவ்வசைக்கமுடியாத உண்மையை விதண்டாவாதங்களினால் மறுபடியும் சர்மாவோ, சாஸ்திரியோ, அல்லது வேறு எவருமோ மாற்றமுயற்சிசெய்தார்களானால், இந்நூலுக்கு அநுபந்தமாகப் பல கட்டுரைகளை எழுதி நாம் இவ்விஷயத்தை நிலைநாட்டி அவற்றையும் இலவசமாகவே அறிவாளிகளிடையே பரப்புவோம். **"ஸத்யமேவ ஜயதே"** [உண்மையே வெல்லும்] என்னும் வேதவாக்கும், **"லாப₄ஸ் தேஷாம் ஜயஸ்தேஷாம் குதஸ்தேஷாம் பராபவ₄: | யேஷா மிந்தீ₃வரஶ்யாமோ ஹ்ருத₃யே ஸுப்ரதிஷ்டி₂த: ||"** [காயாம்பூ வண்ணன் நிலைபேர்க்கவொண்ணாதபடி எவர்களுடைய ஹ்ருத₃யகமலத்தில் வாழ்கின்றானோ அவர்களுக்கே இம்மை மறுமைப் பேறுகள் அனைத்தும் ஸித்திக்கின்றன; வெற்றியும் அவர்களையே வந்தடைகின்றது; அவர்களுக்குத் தோல்வி ஏற்பட இடமுண்டோ?] **"யத்ர யோகே₃ஶ்வர: க்ருஷ்ண: யத்ர பார்த்தோ₂ த₄நுர்த₄ர:| தத்ர ஸ்ரீர் விஜயோ பூ₄திர் த்₄ருவா நீதிர் மதிர்மம ||"** [எவ்விடத்தில் யோகே₃ஶ்வரனான கண்ணன் எழுந்தருளியிருக்கிறானோ, எங்கு வில்லையேந்திய பார்த்த₂ன் உறுதியுடன் இருக்கின்றானோ அங்கேயே எல்லாச் செல்வங்களும், வெற்றியும், பெருமையும், நீதியும் உள்ளன என்பதே என் உறுதியான ஸித்தாந்தம்] என்னும் ரிஷிகள் வாக்கும் அழியாதவை என்பது இவ்விவாதத்தால் மறுபடியும் ஒருமுறை நிலைநாட்டப்பட்டது. ஸத்யஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபியான ஸ்ரீமந்நாராயணனும், அவனுடைய

பக்தியில் தலைசிறந்தவரான ஆதிசங்கரரும் இவ்விவாதத்தில் வெற்றிபெற்றார்கள். அடியேன் இதற்குக்கருவியாயிருந்தவனேயொழிய வேறில்லை.

ஷண்மத ஸ்தாபந சர்ச்சை முற்றிற்று

## இப்புத்தகத்தைப் பெறும் அறிவாளிகட்கு

# வேண்டுகோள்

இன்று நம் நாட்டில் எல்லாத் துறைகளிலும் பொய்யும் ஊழலும் மலிந்துவிட்டன. இதற்கு அடிப்படைக்காரணம் மதத்துறையிலும் அவை புகுந்துவிட்டதேயாகும். சில நூறு வருடங்களாக மதத்துறையில் புகுந்துவிட்ட சில பொய்ப் பிரசாரங்களை அம்பலப்படுத்தும் இந்நூலை நடுநிலைநின்று வாசித்துப் பாருங்கள். இதில் யான் எழுதியிருப்பதில் உண்மையிருப்பதாக உங்கள் மநஸ்ஸாக்ஷி கூறிற்றாகில், உங்கள் நண்பர்களையும் இதை வாசிக்கச் செய்யுங்கள். இதுபற்றி உங்கள் கருத்துக்களை எனக்குத் தெரிவிக்கத் தோன்றிற்றாகில், கூசாமல் எனக்கு எழுதுங்கள். "நம் நாட்டில் உண்மை ஓங்கவேண்டும், பரமாத்மாவின் அருள் நமது நாட்டின்பால் வெள்ளமிடவேண்டும்" என்னும் ஆசையாலேயே உங்களுக்கு இவ்வேண்டுகோள் விடுக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள,

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
'ஸுதர்சனம்' ஆசிரியர்.

# சங்கரரும் வைணவமும்

## அநுபந்தம்-1

### நடுநிலையாளர்களின் தீர்ப்புகள்:

1. H. H. ஸ்ரீ ஸ்வாமி வேங்கடேச்வரானந்தா, கோலார் அவந்தி பீடாதிபதி, தலைவர், ஆரோக்ய ஆஸ்ரமம், 34, 3-வது மெயின்ரோடு, நேரு நகர், அடையார், சென்னை-20 (டெலிபோன் நெ. 75961)

சங்கர மடங்களில் ஒன்றான கோலார் அவந்திபீடத்தின் அதிபதியாயிருக்கும் ஆரோக்யாஸ்ரமத் தலைவர் ஸ்ரீ ஸ்வாமி வேங்கடேஸ்வரானந்தர் 'சங்கரரும் வைணவமும்' என்னும் நமது நூலை ஆராய்ந்து பார்த்துவிட்டு, நமக்கு 'வித்யா விஶாரதர்' என்னும் விருதை அளித்து நூலுக்கும் மதிப்புரை கொடுத்திருக்கிறார். ஆரோக்யாஸ்ரமத்தினுடையவும், அதன் தலைவருடையவும் பெருமைகள் கீழே ஆங்கிலத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. அடுத்த பக்கத்தில், ஆஸ்ரமத் தலைவர் நமக்கு (ஆங்கிலத்தில்) அளித்த விருதும், மதிப்புரையும் அச்சிடப்பட்டு, தமிழ் மொழிபெயர்ப்பும் கொடுக்கப்படுகிறது. அத்வைதமதத் தலைவர்களில் முக்கியமானவரான ஸ்வாமி வேங்கடேஶ்வரானந்தரின் இம்மதிப்புரை நமது நூலுக்குத் தலைசிறந்த தீர்ப்பாகத் திகழ்கின்றது.

## AAYUR AISWARYA AAROGYA ASRAMAM

Mani Mantra Oushadalayam, Spiritual Study Circle - Healing Centre, No 34 Third Main Road, Nehru Nagar, Adayar, Madras-20 (Telephone: 75961)

Presided by H.H. Jagadguru Sankaracharya, Swami Sivananda, Swami Nityananda, Sri C. Rajagopalachariar, Dr. V. V. Giri, Sir C. P. Ramaswamy Iyer.

Governors: Sri M. Anantasayam Ayyangar, Sri Bishnuram Medhi, Dr B Ramakrishna Rao, Sri K. Santanam, Dr. K.M. Munshi & Sri B D. Jatti.

Founded in 1943 by His Holiness Sri Swami VENKATESWARANANDA, Registered Ayurvedic Practitioner (West Bengal) 64th Successor to Jagadguru Sankaracharya Samasthanam (Kolar Avanthi)

Honorary M. & R L. for all Central Jails, Special Sub-Jails, District Jail, State Jail for Women, Sub-Jails, Borstal School; After Care Home, State Discharged Prisoners' Aid Society, Reception Home, Vigilance Home, Stri Sadhana Approved Schools for Girls, Society for Protection of children, Seva Samajam, Care Camp & Care Home (Police) Daya Sadan, Corporation Special Home, Devasthanams, Mental Hospital & Central Prison (Pondicherry)

Thursdays Silence & Sundays Sat Sangh.

# FOUNDER'S AWARD

THIS IS TO TERM SRI Ubaya Vedantha Swami S. Krishnaswamy Iyengar, Editor:- "Sri Vaishnava Sudarsanam" Tiruchi-17

as VIDYAA VISARADHA as He is a devotee among advocates and an advocate among devotees, capable of telling things in a telling way without fear or favour and his "SANKARARUM VAINAVAMUM" is worth its weight in Gold.

Maha Sivarathiri Day, *Sd/- His Holiness*

24-2-1971. **Sri Swami Venkateswarananda**

HEAD OF AROGYA ASRAMAM.

(இதன் தமிழ் மொழிபெயர்ப்பு)

## ஆரோக்யாஶ்ரமத் தலைவர் அளித்த விருது

ஸ்ரீ உபயவேதாந்த ஸ்வாமி S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ஆசிரியர், ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம், திருச்சி-17) அவர்களுக்கு இவ்வாஸ்ரமம் *"வித்₃யா விஶாரத₃ர்"* என்னும் விருதை அளிக்கிறது

(ஏனெனில்)

அவர் அட்வகேட்டுகளுக்கிடையே ஓர் பக்தராகவும், பக்தர்களுக்கிடையே ஓர் அட்வகேட்டாகவும் விளங்கி, விஷயங்களை அழுத்தமான முறையில், பயமோ, பக்ஷபாதமோ இல்லாமல் எடுத்துரைக்க வல்லவராயிருக்கிறார். 'சங்கரரும் வைணவமும்' என்னும் அவரது நூல் எடைக்கு எடை தங்கம் மதிப்புடையது.

(ஒம்) H. H. ஸ்ரீ ஸ்வாமி வேங்கடேஶ்வரானந்தர்.

*மஹாசிவராத்திரி-நாள் (24—2—71.)*

—※—

## 'ஸுதர்சனம்' ஆசிரியரின் குறிப்பு

பொதுவாக நாம் பட்டங்களை ஏற்பதில்லை. ஆயினும், இந்த சந்தர்பத்தில் மஹாசிவராத்திரியன்று வழங்கப்பட்ட இப்பட்டம் திருமழிசையாழ்வாருக்கு 'ப₄க்திஸாரர்' எனப் பட்டமளித்த முக்கட்பிரானும், அவரது அவதாரமான ஆதிசங்கரரும் நமக்கு அளித்த பட்டமாகக் கருதி, இதை ஏற்கிறோம்.

2. T. U. K. ஜக₃தீ₃ச சர்மா, ஔந்துகேம்ப், பூனா-27.

உபயக்ஷேமம்

*திருவுறைமார்பன் ஶ்ரிய:பதியின் திருக்கரத்து விளங்கும் சுடராழியாகவே கொள்ளலாம்படி ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தால் ஸ்ரீமந்நாராயணபரத்வத்தை நிலைநாட்டி, பண்டிதர்களும் பாமரர்களும் கொண்டாடி வரவேற்குமாறு, "சங்கரரும் வைணவமும்" என்கிற நூலில், வரஹூர் ப்₃ரஹ்மஸ்ரீ கல்யாணஸுந்தர சாஸ்திரிகள் எழுதியனுப்பிய (தங்கள் 9 கேள்விகளுக்கு) பதிலும், அவைபற்றிய தங்கள் விமர்ஶமும் கண்டு மிக்க மகிழ்ச்சியாகிறது. ஸ்ரீஸுதர்ஶனருககுப் பலலாண்டு பாடுகிறேன்.*

*இந்த இலவச வெளியீட்டைககண்டு பலமுறை படித்துப்பார்த்து வரஹூர் ப்₃ரஹ்மஸ்ரீ கல்யாண ஸுந்தர சாஸ்த்ரிகளுக்கும், ப்₃ரஹ்மஸ்ரீ ஆங்கிரஸ S. வேங்கடேசசர்மா அவர்களுக்கும் தனித்தனியே தபால் எழுதி ஷை தபாலின் காப்பியையும் தங்களுககு அனுப்பியுள்ளேன்.*

*உயர்தனிப் பெருமை சான்ற தேவாதிதேவன் தனது பேரருள் நலத்தால் உண்மை ஓங்கி, ஸத்யஜ்ஞாநநந்தப் பெருவெள்ளம் நம் நாட்டில் நிறைந்து பரமவைதிகர்களும் ஆஸ்திகர்களோடு கடவுட்கொள்கையில் தெளிவுசாண விழையும் பெருமக்களும் ஆத்மலாபமடைந்து கிருதார்த்தராவார்களாக.*

*ஶ்ரிய:பதி தன் அருளாணையால் இதற்குக் கருவியாயிருந்த தாங்கள் எல்லா மங்களங்களையும் பெற்று இன்னும் நூறாண்டு வாழ அருள்செய்வானாக!*

**ஸ்ரீ உமாபதி ஜக₃தீ₃ஶ ஶர்மா**

## ஆங்கீரஸ வேங்கடேச சர்மாவுக்கு எழுதிய கடிதம்

பிரமஸ்ரீ ஆங்கிரஸ S. வேங்கடேச சர்மா அவர்களுக்கு உமாபதி ஜகதீசசர்மா அநேக நமஸ்காரம். உபயக்ஷேமம். கடந்த பராபவ வைகாசி-மீ ஸுதர்சனம் பத்திரிகையில் காணப்பெற்ற பரதத்வ

விளக்கம்பற்றிய சர்ச்சைக் கேள்விகள் 9ம் பல நாளாய் பதிலிறுக்கப் பெறுமலிருந்ததைத் தாங்கள் பொறுப்பேற்றுக்கொண்டு, போலகம் ஸ்ரீராமாசாஸ்த்ரிகளைக்கொண்டு ஒரு கட்டுரை எழுதுவித்ததாகவும், மற்றும் இரண்டு மாதங்கள் கடந்து காமகோடி பிரதீபத்தில் ஷை கேள்விகளைத் தொடாது ஏதோவொரு கட்டுரை எழுதியதும் இவற்றிலெல்லாம் ஷை கேள்விகள் பதில் சொல்லப்படாமையைக் கண்டு, தாங்கள் பின்னும் முயன்று சென்னை மயிலை விவேகாநந்தா கல்லூரி வடமொழிப் போரசிரியர். பாஷ்யபாவக்ஞ பிரமஸ்ரீ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகளையணுகி அக்கேள்விகளுக்குப் பதில் தருமாறு வேண்டிநின்றதும். ''ப்ரமாண நிஷ்கர்ஷம்'' என்கிற பெயரால் ''ஷண்மதஸ்தாபன சர்ச்சை''க் கட்டுரைக் கர்த்தாவாகிற ஸ்ரீஸுதர்சநரிடமிருந்து தாங்கள் 22 கேள்விகள் விடுத்துப் பதில் கேட்டிருந்ததும் வேறு எந்த பத்ரிகையிலும் இடம்பெறுது ரகஸ்யமாக இருந்ததும், ஷை ஆசிரியர் ''ஸுதர்ஶநர்'' தன் பதில்களை காய்தல் உவத்தலில்லாத—அழகு சான்ற ஸாத்விகரீதியில் மிகச் செம்மையாகத் தன் பத்ரிகையிலே பலரும் காணுமாறு வெளியிட்டுத் தங்களுக்கும் அனுப்பியுள்ள நேர்மையும் காணலாயிற்று.

ஷை பதிலைக் கண்டபின் பிரமஸ்ரீ வரஹூர் சாஸ்த்ரிகள் எழுதிய ''ஸ்ரீசங்கரரும் ஷண்மதமும்'' என்னும் 50 பக்கக் கட்டுரையும் அதற்குத் தங்கள் 5பக்க முன்னுரையும் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியருக்குக் கிடைத்த விபரமும் ஷை 9 கேள்விகளின் பதிலும் பற்றியும் அவற்றைப்பற்றிய ஆராய்ச்சி விளக்கத் தெளிவும் ஷை பத்திரிகையில் பலரும் காண வெளிவந்துள்ளது. இந்த வாத ப்ரதிவாதங்கள்—ஶங்கா சமாதானங்கள்—தெளிவு விளக்கங்கள் பலரும் காணுமாறு '' ஸ்ரீஸுதர்ஶநர் '' தயவால் ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம் இலவச வெளியீடாக வெளியிடப்பட்டுள்ளது.

தங்கள் ''ஷண்மதமும் சங்கரரும்'' கட்டுரை, கையெழுத்துப் பிரதியும், 5 பக்க முன்னுரையும் மற்றும் பல விஷயங்களும், 9 கேள்விக்குப் பதிலும், ஆஸ்திகர்கள் பலரும் கண்டு இந்தச் சர்ச்சையைப்பற்றிய உண்மையையும், உயர்வையும், நேர்மையையும் அதன் பேரில் ஸ்ரீஸுதர்ஶநரின் தெளிவு விளக்கத்திறனும்வும் ஓரளவு ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்ஶனத்தில் வந்துள்ளது போலத் தங்களது பத்ரிகை ஒன்றில் வெளிவருவது சிறப்பல்லவா!

ஸ்ரீவைஷ்ணவத்திற்கு நீங்களும் தொண்டு செய்வதாகச் சொல்லி "அரியும் சிவனும் ஒன்று"— என்பதைப் பறைசாற்றிக் கொண்டுள்ள சிறப்புக்கு இது அவசியம் அல்லவா?

ஆலய வழிபாடுகளில் இனி வருங்காலத்தில் வைஷ்ணவ திவ்யதேசங்கள் எப்படி நிர்வஹிக்கப்படுமோ பொருத்திருந்து தானே பார்க்கவேண்டும். பரமவைதிகர்களின் திருவுள்ளமும். பரமாசார்யர்களின் திருவருளும் ஸர்வலோக ஶரண்யனின் ஸங்கல்பமும் எப்படியுள்ளதோ?

ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகளின் வரிசையில் 52-வது பீடாதிபதியாக விளங்கிய ஸ்ரீசங்கரானந்தர் (கி. பி 1385–1417) என்கிற ஆசார்யாள் வைணவமத்வ மதங்கள் பரவி வருவதைத் தடுத்து அத்வைதமதம் பரவுவதற்கான முக்கிய முயற்சிகளை மேற்கொண்டார், என்று குறிப்பிடுகிறார் *ஒரு ஆசிரியர்!*

கடந்த 7—4—71ல் பாஷ்யபாவக்ஞ-பிரமஸ்ரீ கல்யாணஸுந்தர சாஸ்திரியார் அவர்களுக்கும் மிகப்பணிவான தபால் ஒன்று எழுதி எழுதியுள்ளேன். ஸ்ரீவைஷ்ணவ சைவ ஆராதனங்கள் வேதோக்தமாக சிறந்தவர்களால் உரிய ஆகமங்களில் குறிப்பிட்டுள்ள வண்ணம் செம்மையாக நடைபெறும்படி பார்த்துக்கொள்ள வேண்டிய பொறுப்புள்ளவர்கள் ஒரு முகமாகமுயன்று செயல்பட வேண்டியநிலையில், பாவை வெம்பாவை வேறுபாடுகளைப்போலவே, விஷ்ணுத்வேஷமும் வைஷ்ணவ பாகவதாபசாரமும் தேடிக்கொள்ளலாமா?

*அநேக நமஸ்காரம்.*

தங்கள் அன்புள்ள,

**உமாபதி ஜகதீச சர்மா,**

## உமாபதி ஜக₃தீ₃ச சர்மா வரஹூர் சாஸ்திரிக்கு எழுதிய கடிதம்

### ஸ்ரீமந் நாராயண ஸ்மரணம்

*பிரமஸ்ரீ பாஷ்யபாவக்ஞ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகளுக்கு உமாபதி ஜகதீசசர்மா ஹ்ருதய பூர்வமான நமஸ்காரங்கள் பல செய்து விண்ணப்பித்துக்கொள்வது. உபயக்ஷேமம். தங்கள் சம்ஸ்கிருதப் புலமைக்கும் ஹிந்து*

தத்துவ ஆய்வுப்பணிக்கும் பாராட்டுதலை மேற்கொண்டு, வைதிக ஆஸ்திகப் பெருமக்கள், நாளை 9-4-71ல, ஸ்வஸ்திஸ்ரீ சாதாரண பங்குனி-மீ உத்திரத்திருநாளில, தங்கள் ஷஷ்டி அப்₃த₃பூர்த்திப பெருவிழாவில் ஒரு பொற்கிழி வழங்கப் போவது (தினமணி 22 மார்ச்சு பத்ரிகையில) காணவந்தது. அறிஞர்களை மதித்து ஆதரிக்கும நம் பண்பு வாழ்க! மிக்க மகிழ்ச்சி.

கடந்த சில மாதங்களாக ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநம் கேட்டிருந்த, பரதத்வ நிச்சயம் பற்றிய சர்ச்சைக் கேள்விகள் ஒனபதும் பதிலளிக்கப்படாதிருந்ததும், பிரமஸ்ரீ ஆங்கீரஸ S. வேங்கடேசசர்மா அவர்கள் பொறுப்பேற்றுக்கொண்டு அவற்றைத் தங்களிடம் கொடுத்து பதில வேண்டிநிற்கத் தாங்கள் ப்ரமாண நிஷ்கர்ஷம் செய்துகொள்ளும பொருட்டு 22 கேள்விகள் ஸுதர்சனம் ஆசிரியருககு எழுதியனுபபி யதும், அவற்றிற்கு அவர் காய்தல் உவததல இல்லாத— பூர்வர்களான பெரியோர்கள், பரமாசார்யர்கள் விஷயததில் விருப்பும வெறுப்பும் காணக்கிடைக்காதபடி பரமஸாத்விக ரீதியில ஆஸ்திக கிரந்தங்களின் ஆதாரததோடியைந்த பதிலெழுதியனுப்பியுள்ள சிறப்பையும கண்டு, தங்கள் பதில்களையும் பரமவைதிகர்களும் ஆஸ்திக பெருமக்களும் மிக்க ஆர்வத்தோடு எதிர்பார்த்து நிற்கின்றார்கள்!

ஆனால், தாங்கள் ஸ்ரீவேங்கடேசசர்மா அவர்களின் முன்னுரையோடு கூடிய கட்டுரையொன்றை எழுதி (கையெழுத்துபபிரதி) அனுப்பியுள்ளதும ஸ்ரீவைஷ்ணவ பாகவதர்கள் விஷயத்திலும் பூர்வாசார்யர்கள் விஷயததிலும வாய்ககுவந்த அவதூறு—நிந்தனைகளைச் செய்திருபபதும, அர்த்தவாதங்கள் என்று பல நிரூபணங்களைத் தட்டிக் கழித்தும், ஸ்ரீஆசார்யாளின் பாஷ்யங்களையும்—'ப்ரஸ்தான த்ரய ஸஹஸ்ரநாமபாஷ்யங்களோ இவ்விஷயங்களில் என்ன செய்யமுடியும்? என்று ஸ்ரீஆசார்யஹ்ருதய விருத்தமான முறையில பதிலெழுதியுள்ளீர்கள்.

பல காலமாகவே அத்வைதிகள் ஷண்மதஸ்தாபனத் தின் பெயரால், ஆஸ்திகர்களை ஆறு தெய்வங்களையும்

வழிபடவைத்து ஒரு கூட்டுவழிபாட்டிற்கு (ஒரு குடும்ப வழிபாட்டிற்கு) புது மருமகளின நிலையிலுள்ள பக்திகரு. ஆட்படுத்தி வைத்துள்ளார்கள். "பதி பத்னி" என்கிற உறவிலுள்ள அழகு, பிரேமம்-காதல்-ஏகாக்ர ஏகாந்த பக்தி நிலையிலுள்ள பரவசம் முதலிய சிறப்பியல்வுகள் எல்லோருடைய விஷயத்திலும் ஒரு படித்தாகவென்கிற விவேக விளக்கமே—பகவத்பக்தியிலும் தன்னிகரிலாத—தனக்கு மேலானதென்றொன்றிலாத பரம்பொருளைத் தேர்ந்தெடுத்து ஆராதித்து அனுபவித்து வீடுபெறுதல்தானே வேண்டப்படுவது. இத்தகைய சிறப்பியல்வுகள் ஸ்ரிய:பதியாகிற ஸ்ரீமந்நாராயணன் ஒருவனுக்கே உளது! ஸ்ரீசங்கர பகவத்பாதாள் தெள்ளத்தெளிய பலப்பல வேதவாக்கியங்களாலும் பாஷ்யங்களிலும் உறுதிப்படுத்தியிருக்கவும் தாங்கள் அவற்றையெல்லாம் தள்ளி அநாதரவு செய்து கேவலம் தூஷணச் சுவடியாகவே ஒரு கட்டுரை யெழுதி. அதற்கு ஸ்ரீ. சர்மா அவர்கள் நீண்டதொரு (5பக்க) முன்னுரை தரவும் பெற்று அனுப்பிவைத்துள்ள விபரம் காண வருத்தமாகவே இருக்கிறது.

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர் தன் தனிப் புகழுக்கு இந்த சர்ச்சையில் இறங்கினாரல்லர். வரலாறு விஷ்ணுபரத்வம்பற்றிக் காட்டா நின்ற மறைமுக எதிர்ப்புகளையும போலி பிரசாரங்களையும், தேவதாந்தரங்கள் மாட்டு பொருத்தமில்லாத பொய்யான சிறப்பியலபுகளை பிற்காலத்தவர் ஏற்றிவைத்த இழிதகைமையையும், தக்க ஏதுவோடு எடுத்துக்காட்டி, பண்டிதர்களும் பாமரர்களும் விளக்கம்பெற, நல்லோருக்கு வழிகாட்டுமுகத்தான் ஓயாது சலியாது இந்தப்பரதத்துவ விளக்க விசாரத்தில் தொண்டு செய்துவருகிறார்கள்.

தாங்களோ—எந்த சுயநலத்தின் காரணமாகவோ பிற ஜீவர்களிடத்தில் ஹ்ருதய சுத்தமான கருணை இல்லாமையாலோ, மோக்ஷஸாம்ராஜ்யம் நமக்குமட்டில் போதும் என்கிற பேராசையாலோ, யார் எக்கேடுகெட்டால் நமக்கென்ன என்கிற பொறுப்பற்ற தன்மையாலோ, எதிர்கக்ஷி

பேசி தங்கள் புகழை நிலைநாட்டிக்கொள்ள (இவ்வாவகையில்—வேதவிருத்தமாயும் ஆசார்யஹ்ருதயத்துக்கு உவப்பில்லாத — உடன்பாடில்லாத அவப்பொருள் விளக்கங்கள் செய்து, சொல்லி—எழுதியும்) முயன்று பழிதேடிக்கொள்கின்றீர்கள். அஸாரஸ்வதமான — அநித்யமான — அல்பமான இந்த பொய்ப்புகழுக்கு நீங்கள் ஏன் ஆசைப்படுகிறீர்கள் என்பது விளங்காத புதிராக இருக்கின்றது!

நாஸ்திகப் பிரசாரம் வலிவடைந்து மிகப்பலரை ஆட்கொள்ள நிற்கும் நிலையில், உங்கள் விளக்கமும் அதற்கே உதவிசெய்வதாய் அமையும்போலவிருக்கிறதே! விஷ்ணு-ஆதாரபூர்வமாக ஸ்ரீஆசார்யாளால் தேர்ந்தெடுத்து நிர்வஹிக்கப்பட்டுள்ள விஷயம் மிகத்தெளிவாய் இருக்கச் செய்தேயும் தாங்கள் மாறுகட்சிக்கு, ஓவ்வாக்காரணங்களையெல்லாம் காட்டி தலைதூக்கமுடியாத சில நொண்டிச் சான்றுகளால் பலம்தேடிக்காட்டுவது—கூறுவது எங்ஙனம் அறிவு சான்ற நல்லோர்களால் ஏற்றுக்கொள்ளப்பெறும்?

"விஷ்ணு சிவன், சக்தி, கணபதி முருகன், சூர்யன் என்னும் அறுவருமே அந்த பரப்ருஹ்மம் என நாங்கள் கொள்ளவேயில்லை" என்பதானால் ஷண்மத ஸ்தாபனம் என்னுவது? தாங்கள் எழுதியனுப்பியுள்ள கட்டுரையின் தலைப்பு 'ஸ்ரீசங்கரரும் ஷண்மதமும்' எனனும் விஷயம் எப்படி நிர்வஹிக்கப்படுகிறது என்று தெரிந்துகொள்ள, அறிஞர் உலகம்—ஆஸ்திகநல்லோர் அவாவி நின்கின்றனர் என்பதைத் தயவுசெய்து மனதிற்கொண்டு எல்லோருக்கும் நல்லதொரு வாய்ப்பைத் தந்து கிருதார்த்தராகும்படி தங்களை மிகவும் தாழ்மையுடன் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். இந்த என் விண்ணபத்தில் அபுத்தி பூர்வமாக அறியாமையால் யான் தங்கள் விஷயத்தில் அபசாரப்பட்டிருந்தால் தாங்கள் மிகக்கருணை கூர்ந்து க்ஷமித்தருளுமாறு பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

பணிவார்த்த பலகோடி நமஸ்காரங்கள்,
தங்கள் அன்பன்,
**T. U. K. (உமாபதி) ஜகதீசசர்மா.**

3. K. A. தேவராஜன், 68, ராமஸ்வாமிதெரு, சென்னை-1.

ஸ்ரீமான் உ. வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் தேவராஜன் தாளும் தடக்கையும் கூப்பி அனந்தமான தெண்டன் ஸமர்ப்பித்த விண்ணப்பம். உபயகுசலம். தேவரீர் தயைகூர்ந்து அனுப்பிய "சங்கரரும் வைணவமும்" என்னும் நூல் இரு வாரங்களுக்கு முன்னமே கிடைத்தது. பிப்ரவரி 12ம் தேதி அன்று கிடைத்தவுடனே நூலை வாசிக்கத் தொடங்கினேன். சிறிது சிறிதாக அணில் போன்று பருகினுலொழிய, இப்பெரு விஷயத்தை நன்ருகப் பருகி, தெள்ளிய ஞான அமுதில் வரும் பரதத்துவ நிர்ண யத்தை உலகோர் வியக்க உபந்யஸித்து வாழும் பெரிய வள்ளலான நம் ஜகதாசார்ய ஸ்ரீ P. B. A. ஸ்வாமிபோன்று ஒரே மூச்சில் வாசித்து இதற்கு வாழ்த்துரை வழங்க நம்மால் இயலாது என்று திண்ணமாக முடிவு கொண்டு அடியேன் ஒரு வார காலமாக "தேனே, பாலே, கன்னலே, அமுதே" என்று தித்திக்குமாபோலே வெண்ணெய் போன்று திரட்டிக்கொடுத்த வேதாந்த விழுப்பொருளை ரசித்தேன். அதனால் அடியேனுக்குண்டான பேரின்ப வெள்ளம் பெருக் காறு போன்று நெஞ்சில் கரை கொள்ளாமல் வெளிப்படுவது இச்சிறிய கடிதவளவிலே. நிற்க.

தேவரீருடைய 22 பதில்களும் பொன்னால் பொறிக்கத் தக்கனவாய், பிரம்மஸ்ரீ சாஸ்திரியவர்களின் 9 பதில்களும் தீயில் சுட்டெரித்த சாம்பல் போன்று உள்ளன. தேவரீ ருடைய 9 வினுக்களுக்கு விடையிறுக்க வல்லமை பெருத அபாக்யம்தீர "இனித் தெளிவுபெற்றேன். புத்தூர் ஸ்வாமிக்கு என்ன கைம்மாறு செய்யப்பெறுவனே! எம்பெருமான் திருவுள்ளத்தை எதிர்பார்த்திருக்கிறபடி"—என்று வாய் திறந்து பறைசாற்றினுல் அப்பெரியார் "பாஷ்ய பாவக்ஞ" என்று பட்டம் பெற்றதற்குத் தகுதி வாய்ந்தவர் என்று ஒப்புக்கொள்ளலாம். இல்லையேல் இவர் வாழ்வற்றமை ஸத்தியமாகியது என்று நாம் களிக்கவேண்டும்.

சென்றவாண்டு வீனஸ் காலனியில் நடைபெற்ற "ஶங்கரா ஷண்மதா" பொதுவிழாவில் ஸ்ரீராமர் தினத்தில் அக்ராஸனம் வஹித்த நம் ஸ்ரீ P. B. A. ஸ்வாமி குழுமி யிருந்த அறிஞர்களான Dr. V. ராகவன், காலஞ்சென்ற ஸ்ரீ. K. பாலசுப்பிரமண்ய அய்யர் இன்னும் மற்ற பெரியோர் களனைவரும் மயக்கம் தீர்ந்து மகிழ்வெய்த ஷண்மதங்களைப் பற்றி ஸாரமாக அரைமணி காலம் உபந்யஸித்தார். வேதத்திற்குப் புறம்பான அறு சமயங்களையே நம் பூருவா சார்யர்கள், ஆதிசங்கரர், இவர்களுக்கும் மேல் ப்ரபன்ன ஜன கூடஸ்தரான நம்மாழ்வார் கண்டித்து அறவே அவற்றைக் கனவில பொசுக்கினர் என்றும். ஆதிசங்கரர் "ஷண்மதங்களை ஸ்தாபித்தார்" என்பது அவரது நூலகளைக் காணுத அஞ்ஞானிகள் முழக்கம் செய்யும் அபவாதமென்றும் தமக்கே உரிய பாணியில் உபந்யஸிததார். மேலும் இது பற்றி அவர்க்கு அடியேன் எழுதிய ஓர் கடிதத்திற்கு ஸ்ரீமுகம் அனுப்புகையில் அதில இந்த பொய்பிரசாரத்தை "ஸ்ரீராமாநுஜன்" மூலமாக கண்டிப்பதாகவும் தெரிவித் திருந்தார். அது தற்பொழுது ஸ்ரீஸ்வாமியாலும், தேவரீ ராலும், கண்டிக்கப்பட்டு உலகமளவில் கொண்டாடப் படுகின்றது.

தேவரீர் எழுதியவாறு "ஷண்மத ஸ்தாபன விஷய மான நமது நூல்களும், கேள்விகளும், அத்வைதிகள் சில காலமாகச்செய்து வரும் ஷண்மத ஸ்தாபந ப்ரசாரத்தின் பொய்ம்மையை நிலைநாட்ட எழுந்தவையேயொழிய, ஸந்தேஹத்தை விளக்கிக் கொள்ள எழுந்தவையன்று என்பது நமது நூல்களைப் படிக்கும் சிறுவனுக்கும் விளங்கும்" — அடியேனுக்கு நன்ருக விளங்குகிறது. அடியேனுடைய ஓர் வேண்டுகோள். இன்னும் 10 பிரதிகள் அடியேனுடைய விலாசத்திற்கனுப்பிவைத் தால் அவற்றை அடியேனறிந்த அத்வைத ஸமூஹத்தைச் சேர்ந்த சிலருக்கும், நமது இராமாநுச தர்சனத்தில அவ

தரித்த பாக்கியவான்கள் சிலருக்கும் விநியோகித்து அவர்களையும் இதற்கு விளக்கம் அறியலாம்படி செய்யவேண்டும். இது அடியேனுடைய பணி.

நம்பெருமாள் திருவருளால் தேவரீருடைய ஸம்பந்தம் அடியேனுககு வாய்த்தது. தேவரீர் ஸேவை முந்தியால் பேட்டை ஸ்ரீகிருஷ்ணன் கோவில் மஹாசமப்ரோக்ஷணத்திலும், திருமலையில ' நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர்காள்! இதோர் அற்புதம் கேளீர்'' என்று நடைபெற்ற ஸ்ரீராமக்ரது மஹோத்ஸவத்தில் அந்வயித்து கோஷ்டியை அலங்கரித்த நன்னளிலும் அடியேனுக்கு வாய்த்த பெரு வாய்ப்பாகும். ஆயினும் நேர்முகமாக உறவு கிடைககப் பெறுவிடினும் விகித மூலமாய் தேவரீருடைய திருவருளுக்கு அடியேன பாத்திரமாவது அடியேன் செய்த தவப் பயனே!

வாசகதோஷம் க்ஷமிக்கவும்.

**அடியேன். K. A. தேவராஜ தாஸன்.**

## 4. ஸ்ரீ B. R. புருஷோத்தம நாயடு

(சென்னைப் பல்கலைக்கழக முன்னுள்பேராசிரியர், ஈடு ஸ்ரீவசநபூ₄ஷணம், ஆசாரயஹ்ருத₃யம் ஆகியவற்றிற்குத் தமிழாக்கம் செய்து தமிழ் கூறும் நல்லுலகத்திற்குப் பேருதவிபுரிந்த பெரியார்)

அன்புமிக்க ஸ்ரீமத் ஸ்வாமிகள் திருவடிகட்கு வணக்கம். அன்புடன் அனுப்பிய 'சங்கரரும் வைணவமும்' என்ற தலைப்பு அமைந்த புததகம் கிடைத்தது. மிக்க நன்றி. முற்றும் படித்தேன். ஆய்வும, கூறப்பட்ட வினு விடைகளும் சிறந்தமுறையில், துளக்கலாகா நிலையில் அமைந்திருக்கின்றன. அரிய பெரிய நுண்பொருள்கள் வெளிவருதற்குக் காரணாகளாயிருந்த அன்பர்கள் பாலாதாசன், சாமா சாஸதிரி என்னும் இவர்களுக்கு முதலில் நன்றியும பின்னர், அவர்கள் எழுதிய கட்டுரைகளை மிகக பொறுமையோடு ஆய்ந்து தக்க விடையிறுத்து அரிய பெரிய இரகசியப்பொருள்களை வெளிப்படுததிய தேவரீருககு வணக்கமும் செலுத்த இத்தமிழ்கூறும நலலுலகம் கடமைப்பட்டிருக்கின்றது. அக்கட்டுரைகள் வெளிவராவிடில் இவ்வரிய பெரிய நுண்

பொருள்கள் வெளிவாராவே? தேவரீர் நூலைப் படிக்கும்போது 'இல்லாதவுலகத்து எங்கும் ஈங்கு இவன் இசைகள் கூரக், கல்லாத கலையும் வேதக்கடலுமே என்னும் காட்சி சொல்லாலே தோன்றிற் றன்றே' என்ற ஸ்ரீராமபிரான் கூற்று நினைவிற்கு வருகின்றது. எவற்றையும் பொறுமையோடு ஆய்கின்ற ஆய்வுத் திறனும, அவற் றிற்குத் தக்க விடை இறுத்து அடக்கும் தெறலும் வாழக.

இங்ஙனம,

*10—2—71.* தங்கள்,

B. R. புருஷோத்தம நாயடு,

5. ஸ்ரீ T. S. ஸௌந்தரராஜன்

21 | 167, லோடி காலனி, புதுடில்லி-3.

இத்துடன் அனுப்பியிருக்கும் இரண்டு 50 பை. தபால் தலைகளைப் பெற்றுக்கொண்டு, தங்களுடைய "சங்கரரும் வைணவமும்" என் னும் அருமையான நூலின் இரண்டு பிரதிகளை அனுப்பிவைத்தால் க்ருதார்த்த₂னாவேன். தஙகளுடைய புலமைக்குத் தலைவணங்குகிறேன். அவரவர் இஷ்ட தே₃வதையை உபாஸிப்பது அவரவா பிறப்பையும் இயல்பையும பொறுத்தது, ஆனல் இந்த உத்ஸாகத்தை முனனிட்டு, சரித்திர உண்மைகளை மாற்றியமைக்க முயற்சிப்பது இனறு பரவியுள்ள (intellectual dishonesty) அறிவு மோசடியைக் காட்டுகிறது. இத்தகைய பொய்ப் பிரசாரததை அடக்கும்விதம் தாங்கள் எழுதும வியாஸங்களைப் படித்து என் (purposeful education) பயனுளள கல்வியை நான் பயின்று வருகிறேன். 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம' (நெ. 278) வரப் பெற்றேன்.

தாஸன்,

ஸௌந்தரராஜன்.

சங்கரரும் வைணவமும்

முதல் அநுபந்தம் நிறைவு பெற்றது.

—O—

# சங்கரரும் வைணவமும்

## அனுபந்தம்-2

## 'சங்கரரும் ஷண்மதமும்' நூலும் நடுநிலையாளர் கடமையும்

சென்ற 24—5—71 அன்று மேலமாம்பலம் சர்மாவிடமிருந்து 'ஸ்ரீசங்கரரும் ஷண்மதமும்'' (முதல் பாகம்) என்னும் தலைப்புள்ள வரஹூர் சாஸ்திரியின் நூல் அச்சிடப்பெற்றுக் கிடைத்தது. அதில நாம் ஷண்மத ஸ்தாபன சர்ச்சையில (பக்கம் 105ல்) வெளியிட்டுள்ள அறிக்கையை வெளியிட்டிருக்கிறார். பதிலுக்குத் தாம் ஓர் அறிக்கையையும், அறைகூவலையும் வெளியிட்டு நம்மை அவற்றை நமது ஸுதர்சனத்தில் வெளியிடும்படி கேட்டிருக்கிறார். அப்படியே அவற்றைக் கீழே வெளியிட்டு, நூலைப் பெற்றபின் நாம் செய்ததை மேலே விவரிக்கிறோம்.

### சர்மாவின் அறிக்கை

"ஸ்ரீ சங்கரரும் ஷண்மதமும் (முதல் பாகம்)—திருச்சி வைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர் எஸ் கிருஷ்ணசாமி அய்யங்கார் எழுதிய ஆதி சங்கரர் ஷண்மதஸ்தாபகரா? என்ற கட்டுரையில் கண்ட விஷயங்களுக்கு மறுப்பும அத்வைதிகளைக் குறித்துச் சில கேள்விகள் என்ற தலைப்பில் கேட்கப்பட்ட கேள்விகளுக்குச் சுருக்கமான பதிலும் அடங்கியது. பாஷ்யபாவக்ஞ வரஹூர் கல்யாணஸுந்தர சாஸ்திரிகளால் எழுதப்பட்டது. இலவசவெளியீடு ஆங்கீரஸ எஸ். வேங்கடேச சர்மா, சிவபுராண ஞானபூஜகர், 19, டெலிபோஸ்ட் காலனி முதல் தெரு, மேலமாம்பலம, சென்னை-33. என்னும் விலாசத்தில் கிடைக்கும். தபாலில் பெற விரும்புகிறவர்கள் தபால் வகைக்கூலிக்காக 20 காசுகள் தபால்தலை அனுப்பினால் மறுதபாலில் அனுப்பப்படும்.

### சர்மாவின் அறைகூவல்

இரு சமூகத்தினரும் ஒருவர் நூலை மற்றொருவர் பார்க்க வேண்டுமென்பதற்காக நாம் பின்வரும் திட்டத்தைக் கொடுக்கிறோம

அதாவது—நாம் நம்முடைய நூல் சில பிரதிகளை ஐயங்காருக்கு அனுப்பிவைக்கிறோம். அவர் அதனைத் தமது நூல் பிரதிகளைப் பெற்றுக் கொண்ட சிலருக்கு அனுப்பிவைதது அவர்களது விலாசங்களை நமக்கு அனுப்பட்டும். அதேபோல அவரது நூல் சில பிரதிகளை நமக்கனுப்பினால் நம்முடைய நூல் அனுப்புவோர்களுக்கு அவைகளை அனுப்பிவைத்து அவாகளின் விலாசங்கள் ஐயங்காருககு தெரியப்படுத்

தப்படும். அவரவர்களுக்கு ஏற்படும் தபால் செலவை அவரவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும்.

இதைக்காட்டிலும் அதிகமாக என்ன நேர்மையை இவ்விஷயத்தில் நாம் காட்டமுடியும். இந்த அறைகூவலை ஏற்றுக்கொள்வாரேயானால் நமதறிக்கையைப் பிரசுரிககும இதழிலே இதனையும் பிரசுரித்தால உடனே நாம பிரதிகளை அனுபபிவைக்கிறோம்.

ஆங்கிரஸ எஸ். வேங்கடேசசர்மா,
பதிப்பாசிரியர்.

*இந்த 'சங்கரரும் ஷண்மதமும்' என்னும் நூலைப் பெற்ற அன்றே நாம சர்மாவின அறைகூவலைக் ஏறறுக் கொண்டு எழுதிய பதில பின்வருமாறு:—*

*ஆங்கிரஸ வேங்கடேச சர்மாவுக்கு எழுதியது:—*

*தங்கள் இலவச வெளியீடான "சங்கரரும் ஷண்மதமும்" (முதல் பாகம) புத்தகமும், அதில் நீர் எனக்கு விடுத்திருக்கும் அறைகூவலும் பார்வையிடப்பட்டது.* **உமது அறைகூவலை யான ஏற்றுக்கொள்ளுகிறேன்.** *எனது ஸுதர்சனம் மே இதழ் (விரோதிக்ருத் வைகாசி இதழ) ஏற்கனவே வெளியாகிவிட்டது. ஜூன் (ஆனி) இதழ் ஜூன் கடைசியில் வெளியாகும். அதில் உமது அறிக்கையையும் அறைகூவலையும் பிரசுரிக்கிறேன். நிற்க. இதுவரையில் எனது நூலை சுமார் 1000 பேர் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீ வைஷ்ணவ பூர்வாசார்யர்களை மனம் போனபடி தூஷிக்கும் பிதற்றல்கள் அடங்கிய உமது நூலை அவ்வாயிரம் பேரில சிலரோ பலரோ கண்ணால் காணவும் கூசுவார்கள். விஷயம் தெரிந்து கொள்வதற்காகப் பலர் அதைக் காணவும் விரும்பலாம். ஆகையால், யானுக உமது நூலைச் சிலருக்கு அனுப்புவதென்பது இயலாது. இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்காக — அடுத்த மாதத்தில் வெளிவரும் ஸுதர்சனத்தில்—உமது "சங்கரரும் ஷண்மதமும்" என்னும் புத்தகம் தேவைப்படுகிறவர்கள் நமக்கு 20 பை தபாற்கூலி அனுப்பினுல் நாமே அந்நூலைப்பெற்று அனுப்பி விடுகிறோம் என்று விளம்பரம் வெளியிடப்போகிறோம.* **அவ்விளம்பரத்தைக் கண்டபின்** *சுமார் ஒருமாத காலத்*

திற்குள் எவ்வளவு பேர் உமது நூலை விரும்பிக்கேட்கிறார்களோ அவ்வளவு பிரதிகளை அனுப்பச்சொல்லி உமக்கு ஜூலை' 71 கடைசிக்குள் கடிதம் எழுதுகிறேன. இதற்கிடையில உமது நூலில் அதிகபக்ஷம் உம்மால எவ்வளவு காபிகள் அனுப்பமுடியும் என்பதை மறுதபாலில் நீர் எனக்கு எழுதினால், "சர்மா இவ்வளவு காபிதான் தன்னால் அனுப்பமுடியும் என்று எழுதியிருககிறார். ஆகையால விரைவில் கேட்பர்கள் பெயர்கள் பதிவுசெய்துகொள்ளப்பட்டு அவர்களுக்கே காபிகள் அனுப்பப்படும். தாமதிப்பவர்களுககுக் காபி கிடைக்காது" என்றும் வெளியிட்டுவிடுவேன். ஆகையால், உடனடியாகத் தங்களால எவ்வளவு காபிகள் அனுப்பமுடியும் எனபதை எழுதவும். நீர் எவ்வளவு காபி அனுப்புகிறீரோ அதே அளவு (சங்கரரும் வைணவமும்) காபிகளை யானும் உமக்கு அனுப்ப ஸித்தமாயிருக்கிறேன் என்பதையும, உமது காபிகள் கிடைத்தபின் ஜூலை கடைசிக்குள் அவை அனுப்பப்பட்ட விலாசங்களின் பட்டியல உமக்கு அனுப்பப்படும் என்பதையும் அறியவும். அதேபோல் நீரும் என் காபிகள் கிடைதத பின் அவை அனுப்பப்பட்ட விலாசங்களின் பட்டியலை மிக விரைவில் எனக்கு அனுப்பவேண்டும்.

தங்களது நூலின் இரண்டாவது மூன்றாவது பாகங்கள் வெளிவந்தபின், "சங்கரரும் வைணவமும்" என்னும் எனது நூலின் இரண்டாவது மூன்றாவது பாகங்களில் அவை ஆராயப்பட்டு பதில் அளிக்கப்படும் என்பதையும, நடுநிலையாளர் பலரின் தீர்ப்புகளும் அந்த பாகங்களில் இடம்பெறும் என்பதையும் அறியவும்.

(ஒ-ம்) S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸுதர்சனம்' ஆசிரியர்.

இக்கடிதத்தைப் பெற்றுக்கொண்டு ஒரு மாதத்திற்கு மேல ஆகியும், இன்றளவும் சர்மா தம்மால் இத்தனை காபிகள் அனுபபமுடியும என்று நமக்கு எழுதவில்லை. தாம் விடுத்த அறைகூவலைத் தாமே நடத்திவைக்க இய

லாமல் தவிக்கிருர்போலும்! இதுவரையில் நமது அன்பர்கள் 1000 பேருக்குமேல நமது நூலைபெற்றிருக்கிருர்கள். சர்மாவின் நூல வெளிவந்து ஒரு மாதமாகியும் இதுவரையில் அதைப்பார்த்துவிட்டு நமது நூலைக கேட்டிருப்பவர் கோயம்புத்தூரிலுள்ள ஒருவரேயாவர். இதிலிருந்து சர்மா தனககு வேண்டிய சிலருககே தம நூலைப பிரசாரம செய்திருககிருர் என விளங்குகிறது. இககுறை தீரும்படியாக நமது வாசகர்கள் நூறுபேருவது விரைவில சர்மாவின விலாசத்திற்கு 20 பை தபால ஸ்டாமபு வைதது அனுபபி அவரது நூலைப்பெற்று, அவரது நூலையும் நமது நூலையும் நடுநிலைநின்று ஆராய்ந்து, வரஹஸா சாஸ்திரியைபபோல் பூர்வாசார்யதூ₃ஷணத்தில ஈடுபடாமல, தகக பரமாண யுக்திகளை காட்டி நியாயத்தை எடுத்துரைத்துக் கடிதம் எழுதி சர்மாவுககும் எமக்கும் அனுப்பவேணடும். இக்கடிதங்களில சிறந்தவற்றைப் பொறுக்கியெடுதது ஸுத₃ாசனத்திலும், 'சஙகரரும வைணவமும' இரணடாவது மூனருவது பாகங்கள் வெளிவரநோநதால அவற்றிலும் நடுநிலையாளர்களின் தீர்ப்புகள்' எனனும் தலைப்பில் வெளியிடுவோம.

ஷண்மதஸ்தாபந ப்ரசாரத்தை ஓர் இயககமாக நடத்த வேண்டுமென றும், அதற்காக ஒரு மாதப்பததிரிகையை நடத்தவும தயாராக இருக்கவேண்டும் என்றும் அத்வைதிகளுக்கு சர்மா தமது நூலின் கடைசியில் வேண்டுகோள் விடுக்கிருர். ஆதிசங்கரரின் அத்₃வைத மதத்தை ப்ரசாரம் செய்ய ஓர் பத்திரிகை ஆரம்பிக்கவேண்டும என்று சர்மா எழுதியிருந்தாராலுல் அதில் பொருள் உண்டு. அதை விடுத்து, ஆதிசங்கரர் கனவிலும் கருதாத ஷண்மதங்களை அவர் ஸ்தாபனம் செய்தார் என்னும் பொய்யைப்பரப்ப ஓர் பத்திரிகை நடத்தவேண்டுமாம! மகாநாடு நடததி ஸ்தாபிக்கமுடியாத பொய்யைப பததிரிகை நடத்தி ஸ்தாபித்து விடவேண்டும் என்று சர்மா விரும்புகிருர் என விளங்குகிறது. பததிரிகை நடததினுலும பொய் மெய்யாகி விடாது என று நடுநிலையாளர்கள் சர்மாவுககு உணர்த்துவார்களாக.

—●—

# ‘சங்கரரும் வைணவமும்’ பற்றி மத்₄யஸ்த₂ரான சாஸ்த்ரி ஒருவரின் உளங்கனிந்த பாராட்டு

—●—

*31—7—71 அன்று நாம் சிறிதும் எதிர்பாராதபடி நமக்கு முன்பின தெரியாதவராய், விழுப்புரத்திற்கு அருகி லுள்ள மேல் குமாரமங்கலத்தில் இருப்பவரான ப்₃ரஹ்மஸ்ரீ S. சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்களிடமிருந்து ஓர் கடிதம வந்தது. அதை அப்படியே கீழே அச்சிடுகிறோம்.*

30—7—71
குமாரமங்கலம்

மகா-ா-ா-ஸ்ரீ ஸ்ரீஉப₄யவேத₃ாந்த S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அவர்களுக்கு அநேக நமஸ்காரம். உப₄ய க்ஷேமம். தங்களுடைய. ‘சங்கரரும் வைணவமும்’ என்னும் நூலைப் பார்த்தேன். விஷயங்கள் அவ்வளவும் உண்மையே. நான் ஒரு அத்வைதி. ஆனால் சங்கராசாரியார் சிவனைப் பரம்பொருளாக நினைதது நூல்கள் எழுதினார் என்பது சற்றும் ஒவ்வாத ஸமாசாரம். ஏனென்றால், ப்₃ரஹ்மம் நிர்கு₃ண ஸ்வரூபம் என்பதே அவர் கொள்கை ‘அது ஸகு₃ணமாக பரிணமித்தால், நாராயணனே அது’ என்ற திடமான நம்பிக்கை சங்கராசார்யாருடைய கொள்கை. நிற்க.

தற்போது அத்₃வைதிகள். சிவனே ப்ரஹ்மம் என்று சொல்லுகிறார்களே என்றால். ஆழ்வாராதிகளும் விஷ்ணு வையே ப்ரஹ்மம் என்றார்கள். ஆதிசங்கராசார்யாரும் விஷ்ணு வையே ப்ரஹ்மம் என்றார். வைஷ்ணவர்களும் விஷ்ணுவையே தெய்வம் என்கிறார்கள். ஆனால் அப்பர், சுந்தர், மாணிக்க வாசகர் முதலியவர்கள் சிவனே ப்ரஹ்மம் என்று பாடினாகள். வேததைதை ஓதி சாஸ்திரங்களைப் பரிசீலிக்கும் அர்ஹதை யுள்ள பிராம்மணர்கள், அத்₃வைதியோ, விசிஷ்டாத₃ வைதியோ, த்₃வைதியோ நாராயணனையே தெய்வமாகக் கொண்டார்கள். அதனால் ராமானுஜர், மத்வர், இவர்களுக் குப் பின்வந்த பிராம்மணர்கள் விஷ்ணுவைப் பரதத்துவமாகப் பூஜித்ததால் அத்வைதமத ஸ்தாபகராயுள்ள சங்கராசார்ய மட₂ாதி₄பதிகளுக்கு, மவுஸ்—அதாவது புகழ், அல்லது

சோபையே இல்லாமல் போய்விட்டது. அதனால், ராமானுஜ மத்வ ஆசார்யருக்குப் பின்வந்த (அல்லது அந்த ஸம காலத்திய) சங்கராசார்யர்கள். சிவனைப் பரதத்வமாகச் செய்தால் அத்$_3$வைதிகளாவது. நாராயணனைப் பரதத்வம் என்பதை நீக்குவார்கள் என்று நினைத்து ப$_4$கீ$_3$ரத$_2$ப்ரயத்னம் செய்து. ப்ரஸ்த$_2$ானதரயம் விஷ்ணு ஸஹஸ்ரநாமம் முதலிய ப$_4$ாஷ்யங்களுக்கு, 'சிவபரமாகத்தான ஆதி$_3$சங்கரர் எழுதினார்' என்று வ்யாக்யானமும் செய்தார்கள். தவிர காஞ்சீ காம கோடி பீட$_2$ாதி$_4$பதி என்ற டைடல் உடைய ஆசார்யபீட$_2$ம் மடத்தை கும்ப$_4$கோணத்திற்கு மாற்றினார்கள். ஏனென்றால், இந்த பிராந்தியததில் அப்போது சைவ சமயம் கொஞ்சம் செழித்திருந்தது. இங்கே வந்து சிவனே பரதத்வம் எனறு ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸங்களைக்கொண்டு பிரசாரம் செய்தால், தங்கள் புகழ் ஓங்கும்; பிராம்மண ஸமூஹத்திற்கு மறுபடியும் நாம் செயலர்களாக ஆகலாம் எனறு நினைத்தார்கள். தவிர சைவ மடங்களாகிய, தர்மபுரம், திருவாடுதுறை, திருப்பனந்தாள் முதலிய மடாதிபதிகளும் சங்கராசார்ய பீடாதிபதிகளும் சேர்ந்து வைஷ்ணவம செழித்திருப்பது தாங்காமல், கட்டுப்பாடாக வேத$_3$ப$_3$ாஹ்யமான—'சிவன் ப்$_3$ரஹ்மம' எனனும் விஷயத்தைப் பிரசாரம் செய்தாகள். அதனால் தற்போது என்போன்ற வைதி$_3$க ஸநாதனிகள் திண்டாட வேண்டியிருக்கிறது. விஷயம் நீண்டு விட்டது. மன்னிக்கவும்.

தங்களால் எழுதப்பட்ட விஷ்ணுசித்தவிஜயம் 2-பாகங்கள், சாதிமத ஆராய்ச்சி, இந்த நூல்களைப் பார்க்கவேண்டுமென்று ஆசை. நான் ஓர் வைதிக ஏழை. அத்$_3$வைத ப்$_3$ராஹ்மணன். அதன் விலை பூராவும் கொடுக்க ஸாத்$_4$யமில்லை. ஆகையால் பாதிவிலையோ அல்லது, வாசித்துவிட்டு திருப்பி அனுப்புவதோ ஏதாவது ஒன்றின்மூலம் அதை வாசிக்கலாமென்று நினைக்கிறேன். தவிர 'சங்கரரும் வைணவமும்' என்னும் நூல் தற்காலம் கைவசம் இருக்கிறதா? இருந்தால் 50பை. அடுத்த தபாலில் அனுப்புகிறேன். தங்கள் மத்$_4$யஸ்த$_2$நடை எனக்கு ரொம்பவும பிடிக்கிறது. அதனால் இவ்வளவு தூரம் எழுதிவிட்டேன். குற்றம் குறை

கள் ஏதாவது இருந்தால் மன்னிக்கவும். இதற்கு பதில் எழுதுமபடி ரொம்பவும் பிரார்த்திக்கிறேன். வேணும் நமஸ்காரம்.

S. *சுப்பிரமணிய சாஸ்திரிகள்.*

*இக்கடிதத்தைப் பெற்றவுடன், நாம் விஷ்ணுசித்த விஜயம், சாதிமத ஆராய்ச்சி, ஸாத்விகவிஜயம் சங்கரரும் வைணவமும் முதலான பல நூல்களை சாஸ்திரிகளுக்கு அனுப்பி, இவற்றுக்கு யாதொரு விலையும அனுப்பவேண்டாம் என்றும, இவற்றை நல்ல அத்வைதிகளிடையே பிரசாரம் செய்வதொன்றே நமக்கு சாஸ்திரிகள் அளிக்கும் விலையாகவும், பரமாத்மாவுக்கும், ஆதிசங்கரருக்கும் செய்யும் கைங்கர்யமாகவும் அமையும் என்றும், அவரது கடிதத்தை ஸுதர்சனத்தில பிரசுரிகக அனுமதிக்கவேண்டும் என்றும் எழுதினோம். அதைக்கண்டபின் சாஸ்திரிகள் எழுதிய இரண்டாவது கடிதத்தையும் அடுத்து அச்சிடுகிறோம்.*

4—8—71
குமாரமங்கலம்

ஸ்ரீ உ. வே. ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமிகளுக்கு அநேக நமஸ்காரம். உபயக்ஷேமம். என் லெட்டர் கணடவுடன் இவ்வளவு சிரத்தையோடு உடனே 10 புஸ்தகங்களைப் பார்சல்செய்து அனுப்பியது. ஸ்ரீய:பதியாகிய நாராயணன், தங்கள் ஹ்ருதயத்தில் ஸதா வாஸம் செய்கிறார். ஸநாதந வைதிக மதத்திற்கு, இந்த நாளில் இவ்வளவு முயற்சியோடு பெரும பணம் செலவு செய்து தொண்டுசெய்பவர் தாங்கள்தான் என்பதை நன்றாய்த தெரிந்துகொண்டேன். இது முகஸ்துதி அல்ல. நான் அத்வைதி—ஸ்மார்த்தன். தாங்கள் விசிஷ்டாத்வைத – ஐயங்கார் ஸ்வாமிகள். என்னைத் தாங்கள் பார்த்ததுகூட கிடையாது. அப்படி இருக்கும்போது எவ்வளவு—ஸமநோக்கு வைதிக ஸ்ரத்தையிருந்ததால் இவ்வளவு புஸ்தகரதநங்களை அனுபபி இருககிறீர்கள் என்று நினைக்கும்போது என் மனம புளகாஙகிதமடைகிறது. தங்கள் குறிக்கோள் என்னஎன்று பார்ததால், வேதம் முதல்பிரமாணம.

அடுத்தது ஸ்ம்ருதி, அப்புறந்தான் மற்ற இதிஹாஸபுராண, ஆழ்வாராதி வசந ப்ரமாணங்கள் என்று கொள்கைவைத்து நடுநிலைமையில் ஆராய்வதே என விளங்குகிறது. இது தற்கால வைஷ்ணவர்களுடைய ஸமப்ரதாயமில்லை. அத்வைதிகளுக்குத்தான் கேட்கவேவேண்டாம். காளித₃ாஸாதி₃காவ்ய கர்த்தாக்கள் சொல்தான் அவர்களுக்கு வேதம். இப்படி இருக்கையில் நடுநிலைநின்று ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸங்களை ஆத₄ாரமாக வைதது பரதத்வநிர்ணயம செய்யககூடியவர்கள் மிகவும் அரிதாகக் காணப்படுவார்கள். எனக்கும் வயது 60 ஆகிறது. எத்தனையோ பிரஸங்கங்கள் கேட்டிருக்கிறோம். மதாவேசமோ அல்லது த்₃ரவ்ய ஸ்துதியாவேசமோ இல்லாமல் நடுநிலை பிரஸங்கம கேட்பது மிக அரிது. தங்கள் ஆராய்ச்சியில் ஸமநோக்கு இருப்பது என்போன்ற அத்வைதிகளுக்குப் பரமஸந்தோஷம். இங்கு தங்கள் 'சங்கரரும் வைணவமும்' என்ற நூலைச் சில பேர்கள் பார்த்தார்கள். அவர்களும் அத்₃வைதிகளே. அவர்கள் அதைப்பார்த்து ரொம்பவும் ஸந்தோஷமடைந்தார்கள். கூடியவரையில் தங்கள் புஸ்தங்களை எலலோருக்கும் கொடுதது வாசிக்கச்செய்து, ஸர்வேச்வரனிடம் அவர்கள் அன்புவைக்க முயற்சிக்கிறேன். தங்கள் வைஷ்ணவ ஸுதர்சனம் சந்தாதாரராக விரும்புகிறேன். இன்னும் சிலநாளில் சந்தாதுகை ரூ. 5 அனுப்புகிறேன். முநதி நான் எழுதின லெட்டரில் உள்ள விஷயங்களைப் பிரசுரிககத் தங்கள் திருஉள்ளம் இருந்தால் எனக்குப் பரமஸந்தோஷம்; தாராளமாகப் பிரசுரிக்கலாம். ஸர்வேஶ்வர கிருபையால் தாங்களும் தங்கள் குடும்பமும் சௌக்யத்தை அடையவேண்டுமெனறு அவனையே பிரார்த்திக்கிறேன்.

இதில் எந்தக் குற்றங்குறைகள் இருந்தாலும் மன்னிக்கவும். பதில் எழுதும்படி கோருகிறேன். நமஸ்தே.

**S. சுப்பிரமணிய சாஸ்திரிகள்.**

*இக்கடிதங்களைப் பார்த்தபின்பாவது ப்₃ரஹ்மஶ்ரீ வரஹூர் சாஸ்திரிக்கும், ஆங்கீரஸ வேங்கடேச சர்மாவுக்கும் கண் திறக்கும்படி எம்பெருமான் அருள்புரியவேண்டும்.*

---

## ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

(ஸுதர்சன பத்ரிகையில் வெளிவந்த எளியநடை நூல்கள்)

| | | |
|---|---|---|
| 1. திருப்பாவை வ்யாக்யானம் | 4-00 | -55 |
| 2. (போதாயந) ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0-35 | -10 |
| 3. (போதாயந) உபாகர்மவிதி | 0-35 | -10 |
| 4. புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 5. நாராயண ஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 6. ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-00 | -45 |
| 7. பூ நீளா விஷ்ணு ஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -50 |
| 8. தேஹளீச ஸுப்ரபாதம் | 0-25 | -10 |
| 9. ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-00 | -30 |
| 10. விசிஷ்டாத்வைதவிஜயம் (முதல் பாகம்) | 10-00 | 1-50 |
| ஷை இரண்டாம் பாகம் | 5-00 | -75 |
| 11. சாதிமத ஆராய்ச்சி | 2-00 | -25 |
| 12. ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹஸ்தவம் | 0-37 | -15 |
| 13. ஸந்மதகாரிகாவளீ | 1-75 | -45 |
| 14. விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் | 5-00 | 1-00 |
| ஷை இரண்டாம் பாகம் | 7-00 | 1-50 |
| 15. கம்பனின் சமயம் முதல் பாகம் | 1-00 | -30 |
| 16. சாரீரககாரிகாவளீ (முதல் பாகம்) | 3-00 | -60 |
| 17. பெரியாழ்வார் ப்ரபாவம் | 4-00 | -75 |
| 18. ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் (தபால் உள்பட) 50பை | | |
| 19. ஸந்த்யாவந்தநபாஷ்யம் | 3-00 | -70 |
| 20. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -35 |
| 21. மகரநெடுங்குழைக்காதர் பாமாலையந்தாதி | 1-50 | -40 |
| 22. ஸ்ரீகேசவமணிமாலை | 0-75 | -25 |
| 23. மாமுனிகள் அறுநூறாவது ஆண்டு மலர் | 1-50 | -40 |
| 24. சங்கரரும் வைணவமும் (தபால் வகைக்கூலி) 50பை | | |
| 25. ஸித்தோபாய விஜயம் | 3-00 | -50 |
| 26. திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி (மூலம் மட்டும்) | 0-20 | -10 |

---

ஸ்ரீ:

## ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

சிறந்த ஸ்ரீவைஷ்ணவ மாதப்பத்திரிகை

ஆசிரியர்:—

**ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்**, அட்வகேட்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-7.

**வருடச் சந்தா ரூ. 5-00**

**ஸர்வஜித் மார்கழி 28உ (12-1-1948) முதல் வெளிவருகிறது.**